கமல வாசகம்.

— விசுவநாதன் (ரா)

# கமல வாசகம்



## முதற் புத்தகம்




ஆசிரியர்

**வித்துவான் ரா. விசுவநாதன்** எம்.ஏ., பி.ஓ.எல்.

(முன்பு) சென்னை, பிரஸிடென்ஸி காலேஜ் தமிழ்ப் பேராசிரியர்

&

**பண்டிதர் செ. முத்துரத்ன முதலியார்,**

(முன்பு) திருவாரூர், அரசியல் உயர்தரக் கலாசாலைத்
தலைமைத் தமிழ்ப் பண்டிதர்.



**விவேகானந்தா பதிப்பகம்**

விஜயபுரம் :: திருவாரூர் ஜங்.

பதிப்புரிமை] 1955 [விலை 4 அணா

முதற் பதிப்பு 1951.
இரண்டாம் பதிப்பு 1954.
மூன்றாம் பதிப்பு 1955.
நான்காம் பதிப்பு 1955.
ஐந்தாம் பதிப்பு ஜூலை 1955.

*Approved by the Text Book Committee, Madras Vide Fort. St., George Gazatte Part I-B Page 23 Dated 19th May, 1954.*

Printed at the Rajan Electric Press, Madras-1.

# முன்னுரை

உலகத்தில் காணப்பெறும் தோற்றங் குழந்தைகளைவிட விந்தையானது வேறொன்றும் அவர்களைக் கையாள்வதில் எவ்வளவு நுட்ப ஆராய்ச்சியும், பொறுமையும் முயற்சியும் இருப்பினு அவை போதாதனவாகவே ஆகலாம். ஆகவே குழந்தைகளுக்குக் கற்பிக்கவும், அவர்களுக்கென புத்தகம் எழுதவும் முன்வருகின்றவரின் அருமைப் பாட்டை எவரும் உணர்வர்.

அரசியலார் வெளியிட்டுள்ள பாடத்திட்டத்தை யொட்டி இப்புத்தகம் எழுதப்பெற்றுள்ளது. பிள்ளை களுக்கு முன்பே தெரிந்துள்ள பொருள்களைப் பற்றிப் பேசி, இனிய கதைகளாலும், பாடல்களாலும் அவர் களுடைய ஆவலை எழுப்பி, நேர்மையான வாக்கிய அமைதி, உச்சரிப்பு இவற்றைப் பயிற்றுவித்து எளிய முறையில் அவர்களுக்குப் படிக்கவும் எழுதவும் கற் பிக்கவேண்டுமென்பதும், அவ்வாண்டில் ஏறக்குறைய 300 சொற்களை அவர்கள் கற்கவேண்டுமென்பதும், மிகச் சிறிய வாக்கியங்களையும் அவர்கள் படிக்கவும் எழுதவும் அறிய வேண்டுமென்பதும் அப்பாடத் திட்டத்தின் கட்டளைகள்.

தமிழெழுத்துக்களின் முறை மிகச் சிக்கனமானது; நேர்மையானது; அறிவியல் முறைக்கு முற்றிலும் ஒத் தெனினும், முதல் வகுப்புக் குழந்தைகள்

1ளின் முறையை அறிந்து கொள்ளக்கூடிய 1தனியானது. இப்புத்தகம் நீண்ட அனுபவத் மைந்ததொன்ருதலால் உலகம் இதனை ஏற்றுப் பெறும் என்று நம்புகிருேம்.

இறைவன் அருள் பாலிப்பதாகுக.

—5—52 வெளியிடுவோர்.



அம்மா அப்பா

பாப்பா

| அம்மா | அப்பா | பாப்பா |
|---|---|---|

| அ | ப | ம |
|---|---|---|



படம்



மரம்



ரம்பம்

படம் மரம் ரம்பம்

| ட | ப | ம | ர |
|---|---|---|---|



கடல் கப்பல்





சணல் மடல்

| க | ச | ண | ல |
|---|---|---|---|



தம்பட்டம்



நகம்

| | |
|---|---|
| படம் | பக்கம் |
| மரம் | மச்சம் |
| கடல் | கப்பல் |
| சணல் | சட்டம் |
| நகம் | நட்டம் |
| மடல் | மட்டம் |

தம்பட்டம்

பம்பரம்

சப்பரம்



பழம்



வயல்

# ழ ய

படபட
மடமட
வழவழ
கரகர

தகப்பன்
பம்பரம்
மண்டபம்
மயக்கம்

| பழம் | வயல் |
|---|---|

| க | ச | ட | த | ப |
|---|---|---|---|---|

| ண | [illegible] | ம | ய | ர | ல | வ | ழ |
|---|---|---|---|---|---|---|---|



ஆலமரம்



மாமரம்



பாகல்காய்



மாங்காய்



பலாப்பழம்



மாம்பழம்

| அ. ஆ. | ப. பா. | ம. மா. |
|---|---|---|



வாணம்



மான்

## ண ன

| | | |
|---|---|---|
| வாணம் | வானம் | மான் |
| காலம் | பாலம் | வாரம் |
| சாதம் | மாதம் | யாகம் |
| தாலம் | ராமன் | அண்ணா |
| நாகம் | லாடம் | ஆரம் |

## ஆ

கா சா டா தா நா பா மா

யா ரா லா வா ழா

| ணா | னா |
|---|---|



இஞ்சி



மஞ்சள்



கிளி



மயில்



மணி



பல்லி





ஈ

கீரி

ஈ

இஞ்சி கீரி தண்ணீர்

ஈயம் தீனி பன்னீர்

ஈரம் மீன் கண்ணீர்

இ ஈ

இலவ மரம்

ஈச்ச மரம்

ஈயச் சட்டி

சீயக்காய்





# பங்கா பங்களா

## ங் க ண் ட ம் ப

## ந் த

| | |
|---|---|
| பங்கா | பங்களா |
| இஞ்சி | மஞ்சள் |
| வண்டி | வண்டல் |
| பந்தி | பந்தல் |
| கம்பி | கம்பம் |

அவன் யார்? அவன் கந்தன்.
அவள் யார்? அவள் வள்ளி.
இவன் யார்? இவன் அக்பர்.
இவள் யார்? இவள் லில்லி.

# இது என்ன?




எழுது.

# படி

## படம் காட்டு

| | | |
|---|---|---|
| ஈ | கிரி | பாலம் |
| காகம் | பணம் | ஆடு |
| மான் | மீன் | மணி |
| அணில் | கிளி | இஞ்சி |

| அ | ஆ | இ | ஈ |
|---|---|---|---|

# படி

| | | | |
|---|---|---|---|
| அரம் | ஆரம் | இஞ்சி | ஈ |
| மரம் | காரம் | கஞ்சி | சீ |

## அ ஆ இ ஈ

| | |
|---|---|
| அண்ணன் | ஆண்டவன் |
| கப்பல் | இராகவன் |
| சங்கிலி | ஈச்சமரம் |
| டமாரம் | தாம்பரம் |
| தகரம் | மாயவரம் |
| நல்லன் | சிதம்பரம் |
| பண்டம் | சீகாழி |
| மஞ்சள் | திருத்தணி |
| வண்டல் | நீலகிரி |





உரல் ஊதல்





குடம் பூ

| உ | ஊ |
|---|---|
| மர உரல் | ஊறுகாய் |
| மண் குடம் | தாழம் பூ |
| புடலங்காய் | மூக்குத்தி |
| விசயபுரம் | திருவாரூர் |



# குருவிக் கூடு

குருவிக் குஞ்சு பார்.
குஞ்சு சிறியது.
அது பறக்குமா ?
தாய்க் குருவி இருக்கிறதா ?
குருவி புழு தின்னும்.

## குருவி.

ஊர்க் குருவி தவிட்டுக் குருவி
சிட்டுக் குருவி மஞ்சள் குருவி



மரம்



முறம்

| ர | ற |
|---|---|
| குரங்கு | கறண்டி |
| சிரங்கு | பறங்கி |
| சுரண்டு | முற்றம் |
| மருந்து | குற்றம் |
| வருந்து | குன்றம் |

குருவி பறக்கும்
சிறகு அழகானது.

| ர ற | ல ழ ள | ந ன |
|---|---|---|



எலி



ஏணி



சேவல்



தேர்

எலி திருடுகிறது.
ஏணியால் ஏறலாம்.
சேவல் கூவும்.
தேர் நிற்கிறது,

| அ | ஆ | இ | ஈ | உ | ஊ |
|---|---|---|---|---|---|
| | | எ | ஏ | | |






## ஐந்து விரல் பணப்பை

உன் கை எங்கே ?

என் பை பார்.

பனை மரம் உயரம்.

அன்னை சொல் கேள்.

## ஐ

## ணை லை னை

## கை தை பை மை





ஒட்டகம் ஓணான்



ஔவை

ஒட்டகம் கழுத்து நீளம்.

ஓணான் தலை தூக்கும்.

ஔவை பெரிய கிழவி.

அ ஆ இ ஈ

உ ஊ எ ஏ

ஐ ஒ ஓ

ஔ

# என்ன பாடம்?



பெயர்களை எழுது.

# படம் காட்டு

அணில் கொட்டை தின்னும்.

ஆடு புல் மேயும்.

இலை பச்சை நிறம்.

ஈச்ச மரம் உயரமானது.

உலக்கையால் நெல் குத்தலாம்.

ஊஞ்சல் ஆடுவதைப் பார்.

எட்டுக்கால் பூச்சி கூடு கட்டும்.

ஏற்றம் தண்ணீர் இறைக்கும்.

ஐந்து பேர் நிற்கிறார்கள்.

ஒட்டகம் சுமை சுமக்கும்.

ஓடம் நீரில் மிதக்கும்.

ஔவை மெல்ல நடக்கிறாள்.



நாய்



அன்னம்

நாய் வீடு காக்கும்.
அன்னம் நீரில் நீந்தும்.
நாகம் படம் எடுக்கும்.
யானை பெரிய விலங்கு.
பந்து உருண்டை உருவம்.
கன்று பால் குடிக்கும்.

| | | |
|---|---|---|
| நான் | என் | எண் |
| நாம் | கூன் | கண் |
| நாய் | தேன் | தண் |
| நார் | பேன் | மண் |

| ந | ண | ன |
|---|---|---|

# படி

| | | |
|---|---|---|
| கண் | சணல் | தம்பி |
| கால் | சாறு | தாடி |
| கிளி | சிமிழ் | திணறு |
| கீரி | சீவல் | தீனி |
| குடை | சுவர் | துணி |
| கூன் | சூது | தூவல் |
| கெடு | செல் | தெளி |
| கேணி | சேறு | தேள் |
| கை | சைவன் | தை |
| கொசு | சொல் | தொகை |
| கோது | சோறு | தோகை |
| கௌவு | சௌக்கியம் | |

# படி

| | | |
|---|---|---|
| நகம் | படம் | மடம் |
| நான் | பாடம் | மாடம் |
| நிலம் | பிணம் | மிதி |
| நீலம் | பீறல் | மீன் |
| நுனி | புடல் | முன் |
| நூல் | பூமி | மூக்கு |
| நெல் | பெட்டி | மெல் |
| நேரம் | பேன் | மேல் |
| நைந்து | பை | மை |
| நொண்டி | பொம்மை | மொட்டை |
| நோய் | போ | மோது |
| | பௌர்ணமி | மௌனம் |

க ங ச ஞ ட ண

த ந ப ம ய ர ல

வ ழ ள ற ன

---

க ச ட த ப ற

ங ஞ ண ந ம ன

ய ர ல வ ழ ள

---

# புருக்களை எண்ணிப் பார்



ஒன்று

இரண்டு

மூன்று

நான்கு

ஐந்து

ஆறு

ஏழு

எட்டு

ஒன்பது

பத்து



# பசு

பசுங் கன்று

நாய்க் குட்டி

எலிக் குஞ்சு

கிளிப் பிள்ளை

வாழைக் கன்று

கோழிக் குஞ்சு

சிங்கக் குட்டி

கீரிப் பிள்ளை

பசுவுக்குக் கொம்புகள் எத்தனை?

கன்று என்ன செய்கிறது?

உனக்குப் பசுவின்பால்பிடிக்குமா?

# விலங்கு-பறவை

## பெயர் சொல்லு.



என்ன செய்யும் ?

| | | |
|---|---|---|
| பசு | பால் | கொடுக்கும். |
| ஆடு | புல் | மேயும். |
| குதிரை | வண்டி | இழுக்கும். |
| நாய் | வீடு | காக்கும். |
| மான் | துள்ளி | ஓடும். |
| பூனை | எலி | பிடிக்கும். |

| | | |
|---|---|---|
| காகம் | காலையில் | கரையும். |
| சேவல் | விடியலில் | கூவும். |
| வாத்து | குளத்தில் | நீந்தும். |
| மயில் | அழகாய் | ஆடும். |
| கிளி | கொஞ்சிப் | பேசும். |
| கொக்கு | மீன் | பிடிக்கும். |

| | | |
|---|---|---|
| விலங்கு | குட்டி | போடும். |
| பறவை | முட்டை | இடும். |



மாடுகள் என்ன செய்கின்றன?
மாடு மேய்ப்பவர் யார்?
இடையர் கையில் இருப்பது
என்ன?
அவர் முதுகில் இருப்பது யாது?
வீடுகள் எங்கே இருக்கின்றன?

என்ன? யாது? எங்கே? யார்?

| எருது | மாடு | பசு |
|---|---|---|

ஊருக்குப் போகலாமா? எதனில் ஏறிப் போகலாம்?

மாட்டு வண்டி

சைகிள்

குதிரை வண்டி

மோட் டார்

ரேக்ளா வண்டி

ரயில்

பல்லக்கு

டிராம்

ஓடம்

கப்பல்

ஆகாய விமானம்




எது உனக்குப் பிடிக்கும்?

# கதை சொல்



குரங்கு என்ன செய்கிறது?

1. வால் போயிற்று ;
கத்தி வந்தது ;
டொண், டொண், டொண்.

2. கத்தி போயிற்று;
சுள்ளி வந்தது ;
டொண், டொண், டொண்.

3. சுள்ளி போயிற்று ;
தோசை வந்தது;
டொண், டொண், டொண்.

4. தோசை போயிற்று;
தம்பட்டம் வந்தது;
டொண், டொண், டொண்.

5. டொண், டொண், டொண்,
டொணக்கு, டொணக்கு, டொண்.
டொண், டொண், டொண்.



# என் வீடு

நான் வீடு கட்டுகிறேன் பார்.
என் வீட்டுக்குத் திண்ணை உண்டு.
வாசற்படி உண்டு.
கூடம் உண்டு.
அறைகள் உண்டு.
தூண் உண்டு.
சன்னல் உண்டு.

| கூரை வீடு | மாடி வீடு | பங்களா |
|---|---|---|



நிலா! நிலா! ஓடி வா!
நில்லாமலே ஓடி வா!

மலை மேலே ஏறி வா!
மல்லிகைப் பூக் கொண்டுவா.

| பௌர்ணமி |
| --- |
| சந்திரன் |

| அமாவாசை |
| --- |
| சூரியன் |



# எங்கள் தோட்டம்

| மரம் | செடி | கொடி |
|---|---|---|
| மா | வெண்டை | அவரை |
| பலா | கொத்தவரை | புடல் |
| அரசு | தக்காளி | திராட்சை |
| ஆல் | சுண்டை | முல்லை |
| கொய்யா | மிளகாய் | பீர்க்கு |

# பாட்டுப் பாடு

தம்புரா





தாளம்

பிடில்





கடம்

வீணை





மத்தளம்

நாகசுரம்





தவுல்

புல்லாங் குழல்





கஞ்சிரா



# என் ஊர்

என் ஊர் சிறியது.

ஆனால், அது அழகானது.

கோவில், குளம், தெரு எல்லாம்
அங்கே உண்டு.

தெருவில் மக்கள் நடக்கிறார்கள்.

| | | | |
|---|---|---|---|
| தெரு | வீடு | கோவில் | பள்ளிக்கூடம் |
| சந்து | கடை | குளம் | சாவடி |
| ஆறு | கிணறு | திடல் | சாலை |
| வயல் | குட்டை | படுகை | சந்தை |

# நிறம்

காகம்  கருமை

கிளி  பச்சை

கொக்கு  வெள்ளை

எலுமிச்சை  மஞ்சள்

கடல்  நீலம்

பால் என்ன நிறம்?

மை என்ன நிறம் ?



# தேர் விழா

இன்று தேர் விழா
தேர் வீதியில் வருகிறது.
தேரில் கடவுள் இருக்கிறார்.
கொம்பு ஊதுகிறது.
தம்பட்டம் கொட்டுகிறது.
எங்கும் கூட்டம்.
எங்கும் கொண்டாட்டம்,
வடம் பிடிக்க வாருங்கள்.

| தேர் விழா | முழுக்கு விழா |
|---|---|







கூஜா புஷ்பம் புஸ்தகம்







மேஜை லக்ஷ்மி ஹாரம்

| ஜ | ஷ | ஸ | ஹ | க்ஷ |
|---|---|---|---|---|

பங்கஜம் பக்ஷம் ரோஜாப் புஷ்பம்

மஸ்தான் ஹரன் விஜயலக்ஷ்மி

# நல்ல சொல்

அன்ருடம் குளி.

ஆடையைத் துவை.

இனிமையாய்ப் பேசு.

ஈயை வெருட்டு.

உண்மை உரை

ஊருடன் கூடு.

எண்ணிப் பேசு.

ஏழையைப் பார்.

ஐயம் இடு.

ஒருவனைத் தொழு.

ஓடி விளையாடு.

ஔவையைப் பணி.

# வினா - விடை



| | |
|---|---|
| என்ன செய்தாய் ? | உண்டேன். |
| என்ன உண்டாய் ? | லட்டு. |
| என்ன லட்டு ? | சர்க்கரை லட்டு. |
| என்ன சர்க்கரை ? | வெல்லச் சர்க்கரை, |
| என்ன வெல்லம் ? | பனை வெல்லம். |
| என்ன பனை ? | தாளிப் பனை, |
| என்ன தாளி ? | விருந்தாளி, |
| என்ன விருந்து ? | மண விருந்து. |
| என்ன மணம் ? | பூ மணம், |
| என்ன பூ ? | மாம்பூ. |
| என்ன மா ? | அம்மா ; சும்மா. |



# தைப் பொங்கல்



பொங்கலோ பொங்கல் !
ஊருக்குப் பொங்கல் !
உலகுக்குப் பொங்கல் !
மாட்டுக்குப் பொங்கல் !
மக்களுக்குப் பொங்கல் !
கன்றுக்குப் பொங்கல் !
காளைக்குப் பொங்கல் !
இன்றைக்குப் பொங்கல் !
என்றைக்கும் பொங்கல் !
பொங்கலோ பொங்கல் !!

# கமல் வாசகம்

## இரண்டாம் புத்தகம்



ஆசிரியர்

**வித்துவான் ரா. விசுவநாதன்** எம்.ஏ., பி.ஓ.எல்.,
(முன்பு) சென்னை, பிரஸிடென்ஸி காலேஜ் தமிழ்ப் பேராசிரியர்

&

**பண்டிதர் செ. முத்துரத்ன முதலியார்,**
(முன்பு) திருவாரூர், அரசியல் உயர்தரக் கலாசாலைத்
தலைமைத் தமிழ்ப் பண்டிதர்.

**விவேகானந்தா பதிப்பகம்**

விஜயபுரம் : : திருவாரூர் ஜங்.

பதிப்புரிமை] 1955 [விலை 6 அணா

# முகவுரை

இன்றைய மாணவர் நாளை நாட்டு மக்கள். நம் நாடு சுய உரிமை பெற்ற நாடு. நம் மக்களின் அறிவு வளத்திலும் ஆற்றல் வலிமையிலும் ஒழுக்கப் பெருமையிலுமே நம் நாட்டின் வருங்காலச் சிறப்பு அமையக் கிடக்கின்றது. மொழி ஒரு சமூகக் கருவி. அதன் வழியாகவே சமூக வளர்ச்சியும் ஆகவேண்டும். ஆகவே இன்றைய சூழ் நிலையில் மொழிப் பயிற்சி ஒரு தனி இடம் பெற்று விளங்குகிறது.

அரசியலார் வகுத்துள்ள பாடத் திட்டமும், ஆன்றோர்களின் அனுபவ முறைகளும் மொழிப் பயிற்சியின் வழியாகக் கல்வியின் குறிக்கோள்கள் எவ்வாறு பெறப்படலாம் என்று காட்டுகின்றன. அடிப்படைக் கல்வித் திட்டமும் இக் குறிக்கோள்களையே வற்புறுத்துகின்றன. மொழியை மொழியறிவுக்காகப் படிப்பிப்பதோடு அதனை வாழ்க்கையோடும் ஒட்டிப் பயிற்றுவிக்க வேண்டு மென்பது மேலே சுட்டிய எல்லாத் திட்டங்களின் கொள்கையாகும்.

இக் கருத்துக்களை உட்கொண்டு சுருங்கிய முறையில் நிரம்பிய பயனைப் பெற உதவவேண்டுமென்று இப் புத்தகம் எழுதப் பெற்றுள்ளது. பிள்ளைகளுடைய அறிவுக் கொத்த பாடங்களே இங்குத் தரப் பெற்றுள்ளன. கண்டன கொண்டு காணுதனவற்றை ஊகிக்க வழிகள் கையாளப் பட்டுள்ளன. பாடங்கள் பெரும்பாலும் வாய்ப் பாடங்களாகவும் மௌன பாடங்களாகவும் பிள்ளைகள் இன்பத்துடன் தாமே படித்தறியத் தக்கவைகளாகவும் பொறுக்கிச் சேர்க்கப் பெற்

றுள்ளன. பேச்சுப் பழக்கமும் உய்த்தறியும் திறனும், குறித்து சொல்லும், ஆற்றலும் தம்மைச் சூழ்ந்துள்ள வற்றை உற்று நோக்கும் பழக்கமும், வளர உதவும் வண்ணம் பாடங்களும் பற்யிசிகளும் அமைக்கப் பெற்றுள்ளன. நாட்டுப்புறத்தின் இன்றியமையாமையும் சிறப்பும் மாணவர்களின் கருத்தில் ஊன்ற முறைகள் கையாளப் பெற்றுள்ளன.

இவ் வகுப்பில் வாய்ப் பேச்சின் தெளிவும் நேர்மையுமே அதிகமாகக் கவனிக்கப் பெற வேண்டியவை. கையெழுத்தின் அழகைக்காட்டிலும் தெளிவே வற்புறுத்தத் தக்கது. கட்டுரையாக்கம் குறித்த பொருளைக் குறித்த முறையில் வைத்துப் பேசச் செய்தல் போதுமானது. இலக்கணம் என்பது அனுபவத்தில் வேண்டியதே யன்றி இலக்கண பாடமாக அமைத்தல் ஆகாது. உச்சரிப்பு தெளிவாய் அமைய வேண்டும். இக் குறிக்கோள்களைக் கொண்டு பயிற்சிகள் கையாளப் படவேண்டுமே யன்றிப் பிள்ளைகள் வினைக்களுக் கெல்லாம் விடை எழுதப் பழக வேண்டுமென்பது இவ் வகுப்பிற் கூடாது. ஆகவே பாடங்களும் பயிற்சிகளும் மாணவர்களின் பேச்சு வன்மையைத் தூண்டவே அமைக்கப் பெற்றுள்ளன.

இறைவன் அருளால் இக் குறிக்கோள்கள் நிறைவேற இப்புத்தகம் சிறந்த கருவியாகப் பயன்பட வேண்டுமென்று அவன் திருவருளை வணங்குகின்றோம்.

பிரசுரகர்த்தர்.

# பொருளடக்கம்

# 1. பெயர்கள்



உன் பெயர் என்ன ?

என் பெயர்..................................

என் பெயர் என்ன ?

உங்கள் பெயர் ?..........................

அவன் பெயர் என்ன ?

அவன் பெயர்.............................

அவள் பெயர் என்ன ?

அவள் பெயர்.............................

உன் தந்தையின் பெயர் யாது ?

என் தந்தையின் பெயர்........................

உன் தாயாரின் பெயர் யாது ?

என் தாயாரின் பெயர்........................

இந்த ஊரின் பெயர் யாது ?

இந்த ஊரின் பெயர்........................

**பயிற்சி**

**1. படி**

| | | |
|---|---|---|
| ஆறுமுகம் | மதுரை | வள்ளி |
| இஸ்மாயில் | திருப்பதி | சுந்தரி |
| ஜான் | ஸ்ரீரங்கம் | ஜானகி |

**2. எழுது**

வகுப்பிலுள்ள பிள்ளைகளின் பெயர்களை எழுது.

# 2. என் ஊர்



உன் ஊரின் பெயர் என்ன ?

அதில் எத்தனை தெருக்கள்

இருக்கின்றன ?

நீ எந்தத் தெருவில் இருக்கிறாய் ?

குளம் எங்கே இருக்கிறது ?

கோவில் எங்கே இருக்கிறது ?

உன் ஊரில் ஆறு உண்டா ?

நீ மலை பார்த்திருக்கிறாயா ?

உன் மாமன் ஊர் யாது ?

உன் அத்தையின் ஊர் யாது ?

## பயிற்சி

### 1. படி

| | | |
|---|---|---|
| திருவாரூர் | புதுக்கோட்டை | திருச்சிராப்பள்ளி |
| விஜயபுரம் | வாணியம்பாடி | நாகப்பட்டினம் |
| மதுரை | திருப்பதி | தலைச்சேரி |

### 2. எழுது

உன் ஊரைச் சுற்றியுள்ள வேறு ஊர்களின் பெயர்களை எழுது.

# 3. என்ன ?



இது என்ன ?

இது பசு.



இவன் யார் ?

இவன்
பாம்பாட்டி.

இவள் என்ன
செய்கிருள்?



இவள் ராட்டினம்
சுற்றுகிருள்.



கன்று என்ன
செய்கிறது?

கன்று பால்
குடிக்கிறது.

ஆடுகள் என்ன செய்கின்றன?



ஆடுகள் புல் மேய்கின்றன.

குடியானவர்கள் என்ன



செய்கிறார்கள்?

அவர்கள் கதிர் அறுக்கிறார்கள்

## பயிற்சி

### 1. விடை சொல்

(1) எது பால் குடிக்கிறது?
(2) ஆடுகள் என்ன செய்கின்றன?
(3) பாம்பாட்டி என்ன செய்கிறான்?
(4) குடியானவர்கள் என்ன செய்கிறார்கள்?
(5) நீ என்ன செய்கிறாய்?
(6) நான் என்ன செய்கிறேன்?

### 2. எழுது

| | | | | |
|---|---|---|---|---|
| வா | எடு | திற | உண் | தூங்கு |
| போ | கொடு | மூடு | தின் | எழு |
| இரு | விடு | வை | பார் | ஓடு |
| நட | சுடு | படி | பேசு | நில் |

# 4. நாட்கள்

| ஆகஸ்டு 1951 கர ஆண்டு ஆடி - ஆவணி | | | | | |
|---|---|---|---|---|---|
| ஞாயிறு | | 5 20 | 12 27 | 19 3 | 26 10 |
| திங்கள் | ★ | 6 21 | 13 28 | 20 4 | 27 11 |
| செவ்வாய் | ★ | 7 22 | 14 29 | 21 5 | 28 12 |
| புதன் | 1 16 | 8 23 | சுயாட்சிநாள் 15 30 | 22 6 | 29 13 |
| வியாழன் | ● 2 17 | 9 24 | ○ 16 31 | 23 7 | 30 14 |
| வெள்ளி | 3 18 | 10 25 | ஆவணி அவிட்டம் 17 1 | 24 8 | 31 15 |
| சனி | 4 19 | 11 26 | 18 2 | கிருஷ்ண ஜயந்தி 25 9 | ★ |

இந்தப் படத்தைப் பார்.
இது எதன் படம்?
இது ஆண்டு, மாதம், கிழமை, நாள் ஆகியவற்றைக் காட்டும் படம்.
இது என்ன ஆண்டு?
இது கர ஆண்டு.
இன்று கிழமை என்ன?
இன்று................கிழமை.
இன்று தேதி என்ன?
இன்று................தேதி.
நீ பிறந்த நாள் யாது?
நான் பிறந்த நாள்...............

## பயிற்சி

### 1. உரக்கப் படி

| தமிழ் மாதங்கள் | ஆங்கில மாதங்கள் |
|---|---|
| 1. சித்திரை | 1. ஜனவரி |
| 2. வைகாசி | 2. பிப்ரவரி |
| 3. ஆனி | 3. மார்ச் |
| 4. ஆடி | 4. ஏப்ரல் |
| 5. ஆவணி | 5. மே |
| 6. புரட்டாசி | 6. ஜூன் |
| 7. ஐப்பசி | 7. ஜூலை |
| 8. கார்த்திகை | 8. ஆகஸ்டு |
| 9. மார்கழி | 9. செப்டம்பர் |
| 10. தை | 10. அக்டோபர் |
| 11. மாசி | 11. நவம்பர் |
| 12. பங்குனி | 12. டிசம்பர் |

### கிழமைகள்

1. ஞாயிறு
2. திங்கள்
3. செவ்வாய்
4. புதன்
5. வியாழன்
6. வெள்ளி
7. சனி

கிழமைகள் ஏழு, வாரம் ஒன்று.
இருபத்து நான்கு மணி நேரம் ஒரு நாள்.
நாட்கள் முப்பது, மாதம் ஒன்று.
மாதங்கள் பன்னிரண்டு, ஆண்டு ஒன்று.

### 2. விடை சொல்லு

(1) வருஷப் பிறப்பு எப்பொழுது வரும்?
(2) பொங்கல் எந்த மாதத்தில் வரும்?
(3) டிஸம்பர் மாதத்தில் வரும் விழா யாது?
(4) உனக்குப் பெரிய விடுமுறை எப்பொழுது வரும்?
(5) நீ பஞ்சாங்கம் பார்த்திருக்கிறாயா?

### 3. எழுது

இந்த மாதத்தில் விடுமுறை நாட்கள் யாவை?

# 5. உடல் உறுப்புக்கள்



தலையில் மயிர் வளர்கிறது.
தலைக்குள் மூளை இருக்கிறது.
முகத்தில் கண்கள், காதுகள்,
மூக்கு, வாய் ஆகிய உறுப்புக்
கள் இருக்கின்றன.
கண்கள் பார்க்கின்றன.
கண்களுக்கு இமைகள் உண்டு.
காதுகள் கேட்கின்றன.
மூக்கு மூச்சு விடுகிறது; மூச்சு
வாங்குகிறது.
வாயினுள் நா, பற்கள்
இருக்கின்றன.
நா உருசி பார்க்கிறது.
பற்கள் உணவைக்
கடிக்கின்றன.
வாய் உண்கிறது; பேசுகிறது.
மார்புக்குள் இருதயம் இருக்கிறது.
வயிறு சோற்றைக் கொள்கிறது.
வயிற்றினுள் குடல்கள் இருக்கின்றன.
கைகள் வேலை செய்கின்றன.
கால்கள் நடக்கின்றன.

## பயிற்சி

### 1. வாய்க்குள் படி

மயிரில்லாத தலை மொட்டை.

காணாக் கண் குருடு.

கேளாச் செவி செவிடு.

பேச முடியாதவன் ஊமை.

கால் இல்லாதவன் நொண்டி.

### 2. கோடிட்ட இடங்களில் தகுந்த சொற்களை எழுது.

செவி, துதிக்கை, கால், அலகு.

கழுகுக்கு———கூர்மையானது.

பாம்புக்கு———நன்றாய்க் கேட்கும்.

பன்றியின்———குட்டையானது.

யானைக்கு———உண்டு.

---

# 6. நாயும் காகங்களும்



என்னிடம் ஒரு நாய் இருக்கிறது.

அதன் பெயர் **சிப்பாய்.**

சிப்பாய்க்குத் தினந்தோறும் நான் ஒரு தட்டில் சோறு போடுவேன்.

ஒரு நாள் சிப்பாய் சோறு தின்று கொண்டிருந்தது. அப்பொழுது அங்கே ஒரு காகம் வந்தது.

காகம் சிப்பாயைப் பார்த்து, "அண்ணு! எனக்கு இரண்டு பருக்கை சோறு கொடு" என்றது.

அதற்குச் சிப்பாய், "வெள! வெள! போ! போ!" என்று கூறி அதைக் கடிக்கப்

போயிற்று. காகம் பயந்து ஓடிற்று. அது அருகில் இருந்த மரத்தின் மீது ஏறி, ஒரு கிளையில் உட்கார்ந்து, ''கா, கா, கா, கா'' என்று நான்கு முறை கரைந்தது. உடனே ஒன்று, இரண்டு, மூன்று காகங்கள் வந்து விட்டன.

அவை நான்கும் நாயைச் சூழ்ந்து கொண்டன. ஒன்று அதன் முன்னே உட்கார்ந்தது; ஒன்று பின்னே உட்கார்ந்தது. மற்ற இரண்டும் பக்கங்களில் இருந்தன.

எல்லாக் காகங்களும் ஒருமிக்கக் கரைந்தன. கா, கா, கா, கா என்ற ஒலி எல்லாப் புறங்களிலும் எழுந்தது. ஒரு காகம் சிப்பாயின் தலையைக் கொத்த வந்தது. ஒரு காகம் அதன் வாலைப் பிடித்து இழுத்தது.

பாவம்! சிப்பாய் இங்கும் அங்கும் அலையத் தொடங்கிற்று. அது காகங்களை வெருட்ட முயன்றது; குதித்தது; ''வௌ! வௌ!'' என்று குரைத்தது. ஒன்றும் பலிக்கவில்லை.

இப்படிச் சிப்பாய் குதித்துக் கொண்டிருந்த போது காகங்கள் முன்னும் பின்னுமாக வந்து, தட்டில் இருந்த சோற்றையெல்லாம் தின்று விட்டன.

அன்று, சிப்பாய் பட்டினியாய்ப் போயிற்று.

## பயிற்சி

### 1. விடை கூறு

1. முதலில் காகம் சிப்பாயை என்ன கேட்டது?
2. வேறு மூன்று காகங்கள் எப்படி வந்தன?
3. அவை சிப்பாயை எப்படி அலைய வைத்தன?
4. சிப்பாய் நல்ல நாயா? கெட்ட நாயா?
5. காகம் அறிவுள்ளதா? இல்லையா?

### 2. எழுது

காகம் கரையும். நாய் குரைக்கும்.

மாடு கதறும். பாம்பு சீறும்.

பன்றி உறுமும் குதிரை கனைக்கும்.

### 3. கோடிட்ட இடங்களை நிரப்பு

நாய் ஒரு———(பறவை, மனிதன், விலங்கு)

காகம் ஒரு———(பறவை, மனிதன், விலங்கு)

நான் ஒரு———(பறவை, மனிதன், விலங்கு)

## பாட்டை மனத்திற்குள் படி

தண்ணீர் கிடையாமல்—காகம் ஒன்று
தவித்து அலைகையிலே,
மண்ணால் செய்த ஒரு—சாடியை
வழியில் கண்ட தம்மா!

சாடியின் மீதிருந்து—தலையைச்
சரித்து நோக்கிடவே
சாடியிலே தூரில்—சற்றே
தண்ணீர் தெரிந்த தம்மா!

காகம் உடன் எழுந்து—சிறுசிறு
கற்கள் பொறுக்கி வந்து
ஊகமாய்ச் சாடியினுள்—அவற்றை
ஒவ்வொன்றாய் இட்ட தம்மா!

இட்டிட வேநீரும்—மேலும்
எழுந்து வந்த தம்மா!
சட்ட மாகக் குடித்துக்—காகம்
தளர்ச்சி தீர்ந்த தம்மா!

ஊக்கம் உடையவர்க்குத்—துன்பம்
உலகில் இல்லை யம்மா!
ஆக்கம் பெருகும் அம்மா!—இதை நீ
அறிய வேண்டும் அம்மா!

—திரு. தேசிகவிநாயகம் பிள்ளை

## பயிற்சி

### 1. விடை சொல்லு

1. காகம் ஏன் தவித்து அலேந்தது?
2. சாடியில் தண்ணீர் எங்கே இருந்தது?
3. காகம் என்ன செய்தது?
4. கற்களைப் போட்டதும் என்ன நேர்ந்தது?
5. இந்தப் பாடலினுல் நீ அறிந்தது என்ன?

### 2. எழுது

| | |
|---|---|
| ஊகம் | ஊக்கம் |
| தலே | தளே |
| தளர்ச்சி | வளர்ச்சி |

ஊக்கம் உடையவர் ஆக்கம் பெறுவர்.

### 3. கோடிட்ட இடங்களே நிரப்பு

(i) சாடி———செய்தது. (கண்ணுடியால், மண்ணுல், கல்லால்)

(ii) துணி———செய்தது. (காகிதத்தால், மரத்தால், நூலால்)

———

# 8. கடைகள்





முத்து சென்னைக்குப் புதியவன்.

அவன் தந்தை அப்பொழுதுதான் சென்னைக்கு வேலை பார்க்க வந்தார்.

அவர் ஒருநாள் கடைத் தெருவுக்குப் போனார். முத்துவும் பின்னே சென்றான்.

அரிசி, உப்பு, புளி, பருப்பு, சர்க்கரை, எண்ணெய், நெய் முதலிய பொருள்களை அவர்கள் வாங்கினார்கள். பிறகு முத்துவுக்கு அவன் தந்தை சட்டைத்துணி, எழுதுகோல், புத்தகம் முதலியவற்றை வாங்கிக் கொடுத்தார்.

கடைக்காரர் சிலவற்றை முகந்து கொடுத்தார்; சிலவற்றை நிறுத்துக் கொடுத்

தார்; துணிகளை நீட்டி அளந்து கொடுத்தார். எழுதுகோல்களை எண்ணிக் கொடுத்தார்.



மளிகைக் கடைக் காரர், அரிசி, உப்பு, பருப்பு ஆகியவற்றைப் படி, ஆழாக்கு இவற்றால் முகந்தார்.

புளி, சர்க்கரை, எண்ணெய், நெய் இவற்றைத் தராசில் வைத்து, வீசை, சேர், பலம் என்று அவர் நிறுத்துக்கொடுத்தார்.



ஜவுளிக் கடைக் காரர் துணிகளைக் கஜக்கோலால் அளந்து கொடுத்தார்.

புத்தகக் கடைக் காரர் புத்தகங்களை ஒன்று, இரண்டு என்று எண்ணிக் கொடுத்தார்.

முத்துவுக்கு இவையெல்லாம் வியப்பாய் இருந்தன.

அன்று முத்துவுக்கு மகிழ்ச்சி அதிகமாய் இருந்தது.

### பயிற்சி

### 1. விடை சொல்லு

(1) உன் ஊரில் என்ன என்ன கடைகள் உண்டு ?

(2) உன் ஊரில் விளையும் உணவுப் பொருள்கள் யாவை ?

(3) உன் ஊரில் துணி நெய்கிறார்களா ?

### 2. எழுது

**முகத்தல், நீட்டல், எண்ணல், அளத்தல், நிறுத்தல்.**

பின்வருவனவற்றை எப்படி அளப்பது வரிசைப் படுத்தி எழுது.

காகிதம், கடுகு, கோதுமை, பந்து, நூல், புளி, மண்ணெண்ணெய், வெண்ணெய்.

# 9. எதிரிடைச் சொற்கள்



யானை பெரியது.
பனை உயரம்.
பாம்பு நீளமானது.
பூனை சிறியது.
புதர் குட்டை.
புழு குறுகியது.
மரப்பட்டை தடிப்பானது.
பழத்தோல் மென்மையானது.
பாறை சுரசுரப்பானது.
பளிங்கு, வெண்ணெய் வழவழப்பானது.
தென்னை நேராய் வளரும்.
மூங்கில் வளையும்.
வலக்கை உண்ண உதவும்.
இடக்கை உண்ண உதவாது.
கண்கள் முகத்தின் முன்புறம்
இருக்கின்றன.
கூந்தல் தலையின் பின்புறம் இருக்கிறது.

வானம் **மேலே** இருக்கிறது.
நிலம் **கீழே** இருக்கிறது.
முற்றம் வீட்டின் **உள்ளே** இருக்கிறது.
திண்ணை வீட்டின் **வெளியே** இருக்கிறது.
வேலி தோட்டத்தைச்சுற்றி இருக்கிறது.
வாத்து குளத்தின் **குறுக்கே** நீந்துகிறது.
இடுப்பில் நாடாவை **இறுகக்** கட்டாதே.
கையில் வளைகளை **நழுவ** இடு.
மின்சார விளக்கு ஒளி **மிக்கது.**
எண்ணெய் விளக்கு ஒளி **குறைந்தது.**

## பயிற்சி

### 1. கோடிட்ட இடங்களை நிரப்பு

**வழவழப்பாய், வளைந்து, அடர்ந்து, தாவி.**

(1) பாம்பு————ஓடும்.
(2) குரங்கு———குதிக்கும்.
(3) காட்டில் மரங்கள்———இருக்கும்.
(4) கண்ணாடி———இருக்கும்.

### 2. எதிரிடைச் சொற்கள் கூறு

தண்ணீர், மேடு, சோம்பேறி, அதிகம், அகலம்.

# 10. குரங்காட்டி



இக் குரங்காட்டியைப் பார்.

இவனிடம் எத்தனை குரங்குகள் இருக்கின்றன ?

எண்ணிச் சொல்.

ஆண் குரங்கைப் பார்.

அது என்ன செய்கிறது ?

அதன் உடைகளைப் பார்.

பெண் குரங்கு கையில் என்ன வைத்திருக்கிறது ?

எது பாவாடை கட்டிக்கொண்டு இருக்கிறது ?

ஆடு என்ன செய்கிறது ?

குரங்காட்டி கையில் பிடித்திருப்பது என்ன ?

ஒரு குரங்கு தாண்டிக் குதிக்கிறது.

அது தன் கழுத்திலும் ஒரு குச்சி வைத்திருக்கிறது. குரங்காட்டி குரங்குகளை ஆட்டிப் பிழைக்கிறான். வேடிக்கைப் பார்ப்பவர்கள் அவனுக்குக் காசு கொடுப்பார்கள். அவர்கள் குரங்குகளுக்குத் தின்பண்டம் கொடுப்பார்கள். குரங்காட்டி, பாம்பாட்டி, கரடிக்காரர், பெருமாள் மாட்டுக்காரர் நம் ஊருக்கு அடிக்கடி வந்து போவார்கள்.

## பயிற்சி

### 1. படி

| | | |
|---|---|---|
| குரங்காட்டி | விளையாட்டு | துட்டு |
| பாம்பாட்டி | வேடிக்கை | காசு |

### 2. எழுது

**கோடிட்ட இடங்களை நிரப்பு**

(1) விறகு வெட்டுகிறவன்————.

(2) படகு ஓட்டுகிறவன்————.

(3) பாம்பை ஆட்டுகிறவன்————.

### 3. விடை சொல்

(1) தாவும் பிராணிகள் யாவை? சில சொல்லு.

(2) ஊர்ந்து செல்வன யாவை? சில சொல்லு.

(3) குதித்து ஓடும் ஒரு பிராணியின் பெயர் கூறு.

(4) தண்ணீரில் நீந்தும் பிராணிகள் யாவை? சில கூறு.

(5) உயரப் பறப்பன யாவை? அவற்றிற்குப் பொதுப் பெயர் என்ன?

# 11. இவ்வளவு பெரியதா?



(நாடகம்)

**குஞ்சுத் தவளை:**—அம்மா, குளக்கரையில் ஓர் எருமை வந்ததம்மா! அது எத்தனை பெரியது தெரியுமா? அது தம்பியை மிதித்து முடமாக்கிவிட்டது; அம்மா!

**தாய்த்தவளை:**—ஐயோ! எருமை எவ்வளவு பெரியது? குழந்தாய்!

**குஞ்சு:**—மிகப் பெரியது அம்மா! ஒரு மலை மாதிரி இருந்தது, அம்மா!

**தாய்:**—என்னை விடவா?

**குஞ்சு:**—ஆமாம், அம்மா.

**தாய்:**—(உடலை உப்பிக் கொண்டு) இவ்வளவு பெரியதாயிருந்ததா?

**குஞ்சு:**—இன்னும் பெரியது.

**தாய்:—** (இன்னும் உப்பிக் கொண்டு) இவ்வளவு இருக்குமா ?

**குஞ்சு:—** இன்னும் மிகப் பெரியது.

**தாய்:—** (மேலும் உப்பிக் கொண்டு) இப்பொழுது ?

**குஞ்சு:—** உன்னால் உப்ப முடியாது, அம்மா !

**தாய்:—** (இன்னும் உப்பிக்கொண்டு) உம் !... இப்படிச் சொல்லிக் கொண்டே அது வயிறு வெடித்து மல்லாந்தது.

### பயிற்சி

#### 1. விடைகூறு

(1) தவளைகள் எங்கே வாழும் ?

(2) தவளை முட்டை இடுமா? குட்டி போடுமா ?

(3) தவளை ஏன் குதித்துக் குதித்துப் பாய்கிறது, தெரியுமா ?

(4) தவளைக் குஞ்சை மிதித்தது எது ?

(5) தவளை உப்பினால் எருமை ஆகுமா ?

#### 2. படி - எழுது

| | | | |
|---|---|---|---|
| தண்ணீர் | தாவிற்று | பருத்தது | மல்லாந்தது |
| குளக்கரை | மிதித்தது | சிறுத்தது | பெரிய |
| முட்டை | உப்பிற்று | இறந்தது | சிறிய |

#### 3. கோடிட்ட இடங்களை நிரப்பு

(1) தவளை——பிராணி. (பெரிய, அகலமான, சிறிய)

(2) எருமையின் உடல்—— (குறுகியது, பருத்தது, நெட்டையானது)

(4) குஞ்சு——ஆயிற்று (பொட்டை,செவிடு, மூடம்).

# 12. உழவு



நாம் உண்ணும் உணவு யாது? நம்மிற் பெரும்பாலோர் அரிசிச் சோற்றையே உண்கிறார்கள். கோதுமை, கம்பு, கேழ்வரகு, தினை முதலியனவும் நமக்கு உண்பொருள்களே. ஆனால் தமிழர்களுக்குச் சிறந்த உணவு அரிசியே.

அரிசி நமக்கு எப்படிக் கிடைக்கிறது என்பது உங்களுக்குத் தெரியுமே. நெல்லைக் குத்தினால் அரிசியாகும். நம் ஊரில் நெல் விளையும் வயல்களை நீங்கள் பார்த்திருப்பீர்களே.

இன்று நாம் வயற்புரம் போய் அங்கே என்ன என்ன நடக்கின்றன என்று பார்ப்போம்.

இதோ பாருங்கள். குடியானவர் இரண்டு எருதுகளை ஏரில் பூட்டி வயலை



உழுகிறார். முதலில் அவர் வயலில் நீரைப் பாய்ச்சி வைத்திருப்பார். சேற்றில் உழும்போது மண் நன்றாகப் புரண்டு விடும். அப்படிச் செய்தால்தான் நெற்பயிர் நன்றாய் வேர் விட்டுவளரும்.

பிறகு அவர் பரம்பு அடிப்பார். அப்படிச் செய்வதால் சேறு மேடு பள்ளமில்லாமல் மழ மழவென்று ஒரே தளமாக ஆகும். இப்



படித் தயாரித்த வயலுக்கு நாற்றங் கால் என்றுபெயர். அதில் நன்றாகப் பொறுக்கி எடுத்த நெல் விதைகளை அவர் விதைப்பார். விதைத்து சில நாட்கள் சென்றவுடன் நாற்று முளைக்கும்.

நாற்றங்கால்கள் பார்வைக்கு வெகு அழகாய் இருக்கும். நாற்றுக்கள் வளர்ந்து



சில நாட்கள் ஆனவுடன் அவற்றைப் பிடுங்கி, வயல்களில் கொண்டு போய் நடுவார்கள். அவை அங்கே நன்ருக வளரும். சில மாதங்களில் அவற்றில் கதிர்கள் தோன்றும். அவை முற்றினவுடன் சுமை தாங்காமல் தலை சாய்ந்துவிடும்.

பயிர்கள் நன்ருக முற்றினவுடன் குடியானவர்கள் வயல்களுக்குப் போய் அவற்றை



அரிவாளால் அறுத்துக் குவிப்பார்கள். பிறகு போர் அடித்து நெல்லைப் பிரித்து வீடுகளுக்குக் கொண்டு போவார்கள். வைக்கோல் மாடுகளுக்கு உணவாகும்.

நீங்கள் பெரியவர்களாகும்போது சிறந்த குடியானவர்களாவீர்கள்.

## பயிற்சி

### 1. எழுது

| | | |
|---|---|---|
| வயல் | குடியானவர் | பயிர் |
| நாற்று | உழவு | பரம்பு |
| கதிர் | அறுப்பு | அரிவாள் |

### 2. விடை கூறு

(1) உன் கிராமத்தில் என்ன என்ன விளை பொருள்கள் உண்டு?

(2) வயல்களில் என்ன விளைகிறது?

(3) தோட்டங்களில் என்ன விளைகின்றன?

(4) வீட்டுக்கொல்லைகளில் என்ன விளைகின்றன?

### 3. படி

சம்பா நெல் கார் நெல் குறுவை நெல்

அரிசி நொய் உமி தவிடு

**கோடிட்ட இடங்களில் தக்க சொற்களை அமை.**

அரிசி, மாடுகள், நாற்று, அரிவாள்களால்.

(1) ——ஏர் இழுக்கும்.

(2) குடியானவர்கள் ——— அறுப்பு அறுப்பார்கள்.

(3) நாற்றங்காலில்———முளைக்கும்.

(4) நெல்லிலிருந்து———கிடைக்கும்.

---

# 13. மாட்டு வகைகள்




மொட்டைக்கொம்பன்; விரிதலைக்கொம்பன் ;
 மயிலைக்காளை; ஒற்றை நாடி;
கொட்டைப் பாக்கன்; பச்சைக் கண்ணன்;
 கூடு கொம்பன்; கருமேக வண்ணன்;
பட்டடை மீறி; சூடு பிடிங்கி;
 பருத்த செம்மறை; யானைச் சுழியன்;
முட்டிக்கால் தட்டி; போர்க்காளை; தூங்கல்;
 முழுதும் களத்தினில் நிற்குதாம்
 ஆண்டே !

—சிவசயிலப் பள்ளு.

# 14. கோழி




நாள்தோறும் நம்மை விடியற்காலத்திற் கூவி எழுப்புவது யாது? அதுதான் கோழி.

காகமும் கரைந்து நம்மை எழுப்பும். ஆனால் காகம் நம்மோடு கூடி வாழ்வதில்லை. அதை ஒருவரும் வளர்ப்பதும் இல்லை. ஆனால் கோழியோ நம் வீட்டிலே நம்மோடேயே இருந்து வாழ்கிறது.

ஆண் கோழிக்குச் சேவல் என்பது பெயர். பெண் கோழியைப் பெட்டை என்பார்கள். சேவல் பார்ப்பதற்கு அழகாய் இருக்கும்; அதற்குத் தலையில் கொண்டை உண்டு.

பெட்டைக் கோழி முட்டை இடும். கோழி முட்டை வெள்ளை நிறமானது. அது மழமழவென்று இருக்கும். கோழி தன் முட்டைமீது இருந்து அதனை அடைகாக்கும். முட்டை பொரிந்து குஞ்சு வெளியே வரும்.

கோழி தரையைக் கிளறித் தன் அலகால் கொத்துவதைப் பார்த்திருக்கிறாயா? அதற்குப் புழுக்களையும் பூச்சிகளையும் கொத்தித் தின்பதில் விருப்பம் அதிகம். தவிடு, நொய் இவற்றையும் கோழி தின்னும். தவிட்டைச் சிறிதளவு நீருடன் பிசைந்து அதற்கு வைப்பது நல்லது.

கோழி சில சமயங்களில் சிறிய பருக்கைக் கற்களைக் கொத்தித் தின்பதை நீ பார்த்திருக்கிறாயா? ஏன் அது அப்படிச் செய்கிறது? தெரியுமா? நாம் நம் உணவை நம் பற்களால் கடித்து உண்கிறோம். கோழிக்கு வாயில் பற்கள் இல்லை. அதற்குப் பதிலாக அதன் வயிற்றில் ஒரு கற்குடல் உண்டு. கோழியின் இரை அந்தக் குடலில் போய் அரைபடும். அதை நிரப்புவதற்குத்தான் கோழி சிறிய கற்களைப் பொறுக்கித் தின்கிறது.

கோழி எப்படிக் குளிக்கும் தெரியுமா? அது தன் கால் விரல்களால் மண்ணைக்

கிளறிப் புழுதியைத் தன்மீது வாரி இறைத்துக் கொள்ளும். இப்படிச் செய்வதால் அதன்மீது உள்ள பூச்சி புழுக்கள் மாயும்; அழுக்கும் போகும். கோழியின் வால் புறத்தில் ஓர் உறுப்பு உண்டு. அதில் எண்ணெய் போன்ற ஒரு பொருள் உண்டு. கோழி தன் அலகால் அதை எடுத்துத் தன்மீது பூசிக்கொள்ளும். அதனால் அதற்கு மினுமினுப்பு ஏற்படும்.

கோழி சாதுவான பறவை. அதனிடம் நாம் அன்பாய் இருக்க வேண்டும்.

பயிற்சி

**1. விடை சொல்லு**

(1) வீட்டில் வளர்க்கக் கூடிய பறவைகள் யாவை?

(2) கோழி எவற்றைத் தின்னும்?

(3) கற்குடலால் கோழிக்கு என்ன பயன்?

(4) அது தன்னை மினுமினுப்பாக்கிக் கொள் வது எப்படி?

**2. படி**

**பொருள் சொல்லு.**

உண், விழுங்கு, குடி.
இரை: தீனி: உணவு.
கொத்து: பொறுக்கு: எடு.
எண்ணெய்: வெண்ணெய்.

**3. இவற்றின் நிறம் என்ன?**

சேவலின் கொண்டை, கோழி முட்டை, மயிற் கழுத்து.

**4. எது நீளம்? எது குட்டை?**

பாம்பு. புழு. மரம். செடி. ஆறு. குட்டை.

# 15. பாட்டுக் கச்சேரி



இந்தக் கச்சேரியைப் பார்.

யார் பாடுகிறார் ?

மத்தளம் அடிப்பவர் யார்? அவர் நாவைப் பார்.

பிடில் வாசிப்பவரைப் பார்.

கோழி என்ன செய்கிறது ?

ஒரு நாள் கழுதை, கோழி, நாய், பூனை நான்கும் ஓரிடத்தில் கூடின. கழுதை, "நான் நன்றாகப் பாடுவேன்; கோழி தம்புரா

மீட்டட்டும்; நாய் மிருதங்கம் அடிக்கட்டும்; பூனை பிடில் வாசிக்கட்டும்; நாம் எல்லோரும் பட்டணம் போய், கச்சேரி பண்ணுவோம்; வருகிறீர்களா?" என்றது. அதற்கு அவை எல்லாம் ஒத்துக் கொண்டன.

நான்கும் நல்ல உடைகள் உடுத்துக் கொண்டன. நாய் ஒரு மத்தளத்தைத் தூக்கிக் கொண்டது; கோழி ஒரு தம்புராவை எடுத்துக் கொண்டது; பூனை ஒரு பிடிலைப் பிடித்துக் கொண்டது.

அவை நான்கும் புறப்பட்டன. நடு வழியில் ஒரு காடு இருந்தது. மாலை நேரமும் வந்துவிட்டது. இருட்டு வந்தபோது பாடகர்களுக்குப் பயம் உண்டாயிற்று.

தூரத்தில் ஒரு வீடு தெரிந்தது. அதனுள் ஒரு மனிதன் தனியே வசித்து வந்தான். வீட்டு வாசலில் நம் பாடகர்கள் போய் நின்று பாடத் தொடங்கினார்கள்.

கழுதை, "ஹே...ஹே... ஹே" என்று உரக்கக் கனைத்தது.

நாய். "வொள்....வொள்...வொள்" என்று குரைத்தது.

கோழி, "கொக்கறக்கோ...." என்று கூவிற்று.

பூனை, "ஞாங்...ஞாங்..." என்று கத்திற்று.

இந்தக் கூக்குரலைக் கேட்டு வீட்டுக் காரன் பயந்து ஓடிவிட்டான். பிறகு அவை உள்ளே புகுந்து, அங்கே இருந்த உணவு எல்லாவற்றையும் தின்றுவிட்டன. பிறகு அவை மிகுந்த மகிழ்ச்சியுடன் கச்சேரி செய்யத் தொடங்கின.

அவை கச்சேரி செய்வதைப் படத்தில் பாருங்கள்.

**பயிற்சி**

**படி**

மேளம் குழல்
பாட்டு பிடில்
வீணை நடனம்

**வினாக்கள்**

(1) நீ பாட்டுக் கச்சேரி பார்த்திருக்கிறாயா?

(2) பின் வரும் சொற்களைத் தகுந்த இடத்தில் வை.

உறுமும்; குரைக்கும்; கதறும்; கூவும்; கர்ச் சிக்கும்; கனைக்கும்; ஊளையிடும்; கொஞ்சும்.

சிங்கம்———
நாய்———
குயில்———
பன்றி———
நரி———
கிளி———
மாடு———
குதிரை———

# 16. கூடை முடைதல்




உன் ஊரில் என்ன என்ன கைத் தொழில்கள் நடக்கின்றன? நீ கவனித்திருக் கிருயா? நமக்கு வேண்டிய பலவற்றையும் நாமே செய்து கொள்வது நல்லது.

இந்தப் படத்தில் இருப்பவரைப் பார். அவர் கூடை முடைகிருர். முறம், சல்லடை, குடலை, பாய், கூண்டு முதலிய பலவற்றையும் அவர் முடைவார்.

அவர் ஒருபோதும் சோம்பேறியாய் இருக்க மாட்டார். அவர் கொல்லைகளுக்குச் சென்று நல்ல மூங்கில்களை வெட்டி வருவார்.

அவர் வீட்டுக் கூரையின்மேல் மூன்று மூங்கில் துண்டுகள் சாத்தியிருப்பதைப் பார்.

முதலில் அவர் மூங்கிலைப் பிளப்பார். அவற்றை அவர் மெல்லிய சிம்புகளாகச் சீவிக் கொள்வார். சிம்புகள் நார்போல் வளையும்; ஆனால் உறுதியாயிருக்கும். சிம்புகளால் கூடை முடையலாம். ஓலை, பிரம்பு, கோரை ஆகியவையும் கூடை முடைய உபயோகப்படும்.

கூடைகளில் பலவிதம் உண்டு. அவற்றிற்குச் சாயம் பூசலாம். நாம் நம் வீட்டுப் பொருள்களைக் கூடைகளில் வைக்கலாம். அவை கனமாய் இரா. ஆகையால் அவற்றைத் தூக்குவது எளிது.

நாமும் கூடை முடையவும் பாய் பின்னவும் கற்றுக்கொள்வது நலம். அதனால் நமக்குக் கைத்தொழில் படியும்; கையால் வேலை செய்கிறவர்களுக்கு அறிவும் கூர்மையாகும். நமக்கு வேண்டிய பொருள்களும் நமக்குக் கிடைக்கும்.

## பயிற்சி

### 1. படி

பாய் பின்னுதல் கூடை முடைதல் துணிநெய்தல்
கைத்தொழில் பயிர்த்தொழில் குடிசைத்தொழில்

**2. விடை கூறு**

(1) உன் வீட்டிலுள்ள தட்டு முட்டுச் சாமான்கள் யாவை ?

(2) பின் காணப்படும் பொருள்களின் பெயர்களைக் கீழே உள்ள அட்டவணையில் எழுது.

. சட்டி, முறம், உரல், வெண்கலப் பானை, பாய், பிரப்பந்தட்டு, கூடை, செம்பு, நாற்காலி, அண்டா, மண் கூஜா.

| பித்தளை | வெண்கலம் | மரம் | மண் | பிரம்பு | மூங்கில் | ஓலை |
|---|---|---|---|---|---|---|

# 17. நாப்பழக்கம்

**கீழே உள்ளவற்றைப் பல முறை உரக்க வேகமாகப் படி.**

(1) கீழே ஏழு ஓலை; மேலே ஏழு ஓலை.

(2) ஒன்பது நரியிலே ஒரு நரி கிழ நரி.

(3) கிழ நரி பிடரியில் ஒரு பிடி நரை மயிர்.

(4) மலையோரத்திலே உரல் உருளுகிறது; புரளுகிறது பார்.

(5) பிட்டுச் சுட்டுப் பெட்டியிலே போடு.

(6) சுண்ணும்பு வாங்கவில்லையோ ! பிண்ணுக்கு வாங்கவில்லையோ !

# 18. சூரியன்



வானத்தைப் பார். வானத்தில் சூரியன் எங்கே இருக்கிறான் பார்.

சூரியனை நன்றாகப் பார்க்க முடிகிறதா? இல்லை. ஏன்? அவனைப் பார்த்தால் கண் கூசுகிறது. அவன் அவ்வளவு பளபளப்பாய் இருக்கிறான்? அவன் காலையில் கிழக்கே கிளம்பி, மாலையில் மேற்கே மறைகிறான். சூரியன் மறைந்த பின் இரவு வருகிறது.

இரவு இருள் மூடி இருக்கும். அப்போது நாம் உறங்குவோம். விடிந்ததும் நாம் விழித் தெழுந்து நம் வேலைகளைச் செய்யத்

தொடங்குகிறோம். படத்தில் யார் யார் என்ன என்ன செய்து கொண்டிருக்கிறார்கள் பார்.

உயிர்களின் வளர்ச்சிக்கு வெப்பமும் ஒளியும் வேண்டும். அவற்றைச் சூரியன் உலகுக்கு அளிக்கிறான். சூரிய வெப்பத்தால் நீர் ஆவியாக மாறி மேகமாகிறது. மேகத்தால் நாம் மழை பெறுகிறோம். சூரியன் நமக்குச் செய்யும் உதவியைப் பார்த்தீர்களா?

சூரியன் என்றாவது சோம்பி இருந்தது உண்டா? நாமும் சூரியனைப் போல் சோம்பலில்லாமல் உழைக்க வேண்டும்.

### பயிற்சி

#### 1. படி

(1) சூரியனுக்கு உள்ள வேறு பெயர்கள்:—ஞாயிறு, கதிரவன்.

(2) ஒரு நாளின் இரண்டு பகுதிகள்:—பகல், இரவு.

(3) ஒரு பகலின் மூன்று பகுதிகள்:—காலை, நடுப்பகல், மாலை.

#### 2. விடை சொல்லு.

(1) உன் ஊருக்குக் கிழக்கே இருப்பது என்ன? அப்படியே மற்ற மூன்று திசைகளிலும் உள்ளவற்றைச் சொல்லு.

(2) சூருயன் நமக்கு என்ன என்ன கொடுக்கிருன் ?

(3) மேகம் எப்படி உண்டாகிறது ?

(4) மேகம் நமக்கு என்ன கொடுக்கிறது ?

### 3. படம் பார்த்து எழுது

(1) உழவன், (2) பெண், (3) பையன்கள், (4) குதிரை, (5) மாடுகள்—செய்வன யாவை என்று சொல்லு.

(2) ஆற்றைக் கடக்க என்ன இருக்கிறது ?

(3) படத்தில் நீ பார்க்கும் மரங்கள் யாவை ?

# 19. சூரியன் குஞ்சு



வெகு காலத்துக்கு முன்னே ஓர் ஊரில் மூடன் ஒருவன் இருந்தான். அவனை ஊரார் மட்டி என்று அழைத்தார்கள். அதுவே அவன் பெயரும் ஆயிற்று.

மட்டி வாழ்ந்த ஊர் ஒரு பட்டிக்காடு. அந்த ஊர் மக்கள் விளக்கையே பார்த்த தில்லை. அவர்கள் சூரியன் மறைவதற்கு முன்னேயே உண்டுவிட்டு உறங்கி விடு வார்கள்.

மட்டியின் அத்தை ஒரு பட்டணத்தில் வாழ்ந்து வந்தாள். ஒரு முறை மட்டி தன் அத்தை வீட்டுக்குப் போனான். அங்கே

அவன் கண்டவை எல்லாம் அவனுக்கு வியப்பைத் தந்தன.

இரவு வந்ததும் ஊரார் தங்கள் தங்கள் வீடுகளில் விளக்குகளை ஏற்றி வைத்தார்கள். மட்டியின் அத்தையும் ஒரு விளக்கு ஏற்றினாள். அதைப் பார்த்து மட்டி மலைத்து விட்டான். 'இது என்ன? இது என்ன?' என்று அவன் அனைவரையும் கேட்டான். அவன் அறியாமையைக் கண்டு அவர்கள் அவனைப் பார்த்து நகைத்தார்கள். அத்தை, 'இது, சூரியன் குஞ்சு' என்று பதில் சொன்னாள்.

மறுநாள் காலையில் மட்டி தன் ஊருக்குப் போவதாக இருந்தான். எப்படியாவது சூரியன் குஞ்சையும் எடுத்துப் போய்விட வேண்டுமென்று அவன் விரும்பினான். அதை எப்படியாவது ஒளித்து வைத்துவிட அவன் எண்ணினான். ஆகவே, வீட்டில் உள்ளவர்கள் உறங்கும் வரையில் அவன் விழித்திருந்தான். அவர்கள் தூங்கிய பிறகு அவன் மெதுவாக எழுந்து, விளக்கை எடுத்துக் கொண்டான். சந்தடி செய்யாமல் அவன் நடந்து வீட்டின் முன்புறத்துக்குச் சென்றான். அங்கே வைக்கோல் போரொன்று இருந்தது. அதன் ஓரத்தில் பல மரக்கட்டைகள் அடுக்கிக் கிடந்தன. அவற்றின்

இடையில் ஓர் இடுக்கு இருந்தது. மட்டி அதனுள் தன் சூரியன் குஞ்சை ஜாக்கிரதையாய் வைத்து விட்டுத் திரும்பினுன். அவன் மெதுவாக வீட்டினுள் நுழைந்து படுத்துக் கொண்டு தூங்கலானுன்.

பிறகு நடந்தது இன்னதென்று சொல்லவும் வேண்டுமோ? விளக்கின் நெருப்பு அருகிலுள்ள குப்பைகளில் பிடித்துக்கொண்டது. அது கொஞ்சம் கொஞ்சமாகப் பரவி, வைக்கோற்போரை எரித்து விட்டது. வீட்டையும் நெருப்பு பிடித்துக் கொண்டது. வீட்டிலுள்ளவர் எல்லோரும் அங்கும் இங்கும் ஓடினர். வீட்டிலுள்ள பொருள்களெல்லாம் எரிந்து போயின. ஊராரெல்லாரும் ஓடி வந்து அரும்பாடு பட்டு நெருப்பை அணைத்தனர். அவ்வூரில் அன்று இரவு ஒருவரும் உறங்கவில்லை.

விடிந்தபின் வீட்டிலுள்ளவர் தங்கள் பொருள்களுள் ஏதேனும் சேதமாகாமல் இருக்குமோ என்று தேடிப் பார்த்தனர். மட்டியும் ஏதோ ஒன்றை ஆராய்ந்து கொண்டே இருந்தான்.

அவன் அத்தை, "என்னடா, சுப்பா, தேடுகிருய்?" என்று கேட்டாள். அதற்கு அவன், "நான் சூரியன் குஞ்சை ஒளித்து வைத்திருந்தேன்! காணவில்லையே!" என்ருன்.

அதைக் கேட்டவர்கள் என்ன செய் திருப்பார்கள்? நீங்களே சொல்லுங்கள்.

### பயிற்சி

இந்தக் கதையை மனத்திற்குள் படி, பின் வரும் வினாக்களுக்கு விடைகூறு.

(1) அத்தை வீட்டில் மட்டி கண்ட அதிசயம் யாது?

(2) விளக்கைச் 'சூரியன் குஞ்சு' என்றது ஏன்?

(3) மட்டி சூரியன் குஞ்சை எங்கே ஒளித்து வைத்தான்?

(4) அதனால் என்ன உண்டாயிற்று?

(5) மட்டி எதைத் தேடினான்?

### 2. படி-எழுது

மூடன், பட்டிக்காடு, மலைத்து, வைக்கோல் போர், மட்டி, ஜாக்கிரதை, சந்தடி, இன்னதென்று, அங்கும் இங்கும், முன்புறம், ஓரம், இடுக்கு, சேதம், பின்புறம், வியப்பு, ஆராய்ந்து.

பின்வரும் சொற்களைக் கோடிட்ட இடங் களில் தகுந்தபடி நிரப்பு:—**இடையில், முன்னே, மெதுவாக.**

(1) ஊரார் சூரியன் மறைவதற்கு——உண்டு உறங்கினார்கள்.

(2) எல்லாரும் தூங்கவிட்டு அவன் —— எழுந் தான்.

(3) மரக்கட்டைகளின்——— ஓர் இடுக்கு இருந்தது.

# 20. விடுகதைகள்

முத்துச் சிலம்புக்காரி ?
முப்பணத்து ஓலைக்காரி ;
தண்டைச் சதங்கைக்காரி;
தாழ்வார வீட்டுக்காரி;
அவளைத் தொடுவானேன்!
கவலைப் படுவானேன்!



**அவள் யார் ?**

பாதாளத்திலே பிறந்தவன் ;
பம்பரத்திலே சுழன்றவன்;
இளம் வெயில்
காய்ந்தவன்;
நெருப்பு மூலை
கண்டவன்;
அவரவர் வீட்டுக்குப்
போனவன்;



**யார் அவன் ?**

ஏறினால் வழுக்கும்;
இலை சுருளும்;
காய் துவர்க்கும்;
பழம் இனிக்கும்;

**எது அது ?**





நீரிலே விளையும் பூ;
நிலத்திலே ஓடாப் பூ;
மாதர் கொண்டைக்கு
ஆகாப் பூ;
ஊரெல்லாம் உலவிவரும் பூ;

**அது என்ன பூ ?**

**பயிற்சி**

**1. படி**

| | | | |
|---|---|---|---|
| தேள் | பானை | வாழை | உப்பு |
| கேள் | யானை | தாழை | மப்பு |
| வேள் | பூனை | மோழை | தப்பு |

**2. விடை சொல்**

(1) சிலம்பு எங்கே அணிவது ?
(2) ஓலை எங்கே அணிவது ?
(3) சதங்கை எங்கே அணிவது ?
(4) எது துவர்க்கும் ?
(5) எது இனிக்கும் ?

**3. கோடிட்ட இடங்களை நிரப்பு**

இனிக்கும் ; புளிக்கும் ; எரியும் ; துவர்க்கும் ; கசக்கும் ; கரிக்கும்.

(1) தேன் ———
(2) எலுமிச்சை ———
(3) மிளகாய் ———
(4) வாழைக்காய் ———
(5) வேப்பங்காய் ———
(6) உப்பு ———

# 21. காட்சிச்சாலை

## காட்டு விலங்குகள்.

இன்று நாம் காட்சிச் சாலைக்குப் போவோம் வா. இச்சாலையில் ஊர்வன, பறப்பன, நடப்பன ஆகிய பலவிதமான பிராணிகள் இருக்கின்றன. விலங்குகள் எல்லாம் நடப்பனவே. அவற்றுள் பல விலங்குகள் காடுகளிலேயே வாழும். அவை மிகக் கொடியவை. அவற்றுள் சிலவற்றைப் பிடித்துக் கூண்டுகளில் வைத்துக் காட்டுகிறார்கள்.

இதோ பார்.



ஒன்றன் பக்கத்தில் ஒன்றாக மூன்று கூண்டுகளுள் கொடிய காட்டு விலங்குகள் இருக்கின்றன. அக் கூண்டுகளுக்கு வலிய

இரும்புக் கம்பிகள் இட்டிருக்கிறார்கள் பார். இல்லாவிட்டால் அவ்விலங்குகள் வெளியே வந்துவிடும்.

முதற்கூண்டில் இருப்பவை சிங்கங்கள். அவற்றுள் ஒன்று ஆண், மற்றது பெண். ஆண் சிங்கத்துக்குப் பிடரி மயிர் உண்டு. சிங்கத்தை விலங்குகளுக்கெல்லாம் மன்னன் என்பார்கள். அது அத்தனை வலிமை உடையது. சிங்கம் யானையைக்கூட அடித்து விடும்.

அடுத்த கூண்டில் இருப்பது புலி. அதன் உடல் எவ்வளவு நீளமாய் இருக்கிறது பார். அதன் மேல் தோல் மிகவும் பளபளப்பாகவும் வழவழப்பாகவும் இருக்கும். அதன் மேலே அழகான கோடுகள் இருக்கும். புலியில் பல வகைகள் உண்டு. புலி பூனை இனத்தைச் சேர்ந்தது; அதற்கு இரவில் கண் நன்றாய்த் தெரியும். "பார்த்தால் பசு; பாய்ந்தால் புலி" என்கிறார்களே! அதன் பொருள் உனக்குத் தெரியுமா? பாய்ச்சலில் புலிக்கு நேரான வேறொரு விலங்கு கிடையாது. புலி மிகக் கொடுமையானது.

அடுத்த கூண்டைப் பார். அதில் ஒரு தாய்க் கரடி தன் இரண்டு குட்டிகளுடன் நிற்கிறது. கரடியும் மிகக் கொடூரமான

விலங்கு. அதற்கு உடல் முழுமையும் கரிய மயிர் மூடியிருக்கும்.

இன்னும் இக்காட்சிச் சாலையில் எத்தனையோ விதம் விதமான விலங்குகள் உண்டு. ஒட்டகம், ஒட்டைச் சிவிங்கி, கோவேறு கழுதை, காண்டா மிருகம், நீர்யானை, மான் முதலிய பல இங்கே உண்டு.

## பயிற்சி

1. பின்வரும் பெயர்களை **வீட்டு விலங்கு, காட்டு விலங்கு** என்று பிரித்துக் காட்டு.

**எருமை, முள்ளம்பன்றி, ஆடு, நீர்யானை பூனை புலி, கழுதை, சிங்கம், பசு, சிறுத்தைப்புலி.**

2. பின்வரும் பெயர்களை, **ஊர்வன, நீர்வாழ்வன, பறப்பன, நடப்பன** எனப் பிரித்துக் காட்டு.

**மீன், புழு, பாம்பு, யானை, கருடன், பல்லி, முதலை, தவளை, காகம், நாய், எறும்பு, புலி, புறா, நாகப்பூச்சி, மைனா, சிங்கம், வௌவால், எலி.**

3. பிடரி மயிருடைய விலங்குகள் இரண்டின் பெயர்களைச் சொல்லு.

4. இரவில் கண் தெரியும் பிராணிகள் இரண்டின் பெயர்களைச் சொல்லு.

5. நீரிலும் தரையிலும் வாழும் இரண்டு பிராணிகளின் பெயர்களைச் சொல்லு.

# 22. வீரவீரப்பன்




இந்தப் படத்தில் பையன் என்ன செய்கிறான் பார்? காளை எவ்வளவு முரட்டுத்தனமாய்ப் பாய்கிறது? அதைப் பையன் மிகுந்த வீரத்துடன் அடக்குகிறான் பார். அவன் பெயர் வீரப்பன். அவன் அருகில் நிற்பவர் முருகப்பிள்ளை என்பவர்.

முருகப் பிள்ளை ஊரில் பெரிய பணக்காரர். அவரிடம் பல காளைகள் இருந்தன. ஒருநாள் ஒரு காளை கட்டுக்கு அடங்காமல் வீட்டை விட்டு ஓடிவிட்டது. முருகப்-பிள்ளையும் அவருடைய ஆட்களும் எவ்வளவோ முயன்றார்கள். அதைப் பிடிக்க

அவர்களால் முடியவில்லை. காளை ஊருக்கு வெளியே நெடுந்தூரம் ஓடிவிட்டது.

அங்கே வீரப்பன் ஆடுகள் மேய்த்துக் கொண்டிருந்தான். அவன் துள்ளி ஓடி வருகிற காளையைக் கண்டான். அவன் சரேரென்று ஓடிவந்து அந்தக் காளையின் கயிற்றை ஒரு கையாலும், மூக்காங்கயிற்றை மற்றொரு கையாலும் பிடித்து அதை நிறுத்திவிட்டான். அது ஆனமட்டும் துள்ளிப் பாய்ந்தது. ஆனால் அதனால் அவனிடமிருந்து தப்பி ஓட முடியவில்லை. அதற்குள் முருகப் பிள்ளையும் அங்கே வந்து சேர்ந்தார். அவர் மெதுவாக அக் காளையை வீரப்பனிடமிருந்து பெற்று வீடு சேர்ந்தார்.

அன்று அவருக்கு இருந்த மகிழ்ச்சிக்கு அளவே இல்லை. அன்று மாலை அவர் ஊராரெல்லோரையும் அழைத்து வீரப்பனின் வீரத்தை அவர்கள்முன் மெச்சினார். அவனுக்கு ஒரு ஜோடி ஆடைகள் இனமாக அளித்தார். அன்றுமுதல் ஊரார் அவனை வீரவீரப்பன் என அழைத்தனர்.

## பயிற்சி

### 1. விடை சொல்லு

(1) முருகப் பிள்ளை எவற்றை வளர்த்து வந்தார்?

(2) காளையின் அருகே போக ஏன் ஆட்கள் பயந்தனர்?

(3) வீரப்பன் காளையை எப்படி அடக்கினன்?

(4) அவன் காளையை நன்றாகப் பிடித்திராவிட்டால், அது அவனை என்ன செய்திருக்கும்?

(5) வீரப்பன் தன் உயிருக்கு அஞ்சினனா?

(6) ஊரார் வீரப்பனுக்கு என்ன பெயர் இட்டார்கள்?

(7) உன் ஊரில் வீரர்கள் யாரேனும் உண்டோ?

(8) உனக்கு வீரக் கதை ஏதேனும் தெரியுமா?

## 2. படி

| | | |
|---|---|---|
| வீரம் | அச்சம் | மெச்சு |
| தைரியம் | பயம் | புகழ் |
| துணிச்சல் | நடுக்கம் | மரியாதை செய் |

3. பின் வருவனவற்றை **ஆண், பெண்** என்று பிரித்துக் காட்டு.

சேவல், கடாரி, காளை, வீரன், பெட்டை கடா, அரிசி.

இப் படங்களைப் பார்
இப் பாட்டை மனதிற்குள் படி.
படித்து விட்டுக் கதை சொல்லு.

பாட்டியின் வீட்டுப்
பழம் பானை—அந்தப்
பானையும் ஒரு புறம்
ஓட்டையடா!

ஓட்டை வழி ஒரு
சுண்டெலியும்—அதன்
உள்ளே புகுந்து நெல்
தின்றதடா!

உள்ளே புகுந்து நெல்
தின்று தின்று—வயிறு
ஊதிப் புடைத்துப்
பருத்ததடா!

மெள்ள வெளியில்
வருவதற்கும்—ஓட்டை
மெத்தச் சிறிதாகிப்
போச்சுதடா!

பானையைக் காலை
திறந்தவுடன்—அந்தப்
பாட்டியின் பக்கமாய்
வந்த வொரு

பூனை எலியினைக்
கண்டதடா!—ஓடிப்
போயதைக் கௌவியே
சென்றதடா!

கள்ள வழியினிற்
செல்பவரை—எமன்
காலடி பற்றித்
தொடர்வானடா!

உள்ள படியே
நடப்பவர்க்குத்—தெய்வம்
உற்ற துணையாக
நிற்குமடா!

—திரு தேசிகவிநாயகம் பிள்ளை.

### பயிற்சி

#### 1. விடை சொல்லு

(1) பானைக்குள் பாட்டி என்ன வைத்திருந்தாள்?
(2) எலி அதற்குள் எப்படி நுழைந்தது?
(3) உள்ளே எலி என்ன செய்தது?
(4) ஏன் அதனால் வெளியே வர முடியவில்லை?
(5) காலையில் பாட்டி என்ன செய்தாள்?
(6) எலி எப்படி வெளியே வந்தது?
(7) பாட்டியுடன் வந்தது எது?
(8) அது என்ன செய்தது?

#### 2. எழுது

எமன் கள்ளர்களைத் தொடர்வான்
தெய்வம் நல்லவர்களைக் காக்கும்.

# 24. தீபாவளி

ஆண்டுதோறும் ஐப்பசி மாதம், அமா வாசைக்கு முந்தின இரவு தீபாவளி கொண் டாடுகிறோம். அன்று விடிவதற்கு முன்னே



வீட்டில் உள்ளவர்கள் எழுந்து எண்ணெய் தேய்த்துக் குளிப்பார்கள்; வீடெல்லாம் விளக்கு ஏற்றிவைப்பார்கள்; கடவுளுக்கு நல்ல தின்பண் டங்கள் படைத்து வணங்குவார்கள். அன்று எல்லோ ரும் புதிய ஆடை கள் கட்டுவார்கள்.



பிள்ளைகள் பலவித வாணங்கள் விட்டும், வெடிகள் வெடித்தும், மகிழ்ச்சியுடன் பொழுது போக்குவார்கள். அன்று ஊரெல்லாம் ஒரே கொண்டாட்டமா யிருக்கும்.

முன் ஒரு காலத்தில் நரகன் என்ற ஓர் அரக்கன் இருந்தானும். அவன் எல்லோரையும் துன்புறுத்தி வந்தானும். அவனைக் கிருட்டின பகவான் கொன்றுவிட்டாராம். அந்த நாளைக் கொண்டாடவே நாம் தீபாவளி கொண்டாடுகிறோம்.

சில ஊர்களில் மக்கள் ஆறுகளுக்குச் சென்று அங்கே விளக்குகளை ஏற்றி நீரில் மிதக்க விடுவார்கள். கோவில்களிலும் அன்று திருவிழாக் கொண்டாடுவார்கள். இவ்வாறு இந்தியா முழுவதும் தீபாவளி கொண்டாடப்படுகிறது.

## பயிற்சி

### 1. விடை சொல்லு

(1) தீபாவளி எந்த மாதத்தில் நிகழும்?

(2) எதற்காக நாம் தீபாவளி கொண்டாடுகிறோம்?

(3) பிள்ளைகள் அன்று என்ன செய்வார்கள்?

(4) தீபாவளி என்றால் விளக்குகளின் வரிசை என்பது பொருள். இந்தப் பெயர் இப்பண்டிகைக்கு ஏன் வந்தது?

(5) தமிழ் நாட்டில் விளக்கேற்றும் விழா எப்பொழுது நடைபெறும்?

## 2. படி - எழுது

தமிழ் வருஷப் பிறப்பு : ரம்ஸான் : ஆவணி அவிட்டம் : ஸ்ரீ ஜயந்தி: பிள்ளையார் சதுர்த்தி : கிருஸ்த்மஸ் : ஆங்கில வருஷப் பிறப்பு : மாட்டுப் பொங்கல்.

3. பின் வருவனற்றைச் செய்யும் பண்டிகை நாட்கள் யாவை ?

(1) பூணூல் போட்டுக் கொள்வது.

(2) பட்டாசு கொளுத்துவது.

(3) கொழுக்கட்டை செய்வது.

(4) புத்தகங்களை வைத்து வணங்குவது.

(5) மாடுகளுக்குப் பூசை செய்வது.

# 25. பழமொழிகள்

அழுத பிள்ளை பால் குடிக்கும்.

ஆடை இல்லாதவன் அரை மனிதன்.

இருந்த கால் மூதேவி; நடந்த கால் சீதேவி.

உண்டதுதானே ஏப்பம் வரும்.

ஊர் வயை மூட உலைமூடி இல்லை.

எத்தால் வாழலாம்? ஒத்தால் வாழலாம்.

ஏட்டுச் சுரைக்காய் கறிக்கு ஆகுமா?

ஐந்தில் வளையாதது ஐம்பதில் வளையுமா?

ஒரு பானைச் சோற்றுக்கு ஒரு சோறு பதம்.

ஓணான் வேலிக்கு இழுக்கிறது; தவளை தண்ணீருக்கு இழுக்கிறது.

பயிற்சி

(1) இவற்றை உரக்கப் படி. பல தடவை படி.

(2) நீ கேட்ட வேறு பழமொழிகளைச் சொல்.

# 26. உன்னைச் சுற்றிப் பார்



உன்னைச் சுற்றிப் பார். சூரியனும் சந்திரனும் நமக்கு வெளிச்சம் கொடுக்கிறார்கள். காற்று ஜில் என்று வீசி நம்மைக் குளிரச் செய்கிறது. மழை தண்ணீரைப் பொழிந்து ஆற்றையும் குளத்தையும் வயல்களையும் நிரப்புகிறது. புல் பூண்டுகளும் செடிகளும் கொடிகளும் நமக்கு வேண்டிய உணவைக் கொடுக்கின்றன. மாடுகளும் ஆடுகளும் நமக்குப் பாலைத் தருகின்றன. காளை, குதிரை முதலியன நமக்காக உழைக்கின்றன. மலர்கள் நமக்கு அழகையும் மணத்தையும் அளிக்கின்றன.

இப்படி உலகத்திலுள்ள பொருள்களெல்லாம் நமக்கு நன்மையைச்செய்கின்றன. நாம் அவற்றிற்குத் திரும்ப நன்மை செய்ய வேண்டாமா? எப்படி நன்மை செய்வது? அவற்றினிடம் நாம் அன்பு காட்டவேண்டும். அதுவே நாம் அவற்றிற்குச்செய்யும் நன்மை. நாம் ஒன்றிற்கும் தீமை புரியலாகாது. நாம் எல்லாரிடமும் அன்பு காட்ட வேண்டும். அப்படிச் செய்தால் உலகில் தீமையே நடவாது.

## பயிற்சி

### 1. படி

| | | |
|---|---|---|
| சூரியன் | குளம் | கொடு |
| சந்திரன் | வயல் | தா |
| காற்று | புல் | அளி |
| மழை | பூண்டு | நன்மை |
| ஆறு | செடி | தீமை |

### 2. விடை சொல்லு

(1) சூரியன் நமக்குச் செய்யும் நன்மை யாது?
(2) மழை நமக்குச் செய்யும் நன்மை யாது?
(3) பூமி நமக்கு என்ன தருகிறது?
(4) ஆடு மாடுகள் நமக்குச் செய்யும் உதவி என்ன?

### 3. எழுது

மழை சோவென்று பொழிகிறது.
வெயில் சுரீரென்று காய்கிறது.
தண்ணீர் ஜில்லென்று இருக்கிறது.

# 27. காற்ருடி



ஒரு நாள் மாலை நேரம். கந்தன் தன் ஊர்ப்புற மந்தை வெளியில் காற்ருடி விட்டுக் கொண்டு இருந்தான். காற்ருடி வானத்தில் வெகு உயரத்தில் உல்லாசமாக ஆடிக்கொண்டு நின்றது. ஊர்ப் பிள்ளை களிற் பலர் வேடிக்கை பார்த்துக் கொண் டிருந்தனர்.

சரேரென்று காற்று வேகமாக அடிக்கத் தொடங்கிற்று. மரங்களெல்லாம் அசைந் தன. காற்ருடிக்குத் தானும் காற்ருேடு

பறக்கவேண்டும் என்ற ஆசை உண்டா யிற்று. அது காற்றைப் பார்த்து, "அண்ணு, என்னையும் உன்னுடன் அழைத்துப்போ. எனக்கும் உன்னைப் போல அலைய ஆசையாய் இருக்கிறது. இந்தக் கயிற்ருல் கட்டுப்பட்டு நிற்க நான் விரும்பவில்லை" என்றது.

அதற்குக் காற்று, "தம்பி. நீ இப் பொழுது கவலையில்லாமல் வானத்தில் மிதந்து கொண்டிருக்கிருய். என்னைப் பார். மரங்கள் மேலும் மலைகள்மீதும் மோதிக் கொண்டு அலைகிறேன். நீ இருக்கும் இடத்தி லேயே இரு. அதுவே இன்பமானது" என்றது.

காற்ருடி, "அண்ணு, நான் விலங்கு இடப்பட்டவன்போல் இருக்கிறேன். என் மனம் போனபடி அலைய என்ருல் முடிய வில்லை. என்னை உன்னேடு தயவு செய்து அழைத்துப்போ; நான் உன்னைக் கும்பிடு கிறேன்" என்று சொல்லி வணங்கிற்று.

அதற்குக் காற்று இணங்கிச் சற்று அதிக வேகமாக அடித்தது. கயிறு அறுந் தது. காற்ருடி காற்ருேடு வேகமாகச் சென்றது. அப்பொழுது அதற்கு இருந்த மகிழ்ச்சிக்கு அளவே இல்லை.

ஆனால் அது செல்லும் வழியில் ஒரு மரம் இருந்தது. அதனில் அறுந்த கயிறு சிக்கிக் கொண்டுவிட்டது. அதன்மேல் காற்றாடியால் பறக்க முடியவில்லை. அங்கேயே அது தொங்கிற்று. காற்று மேலும் மேலும் வீச அதன் உடலெல்லாம் கிழிந்துபோய் விட்டது. அப்பொழுது அது பட்ட வருத்தத்தைச் சொல்லவும் வேண்டுமோ ?

### பயிற்சி

### 1. விடை சொல்லு

(1) காற்றாடி காற்றைப் பார்த்து என்ன கேட்டது ?

(2) காற்று சொன்ன பதில் என்ன ?
(3) காற்றாடி மேலும் எப்படிக் கெஞ்சிற்று ?
(4) காற்றாடி எப்படி ஆயிற்று ?

### 2. படி

| | | |
|---|---|---|
| மாலை நேரம் | சரேரென்று | வருத்தம் |
| உல்லாசமாக | மேலும் மேலும் | மிதந்து |
| வேடிக்கை | ஆசை | மோதி |
| அலை | வானம் | இணங்கி |
| அழை | மலை | குலை |
| | மழை | குழை |

இரண்டு பொருள்கள் சொல்லு :
அலை. மலை. விலங்கு.

# 28. பால் பிடிக்காத பூனை

ஒரு நாடகம்

## காட்சி 1

*தெனாலிராமனும் அவன் மனைவியும் பேசிக் கொள்கின்றனர்.*

**தெனாலிராமன் :** ஊரில் எலிகள் பெருத்துப் போயினவாம். அதற்காக ஒவ்வொரு வீட்டிலும் ஒவ்வொரு பூனை வளர்க்க வேண்டுமாம். அரசர் கட்டளை.

**மனைவி :** அதற்கு உணவுக்கு என்ன செய்கிறது ?

**தெனாலி :** அதற்காக அரண்மனையிலிருந்து ஒவ்வொரு படி பால் அனுப்புவார்களாம்.

**மனைவி :** நமக்குக் குடிக்கப் பால் இல்லை. பூனைக்குப் பாலா ?

**தெனாலி :** ஏன்? நாமே பாலையெல்லாம் குடித்து விடுவோமே !

**மனைவி :** பூனை இளைத்து விடுமே ! அரசர். வந்து கேட்டால் என்ன சொல்வது ?

**தெனாலி :** அதற்கு நான் ஒரு வழி செய் கிறேன். நாளைக்குப் பூனையும் பாலும் வரட்டும்.

## காட்சி 2

**தெனாலி :** இதோ உள்ள பாலைக் கொதிக்கக் கொதிக்கக் காய்ச்சி வா. இந்தப் பூனை பாலைக் கண்டதும் எப்படிப் பறக்கிறது பார். கொண்டுவா சீக்கிரம்.




**மனைவி :** இதோ கொண்டுவந்து விட்டேன். பொங்கப் பொங்கக் காய்ச்சி யிருக்கிறேன்.

[பாலை ஒரு கிண்ணத்தில் கொண்டு வைக்கிறாள். பூனை அதைக் குடிக்கப் போகிறது.]

**தெனாலி :** ஐயோ! பூனை எப்படி ஓடுகிறது பார்.

**மனைவி:** ஐயோ! அதன் முகமெல்லாம் வெந்து விட்டது! ஐயோ! பாவம்!

**தெனாலி:** அதனால் என்ன? இனி அது ஒரு நாளும் பாலின் அருகில் கூட வராது. பால் இனி நமக்கே.

**காட்சி 3**

[அரசர் கோபத்துடன் பேசுகிறார். தெனாலி ஒதுங்கி நிற்கிறான். பூனை மெலிந்து நிற்கிறது.]

**அரசர்:** ஏனடா உன் வீட்டுப் பூனைமட்டும் இவ்வளவு இளைத்திருக்கிறது? நான் கொடுக்கும் பாலை என்னடா செய்கிறாய்?

**தெனாலி:** சுவாமி, பூனை பாலைத் தொடக் கூட மாட்டேன் என்கிறதே! பாலைக் கண்டதும் பிடிக்கிறதே ஓட்டம்! நான் என்ன செய்வேன்!

**அரசர்:** பால் பிடிக்காத பூனையும் உண்டோ? நீ சொல்வதெல்லாம் பொய்.

**தெனாலி:** தாங்களே நேரில் பாருங்கள். நல்ல பாலை இதோ கொண்டு வருகிறேன்! பூனை குடிக்கிறதா, பாருங்கள்.

(உள்ளே போய் ஒரு கிண்ணத்தில் பாலைக் கொண்டு வைக்கிறான். அதைக் கண்டதும் பூனை ஓடி விடுகிறது.)

**அரசர்:** ஆமாம், நீசொல்வது உண்மைதான். இந்தப் பூனைக்குப் பால் பிடிக்கவில்லை. நீ என்ன செய்வாய்? இனி, உன்மேல் கோபம் இல்லை. போ.

(போகிறார், தெனாலி ராமனும் மகிழ்ச்சியுடன் வீட்டுக்குள் போகிறான்.)

## பயிற்சி

### 1. விடை சொல்லு

*(1)* அரசர் வீடுதோறும் ஏன் பூனை வளர்க்கக் கட்டளை இட்டார்?

*(2)* தெனாலிராமன் பாலைத் திருட என்ன செய்தான்?

*(3)* அரசர் ஏன் ஏமாந்து போனார்?

### 2. படி - எழுது

| | | |
|---|---|---|
| ஒவ்வொரு | சுவாமி | அரண்மனை |
| கொதிக்கக்கொதிக்க | ஐயோ | கிண்ணம் |
| பொங்கப்பொங்க | பாவம் | கோபம் |

| | | | |
|---|---|---|---|
| இளை | வலி | பாலை | நாளும் |
| இலை | வழி | பாளை | நாலும் |
| இழை | | | |

### வினாக்கள்

*(1)* "நான் என்ன செய்வேன்?" இப்படிச் சொன்னவர் யார்?

*(2)* "பால் பிடிக்காத பூனை உண்டோ?" இப்படிக் கேட்டவர் யார்?

*(3)* "நமக்குக் குடிக்கப் பால் இல்லை." இப்படிச் சொன்னவர் யார்?

# 29. உலகநீதி

ஓதாமல் ஒரு நாளும் இருக்க வேண்டாம்.
ஒருவரையும் பொல்லாங்கு சொல்ல
வேண்டாம்.

மாதாவை ஒரு நாளும் மறக்க வேண்டாம்.
போகாத இடந்தனிலே போக வேண்டாம்.
அஞ்சாமல் தனிவழியே போக வேண்டாம்.
நெஞ்சாரப் பொய்தன்னைச் சொல்ல
வேண்டாம்.

கற்றவரை ஒரு நாளும் பழிக்க வேண்டாம்.
தருமத்தை ஒரு நாளும் மறக்க வேண்டாம்.
மூத்தோர் சொல் வார்த்தைகளை மறக்க
வேண்டாம்.

தெய்வத்தை ஒரு நாளும் மறக்க வேண்டாம்.

---

# 30. ஆத்திசூடி

அறம் செய விரும்பு.

ஆறுவது சினம்.

ஊக்கமது கைவிடேல்.

எண் எழுத்து இகழேல்.

ஏற்பது இகழ்ச்சி.

தந்தை தாய்ப் பேண்.

நன்றி மறவேல்.

இளமையில் கல்.

செய்வன திருந்தச் செய்.

சோம்பித் திரியேல்.

நன்மை கடைப்பிடி.

தெய்வம் இகழேல்.

# கமல் வாசகம்

## மூன்றும் புத்தகம்



ஆசிரியர்

**வித்துவான் ரா. விசுவநாதன்** எம்.ஏ., பி.ஓ.எல்.

(முன்பு) சென்னை, பிரஸிடென்ஸி காலேஜ் தமிழ்ப் பேராசிரியர்

&

**பண்டிதர் செ. முத்துரத்ன முதலியார்,**

(முன்பு) திருவாரூர், அரசியல் உயர்தரக் கலாசாலைத் தலைமைத் தமிழ்ப் பண்டிதர்.

V.P.H ★ VIJAYAPURAM ★ TIRUVARUR R.T.N



**விவேகானந்தா பதிப்பகம்**

விஜயபுரம் : : திருவாரூர் ஜங்.

பதிப்புரிமை 1955 [விலை 7 அணா

# முகவுரை

இவ்வகுப்பிற்குரிய பாடத் திட்டத்தில் வாய்ப் பேச்சு, நாடகம் நடித்தல், செய்யுள் படித்தல், அதனைப் பாராமற் சொல்லுதல், உரக்கப் படித்தல், மௌனப் படிப்பு, கையெழுத்து, இலக்கண அறிவு இவற்றிற்கு வகைகள் குறிக்கப் பெற்றுள்ளன. முதலும் முடிவும் கொண்ட சிறிய நிகழ்ச்சிகளைப் பற்றிப் பேசவும், ஏறக் குறைய 500 புதிய சொற்களை அறியவும், முடிந்தவரை யில் வாயை அசைக்காமல் தாமே படித்தறியவும், படித்த பாடங்களின் இடைக்கருத்தை உணரவும், கதைகளின் சுருக்கத்தைக் கூறவும், பிள்ளைகள் பயிற்றப்பட வேண்டுமென்றும், வேகமாகவும், விளக்க மாகவும் எழுதக் கற்றுக்கொள்ள வேண்டுமென்றும் இரண்டு மூன்று வாக்கியங்களில் விடைகள் எழுதப் பயில வேண்டுமென்றும், இலக்கணத்தில் பெயர், வினை, ஒருமை, பன்மை இவற்றை உணர வேண்டு மென்றும், முற்றுப் புள்ளியின் பயனை அறிய வேண்டு மென்றும், தமிழ் நெடுங்கணக்கு வரிசையைக் கற்க வேண்டுமென்றும் அத்திட்டம் வரையறுக்கின்றது. அன்றியும் மாணவர்கள் கடிதங்களுக்கு முகவரி எழுதும் முறையையும் அதன் பயனையும் நன்கு உணர வேண்டு மென்றும் அரசியலார் வற்புறுத்துகின்றனர்.

இவற்றோடு தமிழறிவு, நாட்டு அன்பு, அழகு உணர்ச்சி, நல்லொழுக்கம், வீரம், நீதி ஆகியவற்றில் அன்பு போன்ற இன்றியமையாப் பண்புகள் மாணவர்

களிடம் அமைதல் இன்றியமையாதது. கதைகளையும் கவிதைகளையும் தாமே தேடிப் படிக்க ஆவலையும் அவர்களிடம் உண்டாக்க வேண்டும்.

இந் நோக்கங்கள் யாவற்றையும் மனத்திற் கொண்டு இப்புத்தகம் எழுதப் பெற்றுள்ளது. பயிற்சிகளும் அவ்வாறே கொடுக்கப் பெற்றுள்ளன. ஆசிரியர்கள் ஒவ்வொரு பாடத்தினுடையவும் அதன் கீழுள்ள பயிற்சிகளுடையனவுமான நோக்கங்களை உட்கொண்டு போதிப்பதனால் சிறந்த பயன்களை மாணவர் பெறுவர் என்பது திண்ணம். கண்டதைக் கொண்டு காணுதவற்றை அறிவதே அறிவுப் பெருக்கத்துக்கு வழியாதல் போல, படிக்கும் பாடங்களைக்கொண்டு அவற்றை ஒட்டிய பிற செய்திகளையும் பிள்ளைகள் அறிந்து கொள்ள உதவ வேண்டுமென்பதும் கவனிக்கத்தக்கது.

இச் சிறிய புத்தகம் மாணவ உலகுக்குச் சிறந்த பயனை அளிக்க உதவ வேண்டுமென்று இறைவன் திருவருளை வணங்குகிறோம்.

**பிரசுரகர்த்தர்.**

# பொருளடக்கம்





## செய்யுட் பகுதி

# 1. காவிரி

தமிழ் நாட்டின் பெருமைக்கு அதன் ஆறுகளே சிறந்த காரணம். காவிரி, தென் பெண்ணை, பாலாறு, வைகை, தாம்பிரபரணி போன்ற ஆறுகள் நம் நாட்டுக்கு அழகையும் பெருமையையும் கொடுக்கின்றன. இவற்றுள் காவிரி ஆறே மிகச் சிறந்தது என்று எல்லாராலும் கொண்டாடப்படுகிறது.

'சோழ நாடு சோறுடைத்து' என்ற பழமொழியை நீங்கள் கேட்டிருக்கிறீர்களா? அதன் பொருள் சோழ நாடு மிகுந்த சோற்றைப் படைத்திருக்கிறது என்பது. இப்பொழுது தஞ்சாவூர், திருச்சிராப்பள்ளி ஜில்லாக்களே சோழ நாடு எனப்படும். இந்த ஜில்லாக்கள் நெல்லுக்கு மிகவும் பேர் போனவை. அப்பெருமைக்குக் காரணம் அவற்றில் பாயும் காவிரி நதியே.

அந் நாட்டு மக்கள் காவிரியைத் தம் தாய் என்று நினைக்கிறார்கள்; காவிரியை ஒரு தெய்வமாகவும் கொண்டாடுகிறார்கள். அதில் புது வெள்ளம் வரும்பொழுது அவர்கள் அதனை ஒரு விழாவாகக் கொண்டாடுகிறார்கள். புலவர்கள் அதைப் பற்றிப் பல பாடல்கள் பாடுகிறார்கள்.

காவிரி இவ்வாறு பெருமைகள் பெறக் காரணம் என்ன? அதன் நீரே அவற்றிற்குக் காரணம். காவிரி மேற்கே குடகு மலையில்



சிவசமுத்திரம் நீர்வீழ்ச்சி

தோன்றி ஓடிவருகிறது. அங்கே பெரு மழை பொழிவதால் ஆற்றில் நிரம்ப நீர் வருகிறது. ஆறு மைசூர் வழியாக ஓடி நம் நாட்டில்

நுழைகிறது. பல சிறிய ஆறுகள் அதிலிருந்து பிரிந்து நிலங்களுக்கெல்லாம் தண்ணீரைக் கொடுக்கின்றன. குடியானவர் அந் நீரைக் கொண்டு நெல், கரும்பு முதலியவற்றைப் பயிரிடுகிறார்கள். மக்களுக்கு உணவு இன்றி யமையாதது என்பதை நீங்கள் அறிவீர்கள். ஆகவேதான் அவர்கள் காவிரியை மிகவும் கொண்டாடுகிறார்கள்.

காவிரியின் கரையோரங்களில் பெரிய பட்டணங்களும் ஊர்களும் எழுந்துள்ளன. அவற்றில் சிறந்த செல்வர் வாழ்கிறார்கள். அவர்கள் அங்கே பெரிய கோயில்களைக் கட்டியிருக்கிறார்கள். சிறந்த பள்ளிக்கூடங் களையும் வைத்திருக்கிறார்கள். இப்படிக் காவிரி கரை பல வழிகளிலும் செழித்து விளங்குகிறது.

காவிரி சில இடங்களில் மலையிடங்களி லிருந்து கீழே குதிக்கிறது. இவ்வாறு விழுவதை நீர் வீழ்ச்சி என்பார். மைசூர் நாட் டில் உள்ள சிவசமுத்திரம் என்ற இடத்தில் உள்ள நீர்வீழ்ச்சி மிக மேன்மையானது. அது பார்க்க மிக விநோதமாய் இருக்கும்.

இன்னும் காவிரி ஆற்றின் சிறப்புக்கள் எத்தனையோ உண்டு. நீங்கள் பெரியவர் களாகும் போது அவற்றை அறிவீர்கள்.

## பயிற்சி

### சொற்கள்

| | | |
|---|---|---|
| நாடு | கொண்டாடு | பொழி |
| பெருமை | பழமொழி | இன்றியமையாதது |
| சிறந்த | வெள்ளம் | செல்வர் |
| காரணம் | நீர்வீழ்ச்சி | செழித்து |
| விநோதம் | மேன்மை | பயிரிடு |

### எழுத்து

**அ, ஆ, இ, ஈ, உ, ஊ, எ, ஏ, ஐ, ஒ, ஓ, ஔ.**

இவற்றைப் படி.

இவற்றை வரிசையாகச் சொல்.

இவற்றிற்கு **உயிரெழுத்துக்கள்** என்பது பெயர்.

கீழே உள்ள சொற்களில் உயிரெழுத்துக்களை மட்டும் பிரித்துச் சொல்.

**அவற்றில். ஆற்றோரம். இப்படி. ஈசன். உள்ள. ஊர். எத்தனை. ஏற்றம். ஐந்து. ஒரு. ஓரம். ஔவை.**

### வினாக்கள்

விடை கூறு

(1) தமிழ்நாட்டு நதிகளுள் சிலவற்றின் பெயர் களைக் கூறு.

(2) சோழ நாடு எதற்குப் பெயர் போனது?

(3) ஆற்று விழா உங்கள் ஊரில் கொண்டாடப் படுகிறதா? அந்த விழாவின் பெயர் யாது?

(4) காவிரி எங்கே தோன்றுகிறது?

(5) காவிரி ஆறு மக்களுக்கு எப்படிப் பயன் படுகிறது?

(6) காவிரியின் நீர்வீழ்ச்சிகளுள் மேன்மை யானது எது?

### பேச்சு

நீர் வீழ்ச்சியின் படத்தைப் பார். அதில் நீ பார்ப் பவை யாவை?

# 2. அண்டிரனும் சிங்கமும்




பல நாட்களுக்கு முன்னே அண்டிரன் என்ற ஒரு மனிதன் இருந்தான். அவன் ஓர் அரசனிடம் வேலை பார்த்து வந்தான். அவ் வரசன் மிகக் கொடியவன். அவனிடம் அண்டிரன் தாங்க முடியாத துன்பம் அடைந்தான். எப்படியாவது அரசனிடமிருந்து தப்பி ஓடிவிடவேண்டுமென்று அவன் எண்ணினன்.

அவன் இருந்த ஊருக்குத் தொலைவிலே பெரிய காடொன்றிருந்தது. அங்கே சிங்கம் புலி, கரடி, மலைப் பாம்பு முதலியன நிரம்ப இருந்தன. ஆகையால் மக்கள் அங்கே போக அஞ்சினர்கள்.

அண்டிரன் அக்காட்டிற்குள் ஓடி ஒளிந்து கொண்டான். கொடிய அரசனுடன் வாழ்வதைவிட, கெட்ட விலங்குகளுடன் வாழ்வது நல்லதென்று அவனுக்குப்பட்டது. அங்கே காய்களையும் கனிகளையும் தின்று கொண்டும், குகைகளில் படுத்து உறங்கிக் கொண்டும் அவன் காலம் கழித்து வந்தான்.

ஒரு நாள் ஒரு சிங்கம் நொண்டிக் கொண்டு அண்டிரன் இருந்த குகையை நோக்கி வந்தது. அதைக் கண்டு அண்டிரன் அஞ்சவில்லை. அவன் அதனிடம் அன்போடு சென்றான். சிங்கமும் அவனண்டை வந்து நின்றது.

அண்டிரன் சிங்கத்தின் காலை மெதுவாகப் பிடித்துக்கொண்டு அதன் உள்ளங் காலைப் பார்த்தான். அதனுள் மிகப் பெரிய முள் ஒன்று தைத்திருந்தது. அவன் அதை மெதுவாகப் பிடுங்கினான். சிங்கத்தின் கால் வலி போய்விட்டது. அன்று முதல் அண்டிரனும் சிங்கமும் நண்பர்களாகி விட்டார்கள்.

இப்படியிருக்கும் போது அண்டிரனைப் பிடிக்கும் பொருட்டு அரசன் சில வேலையாட்களுடன் அக் காட்டில் குதிரைமீது வந்து கொண்டிருந்தான். மரங்கள் அடர்ந்த ஓரிடத்தில் அவர்கள் வந்து கொண்டிருந்த

போது எங்கிருந்தோ ஒரு சிங்கம் வெளியே வந்தது. அது ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்து அரசன் ஏறி வந்த குதிரையைக் கடித்து அதைக் கீழே தள்ளிவிட்டது. இன்னும் ஒரு கணத்தில் அரசனையும் அது கொன்றிருக்கும். எங்கிருந்தோ அண்டிரன் அங்கே வந்தான். அவனைக் கண்டவுடன் சிங்கம் நாய்போல் அடங்கி அவனிடம் சென்றது. அவன் அதை தட்டிக் கொடுக்க அது சினம் அடங்கிச் சாதுவாகி விட்டது.

அரசன் அடைந்த வியப்பைச் சொல்லவும் வேண்டுமோ? அவன் அண்டிரன் கால்களில் விழுந்து, அவனுக்குத் தான் செய்த தீமைகளுக்கு மன்னிப்புக் கேட்டான். அவனை ஊருக்குத் திரும்பும்படி அவன் அழைத்தான். ஆனால் அண்டிரன் அதற்கு இணங்கவில்லை. சிங்கத்தோடு வாழ்வதையே அவன் மேலானதாகக் கருதினான், அரசன் வருத்தத்துடன் தன் ஊர் திரும்பினான்.

### பயிற்சி

#### சொற்கள்

| | | |
|---|---|---|
| கொடியவன் | குகை | அடர்ந்த |
| துன்பம் | அண்டை | கணம் |
| தொலைவு | உள்ளங்கால் | வியப்பு |
| நிரம்ப | பொருட்டு | இணங்க |

இவற்றைப் படி.

கொடியவன் - நல்லவன்　பெரிய - சிறிய
கெட்ட - நல்ல　நல்லது - தீயது
அண்டை - தூரம்　உள்ளங்கால் - புறங்கால்
வெளியே - உள்ளே　தீமை - நன்மை
மேல் - கீழ்

## எழுத்து

**க், ங், ச், ஞ், ட், ண், த், ந், ப், ம், ய், ர், ல், வ், ழ், ள், ற், ன்.**

இவற்றைப் படி.

இவற்றை வரிசையாகச் சொல்.

இவற்றிற்கு **மெய்** எழுத்துக்கள் என்பது பெயர்.

மேல் வரியில் உள்ள சொற்களில் மெய் எழுத்துக்களை எடுத்து எழுது.

## படி

(1) கொடுங்கோல் மன்னன் வாழும் நாட்டில் கடும்புலி வாழும் காடு நன்றே

(2) விலங்குகளும் அன்பால் கட்டுப்படும்.

(3) தீமை செய்தார்க்கும் நன்மை செய்ய வேண்டும்.

## வினாக்கள்

(1) அரசன் அண்டிரனை எப்படி நடத்தினான் ?

(2) அண்டிரன் எங்கே ஓடினான் ?

(3) காட்டில் வாழும் கொடிய விலங்குகள் சிலவற்றின் பெயர்களைக் கூறு.

(4) சிங்கம் அண்டிரனிடம் எப்படி வந்தது ?

(5) அண்டிரன் அதற்குச் செய்த உதவி என்ன ?

(6) அண்டிரனும் சிங்கமும் எப்படி வாழ்ந்தார்கள் ?

(7) அரசன் காட்டுக்கு ஏன் போனான் ?

(8) அங்கே அவனுக்கு நேர்ந்தது என்ன ?

(9) அண்டிரன் அவனை எப்படிக் காத்தான் ?

(10) அரசன் அண்டிரனை என்ன வேண்டினான் ?

# 3. அணில்




நம்மைச் சூழ்ந்து எத்தனை உயிர்ப் பிரா ணிகள் இருக்கின்றன? அவற்றை நாம் ஊன்றிப் பார்க்க வேண்டும். அவற்றின் பழக்க வழக்கங்களையும் நாம் ஆராய வேண் டும். அவ்வாறு செய்வதால் நமக்கு எவ் வளவோ விந்தையான அறிவு உண்டாகும்.

அணில் நம்மோடு வாழும் பிராணிகளுள் ஒன்று. அதன் முதுகிலுள்ள கோடுகளைப் பாருங்கள். அக்கோடுகள் அழகானவை. அணிலை நாம் பிடித்து வளர்க்கலாம். ஆனால் சிறிய குஞ்சாய் இருக்கும்போதே பிடித்து வளர்ப்பது நல்லது.

வீடுகளின் இறைப்புக்களில் அணில் கூடு கட்டுவதை நீங்கள் பார்த்திருக்கிறீர்களா? பஞ்சு, சணல், நார் இவற்றைக் கொண்டு அணில் கூடுகட்டும். தாய் அணில் தன் குஞ்சுகளைக் கூடுகளிலே வைத்து வளர்க்கும். குஞ்சுகளுக்குத் தாய் அணில் இரை தேடிக் கொண்டு வந்து கொடுப்பதை நீங்கள் காண வேண்டும்.

வீட்டுக் கூரைகளின்மீதும் மரக் கிளை களிலும் அணில் ஓடிச் செல்வதைப் பாருங் கள். அதற்கு முன்னங் கால்களைவிடப் பின்னங்கால்கள் நீளமானவை. அப்படிக் கால்கள் அமைந்திருப்பதால் அதனால் நன்றாகத் தாவ முடிகிறது.. சில அணில்கள் பதினறடி தூரங்கூடத் தாவுமாம்.

அணிலுக்குக் கொட்டைகள், பழங்கள் இவற்றினிடத்தில் விருப்பம் அதிகம். அணில் ஒரு கொட்டையைத் தன் முன்னங்கால்களில் இடுக்கிக் கொண்டு தின்பதைப் பார்ப்பது விநோதமாயிருக்கும். அணிலுக்குச் சோறு, பால், ரொட்டி ஆகியவும் உணவாகும். நெல் முதலிய தானியங்களையும் அது உரித்துத் தின்னும்.

அணிலின் வாலைப் பாருங்கள். அது மெல்லிய மயிரடர்ந்து பார்ப்பதற்கு அழகாய்

இருக்கும். அணில் ஓரிடத்திலிருந்து மற்ருே ரிடத்துக்குத் தாவும் போதும் ஓர் உயரத்தி லிருந்து கீழே குதிக்கும் போதும் அதன் வால் அதற்குப் பெரிதும் பயன்படுகிறது. வால் அணிலின் வேகத்தைக் குறைத்து அதற்குத் தீங்கு விளையாமல் உதவுகிறது.

அணிலுக்குப் பற்கள் மிகக் கூர்மை யானவை. தச்சன் உளிபோல் அவை கெட்டி யான பொருள்களைச் செதுக்கவும் இழைக்க வும் உதவுகின்றன.

அணில் எலி இனத்தைச் சேர்ந்தது. சுண்டெலி, முயல், குழிமுயல் முதலியனவும் இவ்வினத்தைச் சேர்ந்தனவே. ஆனுல் அவை ஒவ்வொன்றுக்கும் உள்ள வேற்றுமைகள் பல.

## பயிற்சி

### சொற்கள்

| | | |
|---|---|---|
| ஊன்றி | விந்தை | சணல் |
| பழக்கம் | இறைப்பு | நார் |
| வழக்கம் | பஞ்சு | கூரை |
| தாவு | உளி | குதி |
| இடுக்கி | இனம் | குறை |
| முதலிய | வேற்றுமை | செதுக்கு |

### படி

| | |
|---|---|
| பழக்கவழக்கம் | முன்னங்கால் |
| ஊன்றிப்பார் | பின்னங்கால் |
| இரைதேடு | ஒவ்வொன்று |

### வேற்றுமை என்ன ?

வாழ், வாள், வால், வாய், வார்.

வீடு, விடு, வடு, வாடு.

கொட்டை, கொடை, கோட்டை.

### எழுத்து

உயிர் எழுத்துக்கள் யாவை ?

மெய் எழுத்துக்கள் யாவை ?

**இ, பா, மோ** இவற்றில் உயிரும் மெய்யும் கூடி இருப்பதைக் காணுங்கள், இப்படியே **க, கா, கி, கீ, கு, கூ, கெ, கே. கை, கொ, கோ, கௌ** என்று உயிரும் மெய்யும் கூடி **உயிர் மெய்** எழுத்துக்கள் ஆகும்.

இந்தப் பாடத்தில் முதல் பாராவிலுள்ள **உயிர் மெய்** எழுத்துக்களை எடுத்து எழுது.

### வினாக்கள்

(1) நம்மைச் சூழ்ந்து வாழும் உயிர்ப்பிராணி களில் சிலவற்றின் பெயர்களைச் சொல்லு.

(2) அணில் எங்கே கூடு கட்டும் ?

(3) அணில் தாவுவது எப்படி ?

(4) அணில் எவற்றைத் தின்னும் ?

(5) அணிலுக்கு அதன் வாலினால் என்ன பயன் ?

(6) அணில் பல் எதைப்போல் இருக்கிறது ?

(7) அணில் எந்த இனத்தைச் சேர்ந்தது ?

# 4. தபாற்காரன்



**பையன் :** அம்மா, இதோ தபாற்காரர் வருகிறார் பார்! அவர் நம் வீட்டைத் தான் நோக்கி வருகிறார்.

**தாய் :** ஆம். நம் வீட்டுக்குத் தபால் இருக்க லாம். [தபாற்காரர் ஒரு கார்டைக் கொடுத்து விட்டுப் போகிறார்.]

**பையன் :** இந்தக் கார்டு நம் வீட்டுக்கு, என்று அவருக்கு எப்படித் தெரியும் அம்மா?

**தாய் :** இதோ பார், என் முகவரி இதோ இருக்கிறது. அதைப் பார்த்து அவர் அதைக் கொடுக்கிறார்.

**பையன் :** ஆம். அம்மா! உன் பெயர் எழுதி யிருக்கிறது.

**தாய் :** எங்கே அதை முழுவதும் படி ; பார்ப் போம்.

**பையன் :** படிக்கிறேன் அம்மா.

திரு, நீலாம்பிகை அம்மாள்,
46, வடக்கு வீதி,
**திருவாரூர்.**
தஞ்சாவூர் ஜில்லா.

உன் பெயர் எழுதியிருக்கிறது. பிறகு 46, வடக்கு வீதி என்று ஏன் எழுதியிருக் கிறது, அம்மா?

**தாய் :** திருவாரூர் பெரிய ஊர். இந்த ஊரில் என் பெயருடையவர்கள் எத்தனையோ பெயர்கள் இருப்பார்கள். அல்லவா? எனக்கு இந்தக் கார்டு வரவேண்டு மானல் நான் இருக்கும் தெருவின் பெயரும், வீட்டின் எண்ணும் தெரிய வேண்டாமா?

**பையன் :** ஆம், உண்மைதான். 46, வடக்கு வீதி என்று எழுதினல் போதாதோ?

**தாய் :** எப்படிப் போதும்? இந்த வீட்டில் நாம் எத்தனை பேர் இருக்கிறோம்?

யாருக்கு என்று தெரிந்தால் தானே நல்லது. இல்லாவிட்டால் ஒவ்வொரு வரும் இதனைப் படித்து, 'இது என்னுடையது அன்று; என்னுடையது அன்று' என்று சொல்லி மற்றொருவரிடம் கொடுக்கவேண்டும். இது பெரிய தொல்லையன்றோ ?

**பையன் :** ஆம், அம்மா! இப்பொழுது முகவரி எழுதுவதன் பயனைத் தெரிந்து கொண்டேன். அப்படி விளக்கமாய் எழுதப்படுவதால்தான் தபாற்காரர் தப்பாமல் தபால்களைக் குறித்த இடங்களில் கொடுத்துச் செல்கிறார். நானும் ஒரு முகவரி எழுதப் போகிறேன். அம்மா, என் மாமாவின் முகவரியை எழுதட்டுமா ?

## பயிற்சி

### சொற்கள்

| | | |
|---|---|---|
| நோக்கி | முகவரி | பயன் |
| தபால் | அன்று | விளக்கம் |
| கார்டு | வீதி | தப்பு |
| இன்னொருவர் | மற்றொருவர் | ஒவ்வொருவர் |

படி—வேற்றுமை என்ன ?

| | |
|---|---|
| வடு, வாடு. | நிலம், நீளம். |
| விடு, வீடு. | என், எண். |
| கொடு, கோடு. | விளக்கு, விலங்கு. |

## எழுத்து

உயிர் மெய் எழுத்துக்கள் எல்லாவற்றையும் ஒரு பாடமாக எழுது.

## வினுக்கள்

(1) தபாற்காரர் கார்டுகளோடு இன்னும் என்ன கொண்டு வருகிருர் ?

(2) உன் தந்தை, ஆசிரியர், மாமன் இவர்களின் முகவரிகளை எழுது.

(3) கோயம்புத்தூர் ஜில்லா, பல்லடம் தாலுக்கா பெரிய பாளையம், கம்பளி நெசவு, குப்பமுத்து ரெட்டியார் மகனர்.

இதை நேரானபடி எழுது.

உங்கள் வீடுகளில் வரும் தபால்கள் எங்கெங்கே இருந்து வருகின்றன ? அவற்றை எழுதுகிறவர் யாவர் ? எவரேனும் மூன்று பேர்களின் முகவரிகளை நேரான முறையில் எழுதிக் காட்டு.

# 5. குடுகுடுப்பைக்காரர்



குடு! குடு! குடு! குடு!
குடு! குடு! குடு! குடு!
சாமியார்க் கெல்லாம்
தைரியம் வளருது;
தொப்பை சுருங்குது;
சுறு சுறுப்பு விளையுது;
எட்டு லட்சுமியும்
ஏறி வளருது;
பயம் தொலையுது;
பாவம் தொலையுது;
சாத்திரம் வளருது;
சாதி குறையுது;
நேத்திரம் திறக்குது;
நியாயம் தெரியுது;
பழைய பயித்தியம்
படீலென்று தெளியுது;
வீரம் வருகுது;
மேன்மை கிடைக்குது.
சொல்லடி சக்தி!
மலையாள பகவதி!
தருமம் பெருகுது;
தருமம் பெருகுது.
குடு! குடு! குடு! குடு!
குடு! குடு! குடு! குடு!

—ஸ்ரீ சுப்பிரமணிய பாரதியார்.

## பயிற்சி

### சொற்கள்

| | | |
|---|---|---|
| தைரியம் | சுறுசுறுப்பு | தொலை |
| தொப்பை | லட்சுமி | சாத்திரம் |
| சுருங்கு | பயம் | நேத்திரம் |
| சக்தி | நியாயம் | பயித்தியம் |
| பகவதி | வீரம் | படைவென்று |

### படி

**தைரியம், பயம், வீரம், நியாயம், மேன்மை, மலையாள பகவதி, கடைக்காரன், குடுகுடுப்பைக்காரன், வீட்டுக் காரன்.**

### எழுத்து

உரக்கப்படி

தொப்பை, தோப்பு.
சுறுசுறுப்பு.
எடு, ஏடு, எட்டு.
சாத்திரம், நேத்திரம், பாத்திரம், கோத்திரம்,

### வினாக்கள்

(1) எவை வளர்கின்றன ?
(2) எவை தொலைகின்றன ?
(3) எது திறக்கிறது ?
(4) எது கிடைக்கிறது ?

1. இந்தப் பாடலை இராகத்துடன் பாடி நடி.

2. குடுகுடுப்பைக்காரன் நம் நாடு முன்னேற வழிகளைக் கூறுகிறான். இது உண்மையா ?

# 6. குடியானவனும் அவன் மக்களும்




முன்னொரு காலத்தில் ஓரூரில் ஒரு குடியானவன் இருந்தான். அவன் வீட்டைச் சுற்றி அவனுக்குச் சிறிதளவு நிலம் இருந்தது. ஆனால் அதன் பெரும் பகுதி காடும் கறம்புமாய் இருந்தது. அதையெல்லாம் வெட்டிச் சமனாக்கி உழுது பயிர் செய்தால் நலமாகும் என்று அவன் கருதினான். ஆனால் அவனால் எல்லா நிலத்தையும் செப்பனிட முடியவில்லை.

அவனுக்கு நான்கு பிள்ளைகள் இருந்தனர். அவர்கள் ஆண்டுகள் ஏறி வளர்ந்திருந்தாலும் சோம்பேறிகளாக

தார்கள். குடியானவனுக்கு உதவியாக அவர்கள் வேலே செய்ய முன் வரவில்லே.

இப்படியிருக்கக் குடியானவனுக்கு வயது முதிர்ந்து விட்டது. அவனுக்கு இறக்கும் நேரமும் நெருங்கிவிட்டது. அவன் அப்போது தன் மக்களே அருகில் அழைத்து, "என் அருமை மக்களே! உங்களுக்கு ஓர் இரகசியம் கூற விரும்புகிறேன். நம் நிலத்தில் ஏதோ ஓர் இடத்தில் என் தகப்பஞர் நான்கு குடங்களேப் புதைத்து விட்டு இறந்து போஞர். அக்குடங்கள் நிரம்ப, பொன்னும் மணியும் இருக்கின்றன. ஆனல் அந்த இடம் இன்னதென்பது எனக்குத் தெரியாது. என் ஆயுளுள் அவற்றைத் தோண்டி எடுக்க எனக்கு முடியாமல் போயிற்று. உங்களுக்கு விருப்பமானல் நீங்கள் அவற்றை வெட்டி எடுத்துக்கொள்ளலாம்" என்று சொன்னன். இவ்வாறு சொன்ன சில நாட்களுள் அவன் இறந்து போனன்.

மக்களுக்குப் புதையலே எடுக்கவேண்டுமென்ற ஆசை உண்டாயிற்று. அவர்கள் மண்வெட்டி, குத்துப்பாறை, குந்தாலி முதலிய கருவிகளேக் கொண்டு நிலம் முழுமையும் தோண்டத் தொடங்கினர்கள். சில

நிலம் முழுமையும் பள்ளமாயிற்று. காடுக ளெல்லாம் அழிந்தன. ஆனால் பொற் குடங்கள் அகப்படவில்லை.

ஆனால் அவர்கள் மனம் சோரவில்லை. நன்ருகத் திருந்திய நிலத்தில் அவர்கள் நெல், கரும்பு, சோளம், கேழ்வரகு முதலிய வற்றைப் பயிர் செய்தார்கள். அவர்களுக்கு நல்ல வருமானம் உண்டாயிற்று. சில ஆண்டு களில் அவர்கள் சிறந்த பணக்காரர்கள் ஆனார்கள்.

தந்தை சொன்ன சொல்லின் பொருள் அவர்களுக்கு அப்பொழுதுதான் புலப் பட்டது.

## பயிற்சி

### சொற்கள்

| | | |
|---|---|---|
| முன்னொரு | நிரம்ப | செப்பனிட |
| குடியானவன் | தோண்டு | சோம்பேறி |
| சிறிதளவு | விருப்பம் | உதவி |
| முதிர்ந்து | பகுதி | ஆயுள் |
| அருகில் | கறம்பு | குந்தாலி |
| இரகசியம் | சமன் | பள்ளம் |

### படி-வேற்றுமை கூறு.

காலம், கலம், களம். நிலம், நீலம், நீளம்.
அண்டு, ஆண்டு. இர, இற.
வெட்டு, வேட்டு.

## எழுத்து

### ர. ற.

### உரக்கப்படி

*மரம் முறம் - பரக்க பறக்க சார் சாறு*
*பாரை பாறை கர கற கரும்பு எறும்பு.*

### படி

### உழைப்பே உயர்வு தரும்.

### முற்றுப்புள்ளி

*இப்பாடத்தில் முற்றுப்புள்ளிகள் எங்கெங்கே இடப்பட்டுள்ளன பார்.*

### வினாக்கள்

*(1) குடியானவனின் நிலம் எப்படி இருந்தது?*

*(2) குடியானவன் மக்களால் அவனுக்கு ஏன் உதவி இல்லை?*

*(3) அவன் மக்களை நோக்கி என்ன கூறினான்?*

*(4) அவர்கள் எப்படி வேலை செய்தார்கள்?*

*(5) அவர்களுக்குப் புதையல் கிடைத்ததா?*

*(6) அவர்கள் நிலத்தில் என்ன என்ன பயிரிட்டார்கள்?*

*(7) தந்தை சொன்ன சொல்லின் பொருள் என்ன?*

---

# 7. மூடர்கள் ஆற்றைக் கடந்தது



ஒரூரில் ஒரு குரு இருந்தார். அவருக்கு **முழுமூடர்** என்பது பெயர். அவரிடம் மட்டி, மடையன், மூடன், முட்டாள் என்ற நான்கு மாணவர்கள் இருந்தனர். அவ் வைவரும் ஊர் ஊராய்ச் சென்று கொண்டிருந்தனர். ஓரிடத்தில் வழியில் குறுக்கே ஓர் ஆறு இருந்தது. ஆற்றில் சிறிதளவு நீர் ஓடிக் கொண்டிருந்தது.

அவர்களுக்கு அவ்வாற்றைக் கடப்பதற்கு அச்சமாயிருந்தது. மட்டி, "இது பொல்லாத ஆறு; இதில் மிக ஜாக்கிரதையாக நடக்கவேண்டும்" என்ருன்.

மடையன், "ஆம் என் பாட்டன் ஒருவனை ஓர் ஆறு தின்றுவிட்டது. நாம் இந்த ஆற்றை நம்பலாகாது" என்றான்.

எல்லோரும் ஒருவர் கையை ஒருவர் பிடித்துக்கொண்டு அடிமேல் அடி எடுத்து வைத்து நடக்கலாயினர். இவ்வாறு அவர்கள் மெதுவாக நடந்துமெல்ல அக்கரை போய்ச் சேர்ந்தார்கள். சேர்ந்தவுடன் குருவுக்கு ஓர் ஐயம் உண்டாயிற்று. அவர் தம் மாணவர்களை நோக்கி, "கடவுள் அருளால் இக் கொடிய ஆற்றைக் கடந்துவிட்டோம்; ஆனால் நாம் எல்லோரும் வந்துவிட்டோமா? என்று பார்க்கவேண்டும்" என்றார். எல்லோரும் அப்படியே எண்ணினார்கள்.

மூடன், "ஆ....,! நாம் எண்ணிப் பார்ப்போம்" என்று சொல்லித் தன்னை விட்டு விட்டு, "குரு ஒன்று; மட்டி இரண்டு; மடையன் மூன்று; முட்டாள் நான்கு" என்று எண்ணி, "ஐயோ நான்கு பேர்கள் தாமே இருக்கிறோம்" என்று அலறினான். எல்லோரும் திடுக்கிட்டுப் போய்விட்டார்கள். ஒவ்வொருவரும் மூடனைப்போலவே தன்னைத் தன்னை விட்டு விட்டு எண்ணினார்கள். ஒருவருக்கும் ஐந்து என்ற எண் வரவில்லை.

அச்சமயம் ஒரு வீரன் குதிரையின் மீது ஏறிக்கொண்டு சிறிதும் தயங்காமல் சலசல வென்று ஆற்றைக் கடந்துகொண்டு வந்தான். அவனைக் குரு பார்த்தார். அவன் ஒரு தெய்வ மென்றே அவர் எண்ணினார். அவர் அச்சத்துடன் எட்ட நின்று கொண்டே அவனைக் கும்பிட்டு, "ஐயா, நாங்கள் ஐவர் இவ்வாற்றைக் கடந்தோம்; இப்பாவி ஆறு ஒருவரை விழுங்கிவிட்டது; என்ன செய் வோம்?" என்று அழுது கொண்டே கூறினார்.

"அது எப்படி?" என்று அவன் கேட் டான். அவர் தம்மை விட்டுவிட்டுப் பிறரை எண்ணி, "மட்டி ஒன்று; மடையன் இரண்டு; மூடன் மூன்று; முட்டாள் நான்கு" என்றார். அவர்களுடைய அறியாமையைக் கண்டு அவன் நகைத்தான்.

அவன் அவர்களை நோக்கி, "நான் ஒவ் வொருவர் முதுகில் என் சவுக்கால் ஒவ்வோர் அடி அடிப்பேன்; நீங்கள் ஒன்று, இரண்டு என்று எண்ணிவாருங்கள்"என்றான். அதற்கு அவர்கள் ஒப்புக்கொண்டு அவன் தன் சவுக்கால் ஒவ்வொருவர் முதுகில் ஓங்கி ஒவ்வோரடி அடித்தான்.

குரு, "அப்பா! ஒன்று!" என்றார்.

மட்டி, "ஐயோ! இரண்டு!" என்று கூவினான்.

மடையன், "அப்பா! மூன்று" என்று அலறினான்.

மூடன், "ஐயையோ! நான்கு!" என்று கத்தினான்.

முட்டாள், "ஐயையோ! அப்பப்பா! ஐந்து!" என்று கதறினான்.

என்றாலும், ஐந்து பேர்களும் இருப்பதைக் கண்டு அவர்கள் மகிழ்ந்தார்கள். வீரன் அவர்களுடைய மூடத் தன்மையை நினைத்துத் தனக்குள் நகைத்துக் கொண்டே போனான்.

## பயிற்சி

### சொற்கள்

| | | |
|---|---|---|
| பொல்லாத | மாணவர் | திடுக்கிடு |
| பாட்டன் | அலறு | தயங்காமல் |
| கத்து | அக்கரை | கும்பிட்டு |
| குறுக்கே | ஒப்புக்கொள் | அறியாமை |
| முழுமூடர் | ஒவ்வொருவர் | ஐவர் |
| அடிமேல் அடி | ஊர் ஊராய் | சிறிதளவு |

இரு பொருள்கள் கூறு: மகிழ், நகை, ஐயம், கரை.

## எழுத்து

### ல ள

### படி

| | | | |
|---|---|---|---|
| கல் | கள் | வெல்லம் | வெள்ளம் |
| தலம் | தளம் | சல்லி | சுள்ளி |
| தலை | தளை | குல்லாய் | குள்ளன் |
| வலை | வளை | குலம் | குளம் |

### வினாக்கள்

(1) மூடர் ஐவரின் பெயர்களைக் கூறு.

(2) மடையன் ஆற்றின் கொடுமையைப்பற்றி என்ன சொன்னான்?

(3) ஐவரை நால்வராக எண்ணியது எப்படி?

(4) வீரனைத் தெய்வமென்று அவர்கள் எண்ணியது ஏன்?

(5) வீரன் எஃப்படி ஐவரையும் கண்டுபிடித்துக் கொடுத்தான்?

(6) மூடர்களின் முட்டாள்தனம் கதையில் எங்கெங்கே புலப்படுகின்றது?

இக்கதையை நாடகமாக நடித்துக் காட்டுக.

### முற்றுப்புள்ளிகளை இடு.

(1) ஒரூரில் ஒரு குரு இருந்தார் அவருக்கு முழு மூடர் என்பது பெயர்

(2) அப்பொழுது ஒரு வீரன் வந்தான் அவன் ஆற்றை வேகமாகக் கடந்துவந்தான் அவனைக் குரு பார்த்தார்

# 8. சிவாஜி

ஏறக்குறைய முந்நூற்றைம்பது ஆண்டு கட்கு முன்னே இந்தியாவை ஔரங்கசீப் என்ற சக்கரவர்த்தி ஆண்டுவந்தார். அவரு டைய தலைநகர் டில்லி. அவர் ஆட்சியின் கீழே பல சிறிய நாடுகள் இருந்தன; அவற் றைச் சிறிய மன்னர்கள் அரசாட்சி புரிந்து வந்தார்கள்.

அக்காலத்தில் மகாராட்டிர நாட்டிலே சிவாஜி என்ற ஒருவீரர் தோன்றினார். அவர் இளமை முதலே சிறந்த வீரராக விளங்கினார். அவருக்குப் பள்ளிப் படிப்பு இல்லை. என்ற லும் அவர் சிறந்த அறிவு வாய்ந்தவராகஇருந் தார். அவருக்குக் கடவுளிடம் நிரம்ப அன்பு உண்டு. அவர் பல தோழர்களைத் தம்முடன் சேர்த்துக்கொண்டு அருகிலிருந்த ஊர்கள் பலவற்றைப் பிடித்துக்கொண்டார். சக்கர வர்த்தி அவரை அடக்க ஆனமட்டும் பாடு பட்டார். அவர் பெரிய சேனைகளை சிவாஜியின் மீது ஏவினார்; அவரை எப்படியாவது பிடித்து விடவேண்டுமென்று அவர் பார்த்தார்; ஆனால் அப்படிச்செய்ய இயலவில்லை. முடிவில் அவர் ஒரு தந்திரத்தால் பிடித்துவிடவேண்டு மென்று எண்ணி அவருக்கு நல்ல வார்த்தை



சிவாஜி தப்பிப்போதல்

சொல்லியனுப்பி, அவரை டில்லிக்கு வரத் தூண்டினுர். சிவாஜியும் சக்கரவர்த்தியின் சொற்களே நம்பித் தம் புதல்வர் சாம்பாஜி யுடன் தலைநகருக்குச் சென்ருர்.

அங்கே ஔரங்கசீப் அவரையும் அவர் புதல்வரையும் நன்ருக நடத்தவில்லை. அவர் கள் தங்கியிருந்த வீட்டைச் சுற்றிக் காவல் போட்டு அவரை எங்கும் வெளியில் செல்ல முடியாதபடி தடுத்துவிட்டார். சிவாஜிக்கு ஒருபுறம் சினமும் ஒருபுறம் வருத்தமும் பொங்கின. என்ருலும் என்ன செய்வது? இவ்வாறு சில நாட்கள் கடந்தன.

சிவாஜி ஒரு தந்திரம் செய்ய எண்ணினுர். அவர் தினந்தோறும் நிரம்பத் திண்பண்டங் கள் செய்து பெரிய கூடைகளில் அவற்றை வைத்து டில்லியிலுள்ள தம் நண்பர்களின் வீடுகளுக்கு அனுப்பி வரலானுர். காவலாளி கள் அக்கூடைகள் வெளியேற இடங் கொடுத்து வந்தனர். சில நாட்களானவுடன் சிவாஜி தாம் ஒரு கூடையிலும் சாம்பாஜி ஒரு கூடையிலுமாக ஏறிக்கொண்டு அவ் வீட்டைவிட்டு மெதுவாக வெளியேறி விட் டார். காவலாளிகள் ஏமாந்து போயினர்.

சிவாஜி தம் ஊரை அடைந்தவுடன் தம் ஆட்களைக் கூட்டிக்கொண்டு ஔரங்கசீப்பின்

நாட்டைச் சின்னுபின்னமாக்கினுர். ஔரங்க சீப்பால் அவரை ஒன்றும் செய்ய முடிய வில்லை. சிவாஜி தாம் பிடித்த நாடுகளைத் தாமே ஆளத் தொடங்கினுர். அவர் தம் மக் களை மிக்க அன்புடன் நடத்தினுர். மக்களும் அவரிடம் பேரன்பு காட்டி வந்தனர்: அவர் நிலை நிறுத்திய நாடு நீண்டகாலம் நடை பெற்றது.

## பயிற்சி

### சொற்கள்

| | | |
|---|---|---|
| சக்கரவர்த்தி | இளமை | நிரம்ப |
| மன்னர் | என்றுலும் | தோழர் |
| மகாராட்டிரர் | வாய்ந்தவர் | அருகு |
| ஏறக்குறைய | பள்ளிப்படிப்பு | தலைநகர் |
| முந்நூறு | பலவற்றை | தினந்தோறும் |
| அரசாட்சி | ஆனமட்டும் | காவலாளி |
| இயல | புதல்வர் | காவல் |
| பொங்கின | தந்திரம் | தூண்டு |

இரு பொருள்கள் கூறு: ஆண்டு, ஆள், நாடு.

எதிர்ப்பதங்கள் ஒன்றன்முன் ஒன்ருகப் பொறுக்கி எழுது.

முன்னே, கீழே, சிறிய, இல்லை, பெரிய, உண்டு, பின்னே, மேலே.

### எழுத்து

உயிர் எழுத்துக்களை வரிசையாகச் சொல்லு.

மெய் எழுத்துக்களை வரிசையாகச் சொல்லு.

அஃது, இஃது, எஃது.

இச் சொற்களைப் படி.

ஃ இந்த எழுத்துக்கு **ஆய்தம்** என்பது பெயர்.

## வினாக்கள்

(1) இந்த வரலாறு நடந்து ஆண்டுகள் எத்தனை ஆயின ?

(2) அப்பொழுது இந்தியச் சக்கரவர்த்தி யார் ?

(3) அவருடைய தலைநகர் யாது ?

(4) சிவாஜி எந்த நாட்டினர் ?

(5) அவர் சக்கரவர்த்திக்கு எதிராகச் செய்தவை என்ன ?

(6) அவர் சிவாஜியை எப்படி டில்லிக்கு வரச் செய்தார் ?

(7) டில்லியில் சிவாஜிக்கு நடந்தது என்ன ?

(8) சிவாஜி செய்த தந்திரம் யாது ?

# 9. புல் சொன்ன கதை



முருகன் ஒரு நாள் மாலை நேரத்தைப் போக்கத் தன் ஊர்ப் புறத்திலுள்ள மந்தை வெளிக்குப் போனான். அதன் ஓரத்தில் ஒரு சிற்றாறு ஓடிக்கொண்டிருந்தது. அதன் கரைகளில் பல மரக் கிளைகளிலிருந்து பல பறவைகள் பாடிக்கொண்டிருந்தன. கதிரவன் மேற்றிசையில் சாய்ந்துகொண்டிருந்தான். காற்று ஜில்லென்று வீசிக்கொண்டிருந்தது.

முருகனோடு அன்று விளையாட ஒருவரும் வரவில்லை. அவன் தானே ஓடிக்கொண்டும்

பொழுது போக்கினுன். பொழுது போகும் சமயத்தில் அவன் களைத்துச் சற்றுநேரம் தரையில் படுத்தான். வண்டுகள் பூக்களின் மீதிருந்து பாடிக்கொண்டிருந்தன.

அப்பொழுது யாரோ அவனை அழைக்கும் குரல் அவன் காதில் விழுந்தது. அவன் திடுக்கிட்டான். அக்குரல், "முருகா! என் மீது நீ படுத்து என்னை நசுக்குகிருய். சற்று மெதுவாகப் படுத்துக்கொள்" என்றது.

முருகன் மிகவும் வியந்தான். பேசியது புல் என்று அவன் அறிந்தான். அவன் மெதுவாக எழுந்து உட்கார்ந்துகொண்டு, புல்லைப் பார்த்து, "புல்லே! அழாதே! நீ பேசுவதைக் கேட்க எனக்கு மகிழ்ச்சி உண்டாகிறது. உன்னேடு நான் சிறிதளவு பேசலாமா?" என்ருன்.

அதற்குப் புல், "முருகா, என் கதை மிக இரக்கமானது. அதை யார் கேட்க விரும்புவார்கள்? வேண்டுமானுல் சொல்லுகிறேன்" என்றது.

அதற்கு முருகன், "உன் கதையைச் சொல். எனக்குக் கேட்க விருப்பமாயிருக்கிறது" என்ருன்.

புல் பேசிற்று.

"நான் மிக எளியவன். எனக்குப் புல்

எளியது என்பது பொருள். நான் ஒருவருக்கும் தீங்கு விளைவிப்பதில்லை. கோடிக்கணக்கான எறும்புகள், புழுக்கள், கறையான்கள், பூச்சிகள் முதலியவற்றிற்கு நான் வாழ இடம் கொடுக்கிறேன். என் விதைகளையும், வேர்களையும், இலைகளையும், பூக்களையும், காய்களையும் தின்று அவை பிழைக்கின்றன. நான் பச்சைப் பசேலென்றிருந்து யார்க்கும் கண்ணுக்குக் குளிர்ச்சி அளிக்கிறேன். விடியற்காலத்தில் என் நுனிமீது நீர்த்துளிகள் முத்துப்போல் நின்று பலகோடி சூரியர்களைப் போல் விளங்குவதை நீ பார்த்திருப்பாய்.

இப்படியிருந்தும் ஆடு மாடுகள் என்னை மிதித்துக் கடித்து மேய்கின்றன. மனிதர்கள் அரிவாள், களைக்கொத்து முதலிய கொடிய கருவிகளைக்கொண்டு என்னை வெட்டியும் பெயர்த்தும் தள்ளுகிறார்கள். பிள்ளைகள் தாறுமாறாக ஓடி என்னையும் என் பிள்ளைகளையும் நசுக்குகிறார்கள். இதுவே என் கதை" என்றது.

முருகனுக்குப் புல்லினிடம் இரக்கம் உண்டாயிற்று. இனி அதனைத் தொல்லை செய்வதில்லையென்று அவன் தீர்மானித்தான். அப்படியே அதனிடம் சொல்லிவிட்டு அவன் தன் வீடு திரும்பினான்.

## பயிற்சி:

### சொற்கள்

| | | |
|---|---|---|
| புறம் | ஜில் | தாண்டு |
| ஓரம் | வீசு | சமயம் |
| கதிரவன் | தாவு | வண்டு |
| அழை | நசுக்கு | இரக்கம் |
| குரல் | மெது | விருப்பம் |
| திடுக்கிடு | விய | விருப்பு |
| எளியவன் | பொருள் | கறையான் |

இரு பொருள்கள் கூறுக:
மாலை, சமயம் பெயர்.

### பெயர்ச்சொல்

(1) உங்கள் **பெயர்களைச்** சொல்லுங்கள்.

(2) இந்த அறையிலுள்ள பெயர்களைச் சொல்லுங்கள்.

இச் சொற்கள் எல்லாம் **பெயர்ச் சொற்கள்.**

### வினாக்கள்

(1) மாலை நேரத்தில் என்ன என்ன உண்டாயின?

(2) முருகன் எப்படிப் பொழுது போக்குகிறான்?

(3) புல் முருகனிடம் முதலில் என்ன சொல்விற்று?

(4) புல் என்ற பெயருக்குப் பொருள் என்ன?

(5) புல்லிடம் வாழ்பவை யாவை?

(6) புல் படும் துன்பங்கள் யாவை?

(7) முருகன் என்ன தீர்மானித்தான்?

(8) 'அற்பம் அற்பமன்று' என்ற தலைப்பை இப்பாடத்திற்குக் கொடுக்கலாமா?

புல் சொன்ன கதையை முருகன் தன் தம்பியிடம் சொல்வதுபோல் சொல்.

# 10. இளையான்குடி மாறனார்

## ஒரு நாடகம்



### காட்சி 1

[இரவு, மழை பெய்கிறது. இளையான் குடி மாறனார் தம் மனைவியுடன் பேசுகிறார்.]

**இளையான்குடி மாறனார் :** பெண்ணே! நான்கு நாட்களாய் நீ உண்ணவே இல்லை; இந்த இலைகள் வாய்க்கு நன்றாய் இருக்கின்றன. இவற்றையாவது தின்று, சிறிதளவு தண்ணீர் அருந்து. உயிர் நிலைக்க வேண்டாமா ?

**மனைவி :** தலைவரே ! தாங்கள் பட்டினிகிடக்கும் போது நான் மட்டும் உண்பேனோ ?

**இளையான் :** நான் தின்று விட்டேன். நாம் இதுவரையில் ஒருவருக்கும் ஒரு குற்றமும் எண்ணியதில்லை. கடவுள் ஏன் நமக்கு இவ்வளவு வறுமையைக் கொடுக்க வேண்டுமோ!

(வாசலில் யாரோ ஒருவர் கதவைத் தட்டுகிறார்.)

**மனைவி .** யாரோ கதவைத் தட்டுகிறார்கள். போய்ப் பார்த்து வாருங்கள். நான் இந்த இலையைத் தின்கிறேன்.

## காட்சி 2

*[மாறனார் ஒரு கிழவருடன் வருகிறார்.]*

**மாறனார் :** பெண்ணே ! இந்தக் கிழவரைப் பார். மழையில் உடலெல்லாம் நனைந்து நடுங்குகிறார். பசி காதடைக்கிறதாம். நாம் என்ன செய்வோம்? சிவபிரானே! இப்படியா எங்களைச் சோதிக்க வேண்டும் ?

**மனைவி ;** ஐயா ! இப்பொழுது மனந்தளரக் கூடாது. இந்நேரத்தில் நாம் இவரை வெளியே அனுப்பவும் கூடாது ; இவர் குளிராலும் பசியாலும் இறந்து விடுவார். புறக்கடையில் கூரை விழுந்து விட்டதல்லவா? அதிலிருந்து சில மூங்கில்களை எடுத்து, அடுப்பு மூட்டி

இவருக்கு வெந்நீர் வைத்துக் கொடுக்கிறேன்.

நீங்கள் வயலுக்குப் போங்கள். இன்று மாலையில் நீங்கள் விதைத்து வந்த நெல்லெல்லாம் மழையில் மிதந்து ஒதுங்கியிருக்கும். அவற்றை அரித்து எடுத்து வாருங்கள். நான் அவற்றை வறுத்துக் குத்தி அரிசியாக்கிச் சோறு சமைத்துப் போடுகிறேன். போய் வாருங்கள்.

**மாறனார் :** (கிழவரை நோக்கி) ஐயா, சற்று இளைப்பாறுங்கள். அடுப்பண்டை உட்கார்ந்து சிறிது நேரம் குளிர் காயுங்கள். நான் வயலுக்கு ஓடிச் சென்று விதைத்த நெல்லைப் பொறுக்கி, ஓடி வருகிறேன்.

(போகிறார்.)

**காட்சி 3**

*[கிழவர் பேசுகிறார்.]*

**கிழவர் :** மாறனாரே! அம்மா! உங்கள் அன்புடைமையை நான் என்னவென்று சொல்வேன்! நீங்கள் சமைத்துப்போட்ட சோறு அமுதமாயிருந்தது. உங்கள் அன்புக்கு ஈடு இல்லை. கடவுள் உங்களைக் காப்பாற்றுவார்.

(மறைந்து விட்டார்)

**மனைவி :** பெரியவர் எங்கே!

**மாறனார் :** ஆ! மறைந்துவிட்டார்! அவர் கடவுளே! நம்மைச் சோதிக்கவே அவர் இந்நேரத்தில் வந்தார்! நாம் வறுமை யுற்றால் என்ன? கடவுள் அன்பு நமக்கு இருக்கிறது. அதுவே போதும்.

**மனைவி :** கடவுள் அன்பு இருக்கும் வரையில் நமக்குக் குறையில்லை. இனி நமக்கு நல்ல காலமே வரும் என்று எனக்குத் தோன்றுகிறது.

## பயிற்சி

### சொற்கள்

| | | |
|---|---|---|
| மாறனார் | நிலைக்க | வறுமை |
| மனைவி | தலைவர் | குற்றம் |
| காட்சி | பட்டினி | நனைந்து |
| அருந்து | மட்டும் | சோதிக்க |
| கூரை | பொறுக்கி | வறுத்து |
| அமுதம் | சமை | அன்பு |

பொருளில் வேற்றுமை என்ன?

இலை... இளை, மலை.. மழை. விதை.. வித்தை.

### பெயர்ச்சொற்கள்

கோடிட்ட இடங்களில் ஏற்ற பெயர்ச்சொற்களை அமை.

(1) ———குரைக்கிறது.

(2) ———கனைக்கிறது.

(3) ——————உறுமுகிறது.

(4) ——————கரைகிறது.

(5) ——————கத்துகிறது.

(6) ——————ஊளையிடுகிறது.

## வினாக்கள்

(1) மாறனார் எதனை உண்டு காலம் கழித்தார் ?

(2) வந்த கிழவரின் நிலைமை எப்படி இருந்தது ?

(3) விறகுக்கு அவர்கள் என்ன செய்தார்கள் ?

(4) அரிசிக்கு அவர்கள் யாது செய்தார்கள் ?

(5) கிழவர் அவர்களை எப்படிப்பாராட்டினார்?

(6) கிழவரைக் கடவுள் என்று அவர்கள் ஏன் எண்ணினர் ?

இந்நாடகத்தை நடித்துக் காட்டுங்கள்.



## 11. ஓடி விளையாடு பாப்பா

ஓடி விளையாடு பாப்பா ! நீ
ஓய்ந்திருக்க லாகாது பாப்பா !
கூடி விளையாடு பாப்பா !—ஒரு
குழந்தையை வையாதே பாப்பா !
சின்னஞ் சிறு குருவி போலே—நீ
திரிந்து பறந்து வா பாப்பா !
வன்னப் பறவைகளைக்கண்டு !—நீ
மனதில் மகிழ்ச்சி கொள்ளு
பாப்பா !

கொத்தித் திரியு மந்தக்
கோழி—அதைக்
கூட்டி விளையாடு பாப்பா !
எத்தித் திருடும் அந்தக்
காக்காய்—அதற்கு
இரக்கப் படவேணும் பாப்பா !
பாலைப் பொழிந்து தரும்
பாப்பா !—அந்தப்
பசு மிக நல்லதடி பாப்பா !
வாலைக் குழைத்து வரும் நாய்
தான்—அது
மனிதர்க்குத் தோழனடி பாப்பா !





வண்டி யிழுக்கும் நல்ல
குதிரை—நெல்
வயலில் உழுது வரும் மாடு!
அண்டிப் பிழைக்கும் நம்மை
ஆடு!—இவை
ஆதரிக்க வேணுமடி பாப்பா!

காலை யெழுந்த வுடன்
படிப்பு—பின்பு
கனிவு கொடுக்கும் நல்ல பாட்டு
மாலை முழுதும்
விளையாட்டு—என்று
வழக்கப் படுத்திக் கொள்ளு
பாப்பா!

பொய் சொல்லக் கூடாது
பாப்பா!—என்றும்
புறம் சொல்ல லாகாது பாப்பா!
தெய்வம் நமக்குத் துணை
பாப்பா!—ஒரு
தீங்கு வர மாட்டாது பாப்பா!

—ஸ்ரீ சுப்பிரமணிய பாரதியார்.





## பயிற்சி

### சொற்கள்

| | | |
|---|---|---|
| ஓய்ந்து | வையாதே | திரி |
| ஆகாது | கொத்தி | கூட்டி |
| பொழிந்து | தோழன் | அண்டி |
| குழைத்து | உழுது | ஆதரிக்க |

இரு பொருள்கள் கூறு : கூடு, வை, திரி, ஆடு.

### பெயர்ச்சொல்

பின்வரும் பெயர்ச்சொற்களைத் தகுந்தபடி கோடிட்ட இடங்களில் வை.

வண்டி, காகம், பசு, நாய், மாடு.

1. ——— பாலைப் பொழிந்திடும்.
2. குதிரை ——— இழுக்கும்.
3. ——— வயலில் உழும்.
4. ——— கொத்தித் திரியும்.
5. ——— வாலைக் குழைத்து வரும்.

### வினாக்கள்

1. யாரைப் போலத் திரியவேண்டும் ?
2. கோழி என்ன செய்யும் ?
3. எது எத்தித் திருடும் ?
4. பசுவினால் நமக்கு என்ன பயன் ?
5. குதிரை நமக்கு எப்படி உதவும் ?
6. நம்மை எது அண்டிப் பிழைக்கிறது ?
7. காலையில் எழுந்தவுடன் செய்ய வேண்டியவை யாவை ?
8. மாலையில் நாம் செய்யவேண்டியது என்ன ?
9. புறம் செல்லுவது என்றால் என்ன ?
10. நமக்குத் துணை யார் ?

கடைசிப் பாடலை 'அழகான' எழுத்துக்களில் எழுதி உன் வீட்டுச் சுவரில் மாட்டு.

# 12. ஸர்க்கஸ் ஆட்டம்



நம் ஊரில் ஸர்க்கஸ் வந்திருக்கிறதே. நாம் போய் வருவோம்; வாருங்கள்.

ஆம்! இதுதான் ஸர்க்கஸ் கொட்டகை. வெளியே இசைக் கருவிகள் வாசிக்கிறார்கள். ஆட்டம் இன்னும் சில நிமிடங்களில் தொடங்கும். நுழைவுச் சீட்டுக்கள் வாங்கிக் கொண்டு உள்ளே போவோம்.

அதோ பார். சில சிறுவர்கள் ஆட வந்திருக்கிறார்கள். உயரத்தில் தொங்கும் கம்பியில், ஒருவன் தலைகீழாகத் தொங்குவான் ஒரு பெண் ஒரு கம்பியின் மீது நடப்பாள். இன்னும் இங்கே எத்தனையோ

வேடிக்கைகள் நடக்கும். இவர்கள் எல்லோரும் விளையாட நன்ருகப் பயின்றிருக்கிருர்கள்.

இனி விலங்குகள் வரப் போகின்றன. குதிரைகள் ஓடுவதை நாம் பார்க்கலாம். ஒரு குதிரையின் மீது ஒரு பெண் ஏறி மிகவும் வேகமாகச் சவாரி செய்வாள். அக் குதிரை ஒரு நெருப்பு வளையத்துள் பாய்ந்து புறப்படும். இதைப் பார்க்க அச்சமாயிருக்கும்.




இதோ பார்! புலிகள், சிங்கம், ஆடு, ஆகிய விலங்குகள் நாற்காலிகளின் மீது எப்படி நிற்கின்றன பார்! ஸர்க்கஸ்காரர்

இக் கொடிய விலங்குகளை மிக நன்ருகப் பழக்கியிருக்கிருர். அவர் அவ் விலங்குக ளிடம் மிக அன்பாய் இருப்பார்; அவரே அவற்றிற்கு உணவு ஊட்டுவார். ஆனுல், அவர் அவற்றினிடம் மிகக் கண்டிப்பாகவும் இருப்பார். அவை சிறிதளவு குற்றம் பண்ணி ஞலும் அவர் அவற்றைப் பொறுக்க மாட்டார்.

விலங்குகளில் சாதுவானவையும் உண்டு; கொடியனவும் உண்டு. ஆனுல், மனிதன் அவற்றையெல்லாம் அடக்கியாள வல்லவன். மனிதனுக்குச் சிறந்த அறிவு உண்டு. அதனுல் அவன் எதையும் செய்ய வல்லவனுய் இருக்கிருன். ஆனுல், அவன் தன் அறிவை நல்ல வழிகளில் பயன்படுத்த வேண்டும்.

### பயிற்சி

#### சொற்கள்

| | | |
|---|---|---|
| ஸர்க்கஸ் | தொங்கும் | பழக்கு |
| கொட்டகை | கம்பி | கண்டிப்பு |
| ஙிமிடம் | விலங்கு | குற்றம் |
| தொடங்கும் | வளையம் | கொடியன |
| தலை கீழாக | வல்லவன் | பயன்படுத்த |

இரு பொருள்கள் கூறு :

வேற்றுமை என்ன ?

விலங்கு—விளங்கு
ஏரி—ஏறி
வலை—வளை
காலி—காளி
வழி—வலி.

## பெயர்ச்சொற்கள்

கீழே இரண்டு எண்களில் சில பெயர்ச் சொற்கள் தரப்பட்டிருக்கின்றன. எதிரிடைச் சொல், எதிரிடைச் சொல்லாக அவற்றை நேர் நேராக எழுது.

1. நண்பன், வெண்மை, பகல், பொறுமை, நல்லன.
2. கருமை, பொருமை, பகைவன், கொடியன, இரவு.

## வினாக்கள்

1. ஸர்க்கஸில் வாசிக்கப்படும் இசைக் கருவிகள் யாவை ? தெரியுமா ?
2. கொட்டகைக்கு உள்ளே நுழைய என்ன வேண்டும் ?
3. சிறுவர்கள் ஆடும் ஆடல்கள் யாவை ?
4. ஸர்க்கஸில் உனக்கு அச்சமூட்டுபவை யாவை ?
5. ஸர்க்கஸில் வரும் கொடிய விலங்குகள் யாவை ?
6. ஸர்க்கஸ்காரர் அவற்றை எப்படிப் பழக்குகிறார் ?
7. மனிதன் சிறந்தவன் என்பது எவ்வாறு ?

நீ தெருவில் பார்த்திருக்கும் ஏதாவது ஒரு கூத்தைப்பற்றிச் சொல்லு.

# 13. மரம் நடுதல்



பல ஆண்டுகளுக்கு முன்னே காவிரிக் கரையிலே ஓரூரில் நாகன் என்ற ஒருவன் இருந்தான். அவனுக்குப் பிராயம் முதிர்ந்து விட்டது. அவன் மனத்தில் ஒரு பெரிய ஆசை இருந்தது. தான் உலகத்துக்கு அழியாத ஓர் உதவி செய்யவேண்டுமென்று அவன் ஆசைப் பட்டான். அவன் தன் பெயரையும் உலகில் நிலைபெறச் செய்ய விரும்பினன். ஆனல் இவற்றிற்கு இன்னது செய்வது என்று அவனுக்குத் தெரியவில்லை. ஆனல் அந்த எண்ணத்தை அவன் மறக்கவே இல்லை.

ஒரு நாள் அந்த ஊருக்கு ஒரு பரதேசி

தம்மாலான உதவிகளைச் செய்து வந்தார். அவரை நாகன் கண்டு வணங்கினான். அன்று அவரைத் தம் இல்லத்திற்கு வரச் செய்து அவருக்கு உணவு கொடுத்து உபசரித்தான். நாகன் அவரிடம் தனக்கு நெடுநாளாக இருந்த எண்ணத்தைத் தெரிவித்தான்.

பரதேசி அவனை நோக்கி. "நண்பா! உன் எண்ணத்தை அறிந்து உன்னை மெச்சுகிறேன். நாம் இறந்து போகும் போது நம்முடன் செல்வம் ஒன்றும் வரப்போவதில்லை. நாம் நல்ல செயல்களைச் செய்தால் அவை மட்டும் நமக்குப் பின் நிற்கும். உனக்குத் தக்கதாக நான் ஒன்று சொல்கிறேன்; கேள்.

"சாலை யோரங்களில் நல்ல நிழலைத் தரும் மரங்களை நடு, இப்படிச் செய்வது மக்களுக்கும் விலங்குகளுக்கும் பறவைகளுக்கும் பேருதவியாய் இருக்கும். வெயிலில் நடப்பவர்களுக்கு அவை. நிழல் கொடுக்கும். அப்படிச் செய்வது ஊருக்கும் நல்லது" என்றார்.

அவ்வண்ணமே அன்று முதல் நாகன் செய்யத் தொடங்கினான். அவ்வூரின் நா புறங்களிலும் சாலைகளிருந்தன. நாக

மரங்களை நட்டான். ஆல், அரசு, வேம்பு முதலிய பல மரங்கள் அவனால் வைக்கப் பட்டன. சில ஆண்டுகளில் அவை யாவும் பெரிய மரங்களாயின. ஊருக்கே ஒரு விதப் புதிய அழகு உண்டாயிற்று. பலவிதமான பறவைகள் அங்கே வந்து குடி புகுந்தன. மழையும் நன்றாகப் பொழியத் தொடங் கிற்று.

சில ஆண்டுகளில் நாகன் இறந்து போனான். இறக்கும்போது அவன் மகிழ்ச்சி யுடன் இறந்தான். தன் ஊருக்குத் தான் ஒரு பெரிய நன்மை செய்த எண்ணம் அவனுக்கு மகிழ்ச்சியைத் தந்தது. ஊர் மக்க்ள் அவனை வாயார வாழ்த்தினார்கள். அவன் பெருமை அழியாமல் இருக்கும் பொருட்டு அவர்கள் அவ்வூரின் பெயரையே நாகனூர் என்று மாற்றினார்கள். இன்னும் நாகன் புகழ் அவ்வூரில் அழியாமலிருக்கிறது.

**பயிற்சி :**

**சொற்கள்**

| | | |
|---|---|---|
| பிராயம் | பரதேசி | மெச்சு |
| உதவி | இல்லம் | செல்வம் |
| இன்னது | உபசரி | தக்கதாக |
| நிலைபெற | பேருதவி | அன்றுமுதல் |
| நாற்புறங்கள் | பலவிதமான | குடிபுகுந்தன |

இரு பொருள்கள் கூறு :

நடு, கரை, அரசு.

## வேற்றுமை காட்டு.

கரை—கறை செல்—சேல்

## பெயர்ச் சொற்கள்

சரியான சொற்களைத் தேர்ந்தெடு. மற்றவற்றை அடித்துவிடு.

1. வானத்தில் (கதிரவன், மரம், கல்) விளங்குகிறது.

2. நாற்காலி (மண்ணால், கண்ணாடியால், மரத்தால்) செய்யப்பட்டிருக்கிறது.

3. ——(பசு, எருது, மலை) பால் கொடுக்கும்.

4. குளத்தில் (பால், மோர், தண்ணீர்) இருக்கும்.

## வினாக்கள்

1. நாகனின் விருப்பம் யாது ?

2. பரதேசியின் குணம் யாது ?

3. பரதேசி நாகனுக்கு என்ன கூறினார் ?

4. மரங்களின் உபயோகங்கள் யாவை ?

5. நாகன் என்ன என்ன மரங்களை நட்டான் ?

6. மரங்களால் ஊர் அடைந்த நன்மைகள் யாவை ?

7. நாகன் பெயர் எவ்வாறு அழியாமலிருந்தது ?

உன் ஊரில் வனமகோற்சவ விழா நடந்ததுண்டா ?

அப்பொழுது என்ன என்ன செய்தார்கள் ?

# 14. படை எழுச்சி



எட்டி வருவார் சிலர்;
　　கிட்டி வருவார் சிலர்;
ஈண்டி வருவார் சிலர்;
　　தாண்டி வருவார் சிலர்;
ஏறி வருவார் சிலர்;
　　சீறி வருவார் சிலர்;
இரைந்து வருவார் சிலர்;
　　விரைந்து வருவார் சிலர்;
இடத்தில் வருவார் சிலர்;
　　வலத்தில் வருவார் சிலர்;
எடுக்க வருவார் சிலர்;
　　முடுக்க வருவார் சிலர்;

இடி! இடி! என்பார் சிலர்;
பிடி! பிடி! என்பார் சிலர்;
எற்றும்! எற்றும்! என்பார் சிலர்;
எட்டும்! எட்டும்! என்பார் சிலர்;
எதிர்! எதிர்! என்பார் சிலர்;
மிதி! மிதி! என்பார் சிலர்;

—இராமநாடகம்.

## பயிற்சி

### சொற்கள்

| | | |
|---|---|---|
| எட்டி | ஏறி | இடம் |
| கிட்டி | சீறி | வலம் |
| ஈண்டி | இரைந்து | எடுக்க |
| தாண்டி | விரைந்து | முடுக்க |
| இடி | பிடி | எற்று |

### ஒருமை—பன்மை

(1) பின் வரும் சொற்களுக்கு ஒருமைச் சொற்கள் கூறு :

வருவார், என்பார், பலர், படைகள்.

(2) பின் வரும் சொற்களுக்குப் **பன்மைச்** சொற்கள் கூறு :

ஒருவன், வருவான், வீரன், வந்தது, வருவாள்.

இப் பாடலை உரக்கப் பாடிக்கொண்டு, வரிசை வரிசையாக நடந்து காட்டுங்கள்.

# 15. உதவி விற்பனை



நீலகிரி ஜில்லாவில் உதககமண்டலத்துக்கும் கூனூருக்கும் போகும் சாலையில் ஒரு நாள் ஒரு பெரிய மனிதர் தம் குதிரை மீது ஏறிக்கொண்டு சவாரி போனார். திடீரென்று எங்கிருந்தோ ஒரு பெரிய பாம்பு சாலையின் குறுக்கே வந்தது. இன்னும் ஒரு கணம் கழிந்தால் அது குதிரையின் காலைக் கடித்திருக்கும். அச்சமயம் ஒரு சிறிய பையன் ஒரே ஓட்டமாக ஓடித் தன் கையிலிருந்த தடியால் அப் பாம்பின் தலையில் ஓங்கி ஓர் அடி அடித்தான். பாம்பு இறந்து விட்டது. எல்லாம் ஒரு நொடியில் நடந்தன.

பெரிய மனிதருக்கு வியப்பும் மகிழ்ச்சியும் ஒருங்கே கூடின. அவர் குதிரையினின்று கீழே இறங்கி அப் பையனுடன் பேசலானர்

**பெரிய மனிதர் :** தம்பி, நீ செய்த உதவிக்கு நான் பெரிதும் நன்றியுடையவனுய் இருக்கிறேன். உன் பெயர் என்ன ?

**பையன் :** வீரப்பன் ஐயா !

**பெரிய மனிதர் :** இங்கே என்ன செய்து கொண்டிருக்கிருய், அப்பா ?

**வீர.** ஆடுகளை மேய்த்துக் கொண்டிருக்கிறேன், ஐயா.

**பெ. ம.** உன் வயது என்ன ?

**வீர.** பத்து இருக்கலாம், ஐயா.

**பெ. ம.** உன் தகப்பனுர் யார் ?

**வீர.** அவர் பெயர் கண்ணன்.

**பெ. ம.** இவ் வாடுகளெல்லாம் அவருடையனவோ ?

**வீர.** ஆம், ஐயா.

**பெ. ம.** நீ இன்று எனக்குச் செய்த உதவிக்கு நான் ஒரு பரிசு கொடுக்க எண்ணுகிறேன். இந்தா, ஐந்து ரூபா நன்றி.

**வீர.** வேண்டாம் ஐயா. இவ்வளவு பணம் நான் பார்த்ததுகூட இல்லையே !

பெ. ம. நீ ஏதேனும் தின்பண்டங்கள் வாங்கித் தின்னலாமே !

வீர. என் தாய் எனக்கு வேண்டிய உணவு கொடுக்கிருள்.

பெ. ம. பொம்மைகள் எவையேனும் வாங்கிக் கொள்.

வீர. நான் என்ன குழந்தையா ? எனக்குப் பொம்மைகள் வேண்டா. என் ஆடுகளோடு நான் விளையாடுகிறேன். இம் மலையிலுள்ள பறவைகளோடு நான் விளையாடுகிறேன். அவையே போதும்.

பெ. ம. நல்லது. நல்ல உடைகள் வாங்கிக் கொள்ளலாமே !

வீர. என் தந்தை எனக்கு வேண்டிய உடைகள் தருகிருர். ஆடுகளின் உரோமத்தால் நாங்களே உடைகள் செய்கிருேம். எனக்கு உடைகள் வேண்டா.

பெ. ம. பின்பு நீ செய்த உதவிக்கு நான் ஏதாவது பதில் செய்ய வேண்டமோ ?

வீர. ஐயா, வேண்டா. நான் உதவியை விற்க வரவில்லை. என் தந்தை, "உதவியை விற்கக்கூடாது" என்று சொல்லியிருக்கிருர். எங்கள் ஊரில் உதவி விற்பனை இல்லை.

**பெ. ம.** தம்பி, நீ பெரிய அறிவாளி. நான் நாளை உன் வீடு தேடி வருகிறேன். உன் தந்தையிடம் என் வணக்கத்தைச் சொல்.

**வீர.** அப்படியே ஐயா, வணக்கம்.

இவ்வாறு பேசிவிட்டு அவர் குதிரை மீது ஏறிச் சென்றார். வீரப்பன் மனமகிழ்ச்சியுடன் ஒரு பாறைமீது ஏறி இருந்து தன் புல்லாங்குழலை எடுத்து வாசிக்கத் தொடங்கினான்.

## பயிற்சி

### சொற்கள்

| | | |
|---|---|---|
| ஜில்லா | நொடி | நன்றி |
| கணம் | ஒருங்கே | மேய் |
| பரிசு | உரோமம் | வணக்கம் |
| உடை | விற்பனை | பாறை |
| பெரிய மனிதர் | ஒரே ஓட்டமாக ஓடி | தின்பண்டம் |
| திடீரென்று | நன்றியுடையவன் | புல்லாங்குழல் |

**பொருள் கூறு. வாக்கியத்தில் வைத்துச் சொல்லு.**

குறுக்கே, நெடுக, ஓரத்தில்.

### வினைச் சொற்கள்

**இவ் வாக்கியங்களைப் படி.**

மாடு **மேய்கிறது.** பையன் **படிக்கிறான்.**

பாம்பு **வந்தது.** குதிரை **பாய்ந்தது.**

கோடிட்ட சொற்கள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு வேலை செய்ததைக் குறிக்கிறது. இவை **வினைச் சொற்கள்-**

## **வினாக்கள்**

(1) உதகமண்டலம் எங்கே இருக்கிறது?

(2) குதிரைக்கு வந்த ஆபத்து என்ன?

(3) அது எப்படி நீங்கிற்று?

(4) வீரப்பன் அங்கே என்ன செய்துகொண்டிருந்தான்?

(5) ஏன் அவன் தின்பண்டங்கள் வேண்டாம் என்றான்?

(6) அவன் உடுக்கும் உடை யாது?

(7) பொம்மைகள் யாருக்கு உரியன?

(8) 'நான் உதவி விற்பவன் அல்லன்—இதன் பொருள் யாது?

வீரப்பனிடம் மரியாதை, வீரம், பெருந்தன்மை இவை இருந்தன. எப்படி என்று காட்டு.

# 16. ஊக்கம்



சிலந்திவலே பின்னுவதையும், குருவி கூடு கட்டுவதையும் நீ பார்த்திருக்கிருயா? அவை எவ்வளவு முயன்று வேலே செய்கின்றன? அவை எவ்வளவு அழகாய் இருக்கின்றன? தேனீ எவ்வளவு சுறுசுறுப்புடன் உழைத்து இனிமையான தேனேச் சேகரிக்கின்றன? கூர்ந்து கவனித்தால் உயிர்ப்பிராணிகள் எல்லாம் ஓயாமல் உழைத்துத் தத்தமக்கு வேண்டியவற்றைச் செய்து கொள்வதைக் காண்கிருேம்.

நமக்கோ கடவுள் வேலை செய்யக் கைகளைக் கொடுத்திருக்கிறார்; நன்றாக எண்ணிப் பார்ப்பதற்கு நமக்கு மூளை இருக்கிறது. பிறரிடம் பேசித் தெரிந்து கொள்வதற்கு வாய் இருக்கிறது. இவ்வளவு இருந்தும் நம்மில் சிலர் தம் கைகளால் ஒன்றும் செய்யாமல் சோம்பலாய் இருக்கிறார்கள்; அவர்கள் பிறர் செய்து வைத்ததைத் தாம் பயன்படுத்திக் கொண்டு திரிகிறார்கள்.

இது மிகவும் வெட்கமான காரியம். நம்மாலாவதைப் பிறரைக்கொண்டு செய்து கொள்ளுதல் கூடாது. சிறிய பிள்ளைகள் தாம் இருக்கும் அறைகளைத் தாமே பெருக்கிக் கொள்ளலாம்; தம் துணிகளைத் தாமே கசக்கிக் கொள்ளலாம்; வீட்டிலுள்ள செல்லப் பிராணிகளுக்கு உணவு ஊட்டலாம்; தோட்டங்களில் நீர் பாய்ச்சலாம்; கன்று காலிகளை மேய்த்துக் கட்டலாம்; தம் பெற்றோர்களுக்குச் சிறிய உதவிகளைச் செய்யலாம்.

இவற்றோடு நில்லாமல் பிள்ளைகள் தத்தமக்குப் பிடித்த சிறிய கைத்தொழில்களைச் செய்யவும் கற்றுக்கொள்வது நலம். நூல் நூற்றல், கயிறு திரித்தல், களிமண்ணால் சிறிய ஏனங்கள் செய்தல், பாய் பின்னுதல்

போன்ற வேலைகள் செய்வதற்கு எளியவை. செய்யும்போது மனத்துக்கு மகிழ்ச்சியும் உண்டாகும். இப்படியே செய்வதால் அவர்கள் பெரியவர்களாகும்போது பெரிய வேலைகளையும் செய்யக் கூடிவர்களாக ஆகலாம்.

பெரிய கோயில்களையும், அரண்மனைகளையும், பாலங்களையும் கட்டினவர்கள் மனிதர்கள் தாமே. அழகான கம்பளங்களையும் பட்டாடைகளையும் சரிகைச் சேலைகளையும் நெய்பவர்கள் மனிதர்களே. கண்ணைக் கவரும் படங்களை எழுதுகிறவர்களும், விலை மதிப்பதற்கு அரிய அணிகலங்களை ஆக்குபவர்களும் அவர்களே. அவர்கள் எல்லோரும் உங்களைப் போல் இளையவர்களாய் இருந்த காலம் முதற்கொண்டே சுறுசுறுப்புடன் உழைத்துக் கைத்தொழில்களில் பயின்று வந்தார்கள். நீங்களும் இப்பொழுது முதற்கொண்டே தொழில் செய்து முன்னேற்றம் அடைய விரும்பவேண்டும்.

## பயிற்சி

### சொற்கள்

| | | |
|---|---|---|
| பின்னு | மூளை | பாய்ச்சு |
| கட்டு | திரி | நூற்றல் |
| கூர்ந்து | வெட்கம் | ஏனம் |
| இனிமை | கசக்கி | கோயில் |
| அரண்மனை | பாலம் | சரிகை |

இரு பொருள்கள் கூறு: திரி, நெய், மதி.

வேற்றுமை காட்டு

பயன்—பயம்　　நீறு—நூறு

### வினைச்சொற்கள்

பின் வருவனவற்றில் கோடிட்ட இடங்களை உரிய வினைச்செற்களால் நிரப்புக.

நாம் வீட்டில் ————

பூனை எலியைப் ————

அவன் படுக்கையில் ————

பறவை வானத்தில் ————

### படி—எழுது

தன் கையே தனக்கு உதவி.

முயற்சி உடையார் இகழ்ச்சி அடையார்.

சோம்பர் என்பவர் தேம்பித் திரிவர்.

### வினக்கள்

(1) சுறுசுறுப்பான பிராணிகள் சிலவற்றின் பெயர்களைச் சொல்லு.

(2) சிலந்தி, குருவி, கறையான் இவை செய்யும் அரிய வேலைகள் யாவை?

(3) கை, மூளை, வாய்—இவை ஒவ்வொன்றின் உபயோகம் என்ன?

(4) சிறு பிள்ளைகள் வீட்டில் செய்யக்கூடிய வேலைகள் யாவை?

(5) சிறியவர்கள் என்ன என்ன கைத்தொழில்கள் செய்யலாம்?

(6) மனிதர்கள் செய்துள்ள பெரிய வேலைகள் சிலவற்றைக் கூறு.

# 17. விடு கதைகள்



கை உண்டு; கால் இல்லை.
கழுத்துஉண்டு; தலை இல்லை,
பை உண்டு; பணம் இல்லை.
நெஞ்சு உண்டு; மூச்சு இல்லை.

---

ஆயிரம் பேர்தச்சர் கூடி,
அழகான மண்டபம்
கட்டி,
ஒருவன் கண் பட்டு
உடைந்ததாம்
மண்டபம்.





நலமாய் இலகும்; நாசியில் அமரும்;
காதுகள் இரண்டும் கட்டி அணைக்கும்;
கன்னத் தழுந்தும் கற்றோர் தமக்கு
நேசத்துடனே நெறி காட்டிடும்.



காலையில் நான்கு கால்;
பகலில் இரண்டே கால்;
மாலையில் மூன்று கால்;
இது என்ன பிராணி ?

## பயிற்சி

### சொற்கள்

| | | |
|---|---|---|
| நெஞ்சு | மண்டபம் | இலகு |
| நலம் | நாசி | நெறி |
| அமர் | கன்னம் | நேசம் |
| அணை | கற்றோர் | |

### வினைச்சொற்கள்

ஏற்ற வினைச்சொற்களைப் பொருக்கி எடு.

(1) குரங்கு மரம் (ஏறும், வெட்டும், உடைக்கும்)

(2) மீன் தண்ணீரில் (இறங்கும், நீந்தும், உண்ணும்)

(3) தச்சர் மரத்தை (பெயர்ப்பார், அறுப்பார், கிள்ளுவார்)

(4) வாய் (பேசும், நடக்கும், தூங்கும்)

(5) கண் (தின்னும், பார்க்கும், கேட்கும்)

(6) நாசி (முகரும், தின்னும், எடுக்கும்).

குல்லாய், தண்ணீர்—இவற்றிற்கு ஏற்ற விடுகதை கட்டு.

# 18. கடல்



எல்லை அறியாப் பெருங்கடலே !—நீதான்
இரவும் உறங்காயோ கடலே !
அல்லும் பகலும் அலைகடலே! உனக்கு
அலுப்பும் இல்லையோ கருங்கடலே !

உருண்டு திரண்டு வருங்கடலே ! உடைந்து
ஓடிப் போவதேன் கடலே !
வெருண்டு மதிகெட்டாய் கடலே—பாறை
விலகிப் போகுமோ கடலே !

பொங்கு திரைகளோ கடலே ! அவை
புரவி நிரைதாமோ கடலே !
எங்கும் உனதொலியோ கடலே !—அன்றி
இடியின் முழக்கமோ கடலே !

ஓடம் எடுத்தெறியும் கடலே—தயை
உனக்குச் சற்றிலை யோ கடலே!

ஆடல் வீடிதனைக் கடலே!—நீயும்
அழிப்ப தழகா மோ கடலே!

மலையை வயிற்றடக்குங் கடலே! எண்ணில்
மகரமீ னுலவுங் கடலே!

விலைகொள் முத்தளிக்குங் கடலே!—சிப்பி
விளையாடற் குதவுங் கடலே!

மழைக்கு மூலமும் நீ கடலே!—அதை
வாங்கி வைப்பதும் நீ கடலே!

வழுத்து மகிமையெ லாங்கடலே! எவர்
மதித்து முடிக்க வல்லார் கடலே!

—கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை.

## பயிற்சி

### சொற்கள்

| | | |
|---|---|---|
| எல்லை | உருண்டு | பொங்கு |
| உறங்காய் | திரண்டு | திரை |
| அல்லும் | உடைந்து | புரவி |
| பகலும் | வெகுண்டு | நிரை |
| அலுப்பும் | மதி | ஒலி |
| ஓடம் | அளிக்கும் | தயை |
| சிப்பி | சற்று | மூலம் |
| மகரம் | வழுத்தும் | முத்து |

இரு பொருள்கள் கூறுக: உடை, மதி, திரை.

**படி**

இச் சொற்களுக்குப் பொருள் ஒன்றே: **கவனி.**
**ஒலி: முழக்கம்.**

## விஞக்கள்

(1) கடலுக்கு எல்லே உண்டோ?

(2) இரவு உறங்காதன வேறு சில சொல்லு.

(3) அலேகடல்—பொருள் என்ன?

(4) அலே எப்படி வீசுகிறது? பாட்டில் உள்ளபடி சொல்லு?

(5) ஏன் கடலே 'மதிகெட்டாய்' என்கிருர்?

(6) 'புரவிநிரை' என்று எவற்றைக் கூறுகிருர்?

(7) கடலுக்கு ஏன் தயை இல்லேயாம்?

(8) 'ஆடல் வீடு' இதன் பொருள் என்ன? (சிறு பெண்கள் மணல் வீடு கட்டிக் கடற்கரையில் விளேயாடுவர். அதனேத்தான் இங்குக் குறிக்கிருர்)

(9) கடலினுள் மலேகள் இருக்கும்—இதனே எப்படிக் கூறுகிருர்?

(10) முத்துச் சிப்பி என்பது யாது? சிப்பியைக் குழந்தைகள் என்ன செய்வார்கள்?

(11) மழைக்கு மூலம் எது? ஏன்?

இப்பாடலேச் சைகைகளுடன் ஆடிப் பாடு.

# 19. சென்னை

நமது அரசியலார் நம்மை நன்முக ஆளும் பொருட்டு நாட்டைப் பல இராஜ்யங்களாகப் பிரித்திருக்கிருர்கள். அவற்றுள் சென்னை ஒன்று. அதன் ஆட்சித் தலைவர் கவர்னர். அவருடைய தலைநகரம் சென்னை.

சென்னை நகரம் நம் பாரத நாட்டிலுள்ள பெரிய நகரங்களில் ஒன்று. இராஜ்யத்தின் தலைமை அதிகாரிகள் யாவரும் அங்கே வசிக்கிருர்கள். அவர்களுடைய காரியாலயங்களெல்லாம் அங்கே இருக்கின்றன. அவற்றில் பல்லாயிரம் அலுவலாளர்கள் வேலை பார்க்கிருர்கள். அந்நகரில் பல பெரிய கல்விச் சாலைகளும், மருத்துவச் சாலைகளும் தொழிற்சாலைகளும் இருக்கின்றன.

சென்னை கடற்கரை ஓரமாக இருக்கிறது. வெளி நாடுகளிலிருந்து பெரிய க்கப்பல்கள் அங்கே வந்து கொண்டும் போய்க் கொண்டும் இருக்கின்றன. அவை தங்குவதற்குத் தக்கவாறு ஒரு பெரிய துறைமுகமும் அமைக்கப்பட்டிருக்கிறது. அதையொட்டிப் பல பண்டசாலைகளும் அலுவலகங்களும் இருக்கின்றன.

சென்னையில் பெரிய தொழிற்சாலைகள் பல இருக்கின்றன. நூல் நூற்கும் பஞ்சாலைகள். துணி நெய்யும் ஆலைகள், நெருப்புப் பெட்டி செய்யும் இடங்கள், இரும்பு வேலைகள் செய்யும் இடங்கள் முதலியன பல அங்கே உண்டு. மிகப் பெரிய வியாபாரக் கடைகளும் அந்நகரில் உண்டு.



சென்னை நகராண்மைக் கூடம்

இக்காரணங்களால் அந்நகரில் மக்கள் கூட்டம் மிக அதிகமாக விருக்கிறது. கணக்கற்ற தெருக்கள் அங்கே இருக்கின்றன. மக்களுடைய நலன்களைக் கவனிக்க அந்நகரில்

உண்டு. அங்கிலேயத்தார் பல்லாயிரம் வேலை யாட்களின் உதவியைக் கொண்டு நகரத்துக்கு நீர் வசதி செய்தல், தெருக்களைச் சுத்த மாக்குதல், விளக்கேற்றுதல், ஆரம்பக் கல்வி கற்பித்தல், மருத்துவ உதவி செய்தல் ஆகிய பலவற்றைக் கவனித்து வருகின்றனர். நகருக்கு வேண்டிய தண்ணீரைச் செங் குன்றுகள் என்ற இடத்திலிருக்கும் ஏரியி லிருந்து குழாய்கள் வழியாகக்கொண்டு வந்து வீடுகளுக்குக் கொடுக்கிறார்கள்.

சென்னையிலுள்ள நீதி மன்றம், கோயில்கள், கலங்கரை விளக்கம், சிங்காரத் தோட்டங்கள், காட்சிச் சாலைகள், கட்டடங்கள் முதலியன பார்க்கத்தகுந்தவை. போக்கு வரவிற்கு இருப்புப்பாதைகள் மின்சார வண்டிகள் முதலிய பல வசதிகள் அங்கே உண்டு.

இவ்வாறு பல சிறப்புக்களையுடைய சென்னைமாநகரம் முந்நூறு ஆண்டுகளுக்கு முன்னே சில சிறிய குக்கிராமங்களைக் கொண்ட இடமாய் இருந்தது. ஆங்கிலே யர்கள் இங்கே வியாபாரம் செய்ய வந்து இறங்கினார்கள். அவர்கள் சில கடை களையும் அவற்றைச் சுற்றி ஒரு கோட்டை, வசதி வசிப்பவற்றையும் அமைக்கக்

கொண்டார்கள். வர வர நகரம் பெரியதாகி இன்று அது உலகப் பெரிய நகரங்களுள் ஒன்றாக விளங்குகிறது.

## பயிற்சி

### சொற்கள்

| | | |
|---|---|---|
| பாரதம் | மருத்துவம் | கூட்டம் |
| மாவட்டம் | வியாபாரம் | ஏரி |
| தலைவர் | கடை | விளக்கம் |
| அதிகாரி | வசதி | மன்றம் |
| குழாய் | முந்நூறு | ஆங்கிலேயர் |
| கோட்டை | தலைநகரம் | தொழிற்சாலை |
| காரியாலயம் | கடற்கரை | அகழி |
| கல்விச்சாலை | துறைமுகம் | மருத்துவச்சாலை |

இவற்றின் ஓசைகளை உச்சரித்துப்பார்.

இரு பொருள்கள் கூறு:—நாடு, நடு, கடை.

### வேற்றுமை கூறு

நடு × நாடு

வேலை × வேளை

மடு × மாடு

எரி × ஏரி

எறி × ஏறி

### ஒருமை—பன்மை

#### 1. படி

ஒன்று ; பல. தோட்டம்-தோட்டங்கள்

சிலர் ; பலர். அதை-அவற்றை ;

மனிதன் ; மனிதர், இருக்கிறது-இருக்கின்றன,

## வினுக்கள்

1. சென்னையைப் போல் பாரத நாட்டிலுள்ள வேறு சில இராஜ்யங்களின் பெயர்களைக் கூறு.

2. சென்னையில் உள்ள முக்கியமான காரியாலயங்கள் யாவை?

3. துறைமுகம் என்ருல் என்ன?

4. கலங்கரை விளக்கத்தின் பயன் என்ன?

5. சென்னையிலுள்ள சில பெரிய கல்விச் சாலைகளின் பெயர்களைக் கூறு.

6. சென்னை எப்படி வளர்ந்தது?

படத்தில் காண்பது சென்னையில் எவ்விடம்? அங்கே காணப்படுபவை யாவை?

# 20. மகாத்மா காந்தி



உலகம் சீர்கெடும்போது பெரியோர்கள் தோன்றி அதனை நல்ல நிலையில் கொண்டு வந்து நிறுத்துகிறார்கள். புத்தர், திருவள்ளுவர் போன்ற பெரியோர்கள் இவ்வாறு உலக நன்மைக்காகத் தோன்றியவர்களே. நம் காலத்திலும் அத்தகைய ஒரு பெரியார் தோன்றி அருமையான நன்மைகளை உலகுக்குச் செய்து மறைந்தார். அவரே மகாத்மா காந்தி என்பவர்.

அவருடைய படங்களை நாம் வீடு தோறும் காண்கிறோம். அவருடைய திரு நாளை நாம் கொண்டாடுகிறோம். அவருடைய வாழ்க்கை வரலாற்றை நாம் அறிய வேண்டியது இன்றியமையாதது.

அவருடைய முழுப் பெயர் மோகன தாஸ் கரம்சந்த் காந்தி. அவருடைய தந்தை யார் ஒரு மன்னரிடம் வேலை பார்த்து வந்தார். அவருக்கு உண்மையில் அதிகப் பற்று உண்டு. எவ்வளவு துன்பம் வந்தாலும் அவர் பொய் பேசமாட்டார். காந்தியின் தாயார் மிகுந்த தெய்வபக்தி உடையவர்; அவருக்கு நுட்பமான அறிவும் உண்டு.

காந்தி இளமையிலேயே மணம் புரிந்து கொண்டார். அவருடைய மனைவியின் பெயர் கஸ்தூரிபா. அவர் கணவருக்கு ஏற்ற மனைவி யாய் அடக்கம், பொறுமை, உண்மை ஆகிய குணங்கள் நிரம்பி விளங்கினார்.

காந்தி இந்தியாவில் தம் படிப்பை முடித்துக் கொண்டு இங்கிலாந்துக்கும் போய்ப் படித்துப் பட்டம் பெற்று வந்தார்.

அவர் தென் ஆப்பிரிக்காவுக்கு ஒருமுறை போக நேர்ந்தது. அங்கே பல இந்தியர்கள் வாழ்கிறார்கள். அவர்களை அந் நாட்டார் [illegible] துன்புறுத்தி வந்தார்கள். காந்தி

அவர்களுக்கு நன்மை செய்யும் பொருட்டு அரும்பாடு பட்டார். அந்நாட்டு அதிகாரிகள் காந்தியை மிகக் கொடுமையாக நடத்தினார்கள். அவரைப் பலமுறை சிறையில் அடைத்தார்கள்; அடித்தார்கள்; பலவிதமாகத் துன்புறுத்தினார்கள். ஆனால் அவர் அஞ்சா நெஞ்சுடன் அவர்களுடன் போராடி முடிவில் வெற்றி பெற்றார்.

அவர் இந்தியாவுக்குத் திரும்பி வந்து காங்கிரஸில் சேர்ந்து கொண்டார். இந்தியர்களுக்கு அவர் பல வழிகளிலும் அறிவு புகட்டி அவர்களிட மிருந்த குறைகளை யெல்லாம் நீக்கினார். ஆங்கிலேயர்கள் இந்த நாட்டை ஆண்டு வந்தார்கள். அவர்களைக் காந்தியார் நாட்டை விட்டுப் போகும்படி செய்தார். இந்தியாவுக்கு அவர் **சுயராஜ்யம்** வாங்கித் தந்தார்.

காந்தி மகான் உண்மையில் மிகுந்த நம்பிக்கையுடையவர். அவர் ஒருவரையும் துன்புறுத்தச் சகியார். அவர் எப்பொழுதும் சுறுசுறுப்பாகவே இருப்பார். ஏழை எளியவர்களிடம் அவருக்கு அன்பு அதிகம். அவர்களுக்காக அவர் எவ்வளவோ பாடுகள் பட்டிருக்கிறார். மக்கள் அவரை ஒரு மகாத்மா என்று அழைத்தார்கள்.

நாம் மகாத்மா காந்தியை ஒரு நாளும் மறவோம். அவர் சென்ற வழியே நாமும் சென்று நம் நாட்டுக்குச் சேவை புரிவோம்.

## பயிற்சி

### சொற்கள்

| | | |
|---|---|---|
| சீர் | திருநாள் | இளமை |
| அருமை | கொண்டாடு | நுட்பம் |
| மறை | வாழ்க்கை | கணவர் |
| மகாத்மா | வரலாறு | மனைவி |
| நிரம்பி | அதிகாரி | ஏற்று |
| கொடுமை | பட்டம் | சிறை |
| துன்புறுத்தி | மகான் | பலமுறை |

எதிரிடைச் சொற்கள் கூறு :

இளமை, பொறுமை, நன்மை.

### சொற்றொடர்கள்.

**பின்வரும் சொற்றொடர்களில் சொற்கள் மாறிக் கிடக்கின்றன. அவற்றை நேராக அமை.**

1. காண்கிறோம் அவருடைய நாம் வீடுதோறும் படங்களை

2. புரிந்து காந்தியார் மணம் இளமையிலேயே கஸ்தூரிபாவை.

3. மகாத்மா சுயராஜ்யம் வாங்கி இந்தியாவுக்குக் கொடுத்தார்

## வினாக்கள்

1. உலகைச் சீர்திருத்தத் தோன்றிய பெரியார்களுள் சிலரின் பெயர்களைக் கூறு.

2. மகாத்மாவின் தந்தையின் இயல்புகள் யாவை ?

3. கஸ்தூரிபாவிடம் இருந்த குணங்கள் யாவை ?

4. காந்தியார் இங்கிலாந்துக்குப் போய் என்ன பெற்றார் ?

5. தென் ஆப்ரிக்காவில் இந்தியர் எப்படி வாழ்ந்து வந்தனர் ?

6. மகாத்மா அங்கு ஏன் சிறைப்பட்டார் ?

7. இந்தியாவுக்குச் சுயராஜ்யம் வாங்கிக் கொடுத்தவர் யார் ?

8. மகாத்மாவின் குணங்கள் யாவை ?

இந்தியத் தலைவர்களின் சிலரின் பெயர்களைத் தெரிந்து சொல்லு.

# 1. கொன்றை வேந்தன்

அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்.
ஈயார் தேட்டைத் தீயார் கொள்வர்.
ஊருடன் பகைக்கின் வேருடன் கெடும்.
ஐயம் புகினும் செய்வன செய்.
கிட்டா தாயின், வெட்டென மற.
கீழோராயினும் தாழ உரை.
குற்றம் பார்க்கில் சுற்றம் இல்லை.
கைப்பொருள் தன்னில் மெய்ப்பொருள் கல்வி.
சான்றோர் என்கை ஈன்றோர்க்கு அழகு.
சீரைத் தேடின் ஏரைத் தேடு.
சோம்பர் என்பவர் தேம்பித் திரிவர்.
தொழுதூண் சுவையின் உழுதூண் இனிது.
நோன்பென்பது கொன்று தின்னாமை.
புலையும் கொலையும் களவும் தவிர்.
பொல்லாங்கு என்பது எல்லாம் தவிர்.
மருந்தே ஆயினும் விருந்தோடு உண்.
முற்பகல் செய்யின் பிற்பகல் விளையும்.
வானம் சுருங்கின் தானம் சுருங்கும்.
ஊக்கம் உடைமை ஆக்கத்திற்கு அழகு.
ஓதார்க் கில்லை உணர் வொடு ஒழுக்கம்.

## 2. வெற்றி வேற்கை

### அழகு

கல்விக் கழகு கசடற மொழிதல்.
செல்வர்க் கழகு செழுங்கிளை தாங்குதல்.
வணிகர்க் கழகு அரும் பொருள் ஈட்டல்.
உழவர்க் கழகு உழுதூண் விரும்பல்.
உண்டி க்கழகு விருந்தோடு உண்ணல்.
அறிஞர்க் கழகு கற்றுணர்ந்து அடங்கல்.
வறிஞர்க் கழகு வறுமையிற் செம்மை.

### சிறுமை—பெருமை

தேம்படு பனையின் திரள்பழத் தொருவிதை
வானுற ஓங்கி வளம் பெற வளரினும்
ஒருவர்க் கிருக்க நிழலாகாதே.
தெள்ளிய ஆலின் சிறுபழத் தொருவிதை
தெண்ணீர்க் கயத்துச் சிறுமீன் சினையினும்
நுண்ணிதே ஆயினும் அண்ணல் யானை
அணிதேர்ப் புரவி ஆட்பெரும் படையொடு
மன்னர்க் கிருக்க நிழலா கும்மே.
அதனால்,
பெரியோ ரெல்லாம் பெரியரும் அல்லர்;
சிறியோ ரெல்லாம் சிறியரும் அல்லர்,

### தீமை செய்யினும் குணம் கெடா

அடினும் ஆவின்பால் தன் சுவை குன்ருது;
சுடினும் செம்பொன் தன் ஒளி கெடாது;
அரைக்கினும் சந்தனம் தன் மணம் அருது;
புகைக்கினும் காரகில் பொல்லாங்கு கமழாது;
கலக்கினும் தண்கடல் சேரு காது.

### கல்வி நன்று

கற்கை நன்றே கற்கை நன்றே;
பிச்சை புகினும் கற்கை நன்றே.
கல்லா ஒருவன் குலநலம் பேசுதல்
நெல்லினுட் பிறந்த பதரா கும்மே,
நாற்பாற் குலத்தின் மேற்பால் ஒருவன்
கற்றில னயின் கீழிருப்பனே;
எக்குடிப் பிறப்பினும் யாவரே யாயினும்
அக்குடியில் கற்ருேரை மேல்வரு கென்பர்
அறிவுடை ஒருவனே அரசனும் விரும்பும்.

## குறிப்புரை.

### 1. கொன்றை வேந்தன்

1. பிதா - தந்தை, முன் அறி தெய்வம் - முதன்மையாக அறிய வேண்டிய தெய்வங்கள்.

2. ஈயார் - கொடாதவர், தேட்டை - செல்வம்.

4. ஐயம் - பிச்சை.

6. சுற்றம் - உறவு.

8. மெய்ப்பொருள் - உண்மையான பொருள்.

10. சீரை - சிறப்பை ; மேன்மையை.

12. தொழுது ஊண் - பிறரை வணங்கிப்பெறும் உணவு.

16. மருந்து - அமுதம்.

18. வானம் - மழை.

19. ஆக்கம் - செல்வமுடைமை.

20. ஓதார் - நூல்களைப் படிக்காதவர்.

## 2. வெற்றி வேற்கை

1. கசடு – குற்றம். அற - நீங்க.

2. செல்வர் - பணக்காரர். கிளை - உறவினர்.

3. வணிகர் - வியாபாரி, ஈட்டல் - சேர்த்தல்.

4. உழுது ஊண் - உழுவதனால் கிடைக்கும் உணவு.

6. கற்று - படித்து, உணர்ந்து - தெரிந்து கொண்டு. அடங்கல் - அடக்கமாய் இருத்தல்.

7. வறுமை - ஏழ்மை, செம்மை - நல்ல அறங்களைச் செய்தல்.

8. தேம்படு - இனிமை உடைய.

9. வான் உற - ஆகாயத்தை அடைய.

12. கயம் - குளம், சினை - முட்டை.

13. நுண்ணிது - சிறியது.
அண்ணல் - பெருமையையுடைய.

14. அணி - அழகான. புரவி - குதிரை.

19. அடினும் – காய்ச்சினாலும். ஆ - பசு.

21. அறு து - நீங்காது.

28. நாற்பால் குலம் - நான்கு பகுதியான குலன்கள்.

32. விரும்பும் - விரும்புவான்.

# கமல வாசகம்



## நான்காம் புத்தகம்

ஆசிரியர்

**வித்துவான் ரா. விசுவநாதன்** எம்.ஏ., பி.ஓ.எல்.,
(முன்பு) சென்னை, பிரஸிடென்ஸி காலேஜ் தமிழ்ப் பேராசிரியர்

&

பண்டிதர் செ. முத்துரத்ன முதலியார்,
(முன்பு) திருவாரூர், அரசியல் உயர்தரக் கலாசாலைத்
தலைமைத் தமிழ்ப் பண்டிதர்.

VIJAYAPURAM ★ TIRUVARUR

விவேகானந்தா பதிப்பகம்

விஜயபுரம் :: திருவாரூர் ஜங்.

பதிப்புரிமை 1955

# முகவுரை

நான்காம் வகுப்புக்குரிய இப்புத்தகம் பாடங்களின் பொருள்கள், அவற்றைக் கையாளும் முறை, நடை, மொழியறிவு முதலியவற்றில் மூன்றும் புத்தகத்தைவிட ஒரு படி முன்னேறியுள்ளது. அரசியலார் அமைத்துள்ள பாடத்திட்டத்தின்படி, திட்டமான முதலும் முடிவுமுள்ள நிகழ்ச்சிகள் கதைகளும், ஆழ்ந்த கருத்துக்களைப் புலப்படுத்தும் சொல்லமைதிகளும், அழகுணர்ச்சி, ஆலோசனை, கருத்து வளர்ச்சி இவற்றிற்குதவும் செய்திகளும், இலக்கியச் சுவையை ஊட்டும் வரலாறுகளும் இப்புத்தகத்தில் அமைந்துள்ளன. பேச்சு, எழுத்து, கட்டுரையாக்கம், இலக்கணம் ஆகியவை பாடத்திட்டத்திற் கண்டவாறு வளர்ச்சியுறுதற்குரிய வண்ணம் ஒவ்வொரு பாடத்தின் கீழும் பயிற்சிகள் தரப்பெற்றுள்ளன. ஏறக்குறைய 700 புதிய சொற்கள் இதனில் கையாளப் பெற்றிருப்பதையும் காணலாம்.

பேச்சு, எழுத்து இவற்றின் நோக்கம் தெளிவு, விளக்கம், இனிமை ஆகிய முறைகளில் ஒருவர் தம் கருத்தைப் பிறர்க்குத் தெரிவித்தலாகும். இதற்குக் கருத்து வளமும் கூடவே இருத்தல் வேண்டும். ஆகவே பாடப் புத்தகங்களைக் கையாளும் ஆசிரியர்கள் தாம் எடுத்துக் கொள்ளும் பாடத்தையொட்டிப் பிள்ளைகளின் கருத்தை வளர்க்கக்கூடிய சாதனங்களைக் கையாள்வது இன்றியமையாதது. இதற்குரிய வழி சம்பாஷணைகளே. இச் சம்பாஷணைகளின் போக்கைக் குறிக்கவே பயிற்சிகளின் கீழ்க் கட்டுரை என்ற தலைப்பு கொடுக்கப்பெற்றிருக்கிறது. அத் தலைப்பின் கீழே காணப் பெற்றவற்றை உதாரணங்களாகக் கொண்டு வேறு தலைப்புக்களையும் எடுத்துப் பிள்ளைகளைப் பேசச் செய்வது நாம் கொண்ட குறிக்கோளை அடைவதற்கு ஒரு வாயிலாகலாம்.

இப்புத்தகம் மாணவ உலகத்திற்கு நன்கு பயன்பட அருளவேண்டுமென்று எல்லாம் வல்ல இறைவனை இறைஞ்சுகிறோம்.

21-9-51

# பொருளடக்கம்

---

# 1. கங்கை



இமயம் நம் பாரத நாட்டின் வடக்
கெல்லையைப் பெரும் சுவர்போல் காத்துக்
கொண்டிருக்கிறது அல்லவா! அம்மலையின்
உயரத்தையோ அகலத்தையோ ஆழத்
தையோ கண்டவர் எவரும் கிடையாது.
வானை அளாவும் மலையுச்சிகளும், பாதாளம்
வரை செல்லும் பள்ளங்களும், மனிதர் புக
முடியாத காடுகளும் அங்கே பல உண்டு.

அம்மலைக்கு இமவான் என்ற ஓர் அரசன்
இருந்தான். அவனுக்கு மேனை என்ற மனைவி

யும் கங்கை என்ற ஒரு மகளும் இருந்தார்கள். கங்கை மிக அழகு வாய்ந்தவள்; அழகுக்கு ஏற்ற குணமும் அவளிடம் இருந்தது. இமவான் இமயத்துக்கு மன்னனுயிருந்தாலும் பாரத நாட்டின் நலத்தில் கண்ணும் கருத்துமாய் இருந்தான்.

ஒரு காலத்தில் பாரத நாட்டின் வடக்குப் பகுதியில் கொடிய பஞ்சமொன்று உண்டாயிற்று. பல ஆண்டுகள் அங்கே மழையே பொழியவில்லை. புல் பூண்டுகளெல்லாம் கரிந்து போயின. மக்கள் எல்லோரும் வாட்டம் அடைந்தனர். அக்காலத்தில் நம் நாட்டைப் பகீரதன் என்னும் மன்னன் அரசாண்டு வந்தான். மக்கள் படும் துயரைக் கண்டு அவன் மனம் வருந்தினுன்.

அவனுக்கு வசிஷ்டர் என்ற ஓர் ஆசிரியர் இருந்தார்; அவர் பகீரதனை நோக்கி, ''மன்ன, நீ கங்கையை இங்கே வரும்படி செய்தால் உலகம் பிழைக்கும்'' என்ருர். அதற்குப் பகீரதன் உடன்பட்டு, அரிதில் முயன்று, இமயத்தில் ஏறி இமவானைக் கண்டான். அவன் இமவானை நோக்கி நாட்டின் துன்ப நிலையைக் கூறினுன். இமவானுக்குத் தன் மகளை விட்டுப் பிரிய மனமில்லை. கங்கையும் தன் பெற்ருேர்களையும், தான் பழகிய இடங்

களையும் விட்டுச் செல்ல முதலில் உடன்பட வில்லை.

ஆனால், பகீரதன் தன் குடிகள்படும் துயரங்களைக் கூறியபோது அவள் கண்களி லிருந்து நீர் பெருகிற்று. அதுவே வாய்க் காலாகி, சிற்றாறாகி, பேராறாகி ஓடத்தொடங் கிற்று. வரவரக் கங்கையே நீராக உருகிவிட் டாள். அவள் தெய்வமகள் ஆதலால் அவளுக்கு அழிவே இல்லை. அரசன் ஆற்றின் முன்னே தன் தேரைச் செலுத்திக்கொண்டு தன் நாட்டுக்கு அதனை அழைத்துச் சென் றான். கங்கையின் கருணையே கண்ணீராகி, ஆறாகப் பெருகியதால் அவ்வெள்ளத்திற்குக் கங்கை யென்றே அரசன் பெயரிட்டான். பாரத நாட்டில் கங்கை புகுந்தவுடன் நாடு செழிப்புற்றது. புல் பூண்டுகளும் செடி கொடிகளும் மரங்களும் வளர்ந்தோங்கின. மக்கள் மகிழ்ச்சி பொங்கி ஆற்று நீரைக் கொண்டு ஏரிகளையும் குளங்களையும் நிரப்பி, வயல்களில் நெல் முதலிய பயிர்களை வளர்த் தனர். நாட்டில் செல்வம் மலிந்தது. நகரங் களும் ஊர்களும் எண்ணிக்கையற்றனவாய் எழுந்தன. இவ்வாறு கங்கா தேவியின் அருளால் நாடு நாடாயிற்று.

மக்கள் எல்லோரும் கங்கையை வணங்கி எப்பொழுதும் வற்றாமல் ஓடிக்கொண்டே

யிருக்க வேண்டுமென்று கேட்டுக்கொண்டார்கள். அதற்குக் கங்காதேவியும் இசைந்தனள். அவ்வாறே இன்னும் கங்கை என்றும் நீர் அறுமல் ஓடிக்கொண்டு அந்நாட்டிற்கு உயிராய் விளங்கி வருகின்றது.

பயிற்சி:

சொற்கள்

| | | |
|---|---|---|
| எல்லே | அளாவு | புக |
| சுவர் | உச்சி | வாய்ந்தவள் |
| உயரம் | பாதாளம் | ஏற்ற |
| அகலம் | வரை | பஞ்சம் |
| ஆழம் | பள்ளம் | பொழி |
| வாட்டம் | ஆசிரியர் | உடன்படு |
| முயன்று | வாய்க்கால் | சிற்ருறு |
| பேராறு | கருணை | மலிந்தது |

1. கண்ணும் கருத்துமாய், புல்பூண்டு, எண்ணிக்கையற்றன, நீர் பெருகுதல், நீர் அறுதல்.

2. உச்சரி: பொருள் கூறு.

மழை-மலே.

வெள்ளம்-வெல்லம். ஏரி-ஏறி. குளம்-குலம்.

3. எதிர்ப்பதங்கள் கூறு:

இன்பம்; மலிந்தது.

விஞக்கள்

1) இந்தியாவின் நான்கு எல்லேகளும் யாவை?

(2) இமயமலேயின் பெருமைகளேச் சில வாக்கியங்களிற் சொல்லு.

(3) இமவான் யார்? அவன் மனைவி, மகளின் பெயர்கள் யாவை?

(4) பஞ்சத்தால் விளைந்த தீமைகள் யாவை?

(5) வசிட்டர் பகீரதனிடம் கூறியவை யாவை?

(6) பகீரதன் கங்கையை வேண்டிக் கொண்டது என்ன?

(7) ஆறு எப்படிப் பெருகிற்று?

(8) கங்கையால் நாடு அடைந்த நன்மைகள் யாவை?

## இலக்கணம்

பகீரதன் இமவானைக் கண்டான்.

இந்த வாக்கியத்தில் **பகீரதன்** என்னும் சொல் காரியம் செய்பவனைக் குறிக்கும். இது **எழுவாய்.**

**கண்டான், எழுவாய்** செய்த காரியத்தைக் குறிக்கும் சொல் **கண்டான்.** இது **பயனிலை.**

பின்வரும் வாக்கியங்களில் **எழுவாய், பயனிலை**களைக் காட்டு.

(1) கண்களிலிருந்து நீர் பெருகிற்று.
(2) பகீரதன் ஆற்றை அழைத்துச் சென்றான்.
(3) நகரங்களும் ஊர்களும் எழுந்தன.

## கட்டுரை

இவ்வூரில் பஞ்சம் உண்டாயிருப்பதாக எண்ணிக் கொள். அதனால் விளையும் தீமைகளைப்பற்றிச் சொல்லு.

# 2. முதற் பரிசு



ஒரு காலத்தில் ஒரு நாட்டு மன்னன் தன் நாடெங்கும் பின்வருமாறு பறையறையச் செய்தான் : " நாட்டுக்குச் சிறந்த உதவி செய்த ஒருவருக்கு, வருகிற பொங்கலன்று, சிறந்த பரிசளிக்கக் கருதியிருக்கிறோம்; இப் பரிசுபெற விரும்புவோர் அன்று நம்மை வந்து கண்டுகொள்ளலாம். "

பொங்கல் நாள் வந்தது. காலையில் பூசை முதலியன முடிந்த பிறகு, அரசன் தன் அத்தாணி மண்டபத்தில் வீற்றிருந்தான். அவையினோர் அவன்முன் தத்தமக்கு உரிய இடங்களில் அமர்ந்திருந்தனர். வாயிலில் முரசு

முழங்கிற்று. பரிசுக்கு உரியவர்களென மூவர் அங்கே வந்திருந்தனர். அவர்கள் தாம் தாம் செய்த பெரிய செயல்களைக் குறித்து எழுதி, அமைச்சனிடம் கொடுத்தார்கள். அமைச்சன் அவற்றைப் படித்துவிட்டு அவர்களை ஒவ்வொருவராக மன்னனுக்கு அறிமுகப் படுத்தினன்.

அவன் ஒருவரைச் சுட்டி, "மன்ன! இவர் குமணர் என்ற பெயரினர். இவருடைய ஊரில் குடிதண்ணீர்க்கு வழி இல்லாமல் தவித்து வந்தார்கள். இவர் தம் செலவில் இரண்டு குளங்களையும் நான்கு கிணறுகளையும் வெட்டினர். இன்று அவ்வூரில் நீர்ப் பஞ்சமே இல்லை. இவர் தாம் செய்த உதவியே மிகப் பெரியது எனக் கருதுகிறார்" என்றான்.

அரசன், 'அவருக்கு ஓர் இடம்கொடுக்க' என்றான்.

அமைச்சன் அடுத்தவரை அழைத்து அரசனுக்குக் காட்டி, "இறைவ! இவர் வாணன் என்பவர். இவர் பண்டைப் பயிர் முறைகளிலுள்ள குற்றங்களையெல்லாம் கண்டு, அவற்றை நீக்கிப் புதிய பயிர்முறைகளை மக்களுக்குக் கற்பித்தார். இவருடைய உதவியால் இவருடைய ஊரில் விளைபொருள்கள் முன்பிருந்ததைவிட ஐம்மடங்கு பெரு

கின. இவர் தாமே பரிசுக்கு உரியவர் என்றெண்ணுகிறார்'' என்றான்.

அரசன் அவருக்கும் மற்றோரிடத்தைக் காட்டி அதனில் அமரச்செய்தான்.

அதன்மேல் அமைச்சன் மூன்றாமவனை அழைத்து முன் நிறுத்தி அரசரை நோக்கி, ''இறைவ! இவர் சிறந்த பண்டிதர். இவர் பெயர் கபிலர். பல மொழிகளையும் கலைகளையும் இவர் நன்கு கற்றிருக்கிறார். இவர் தம் ஊர் மக்களுக்கெல்லாம் நன்றாகக் கல்வி புகட்டியிருக்கிறார். இவருடைய உதவியே பெரியதென்பது இவருடைய எண்ணம்'' என்றான்.

அரசன் அவருக்கும் ஓரிடத்தைக் காட்டி உட்காரச் செய்தான். பிறகு அவன் அவையோர்களைப் பார்த்துப் பின்வருமாறு பேசத் தொடங்கினான்:

''அவையோர்களே! நாட்டு மக்களே! இன்று நம் முன்வந்த மூவரும் உண்மையில் நாட்டுக்கு உதவி செய்தவர்களே. தண்ணீர், உணவு, கல்வி இம்மூன்றும் இல்லாத நாடு நாடே அன்று. இவர்களுக்கு நான் நன்றியுடையவனாய் இருக்கிறேன். இவர்களுக்குப் பரிசுகளை நான் கொடுக்கப்போகிறேன்.

ஆனால் நாட்டுக்கு இணையற்ற உதவி செய்துவரும் ஒருவரை நான் அறிவேன். நான்

நாடு சுற்றி வருவதற்குச் சென்ற மாதம் சென்றிருந்தபோது, ஒரு சிற்றூரில் சில நாழிகை நேரம் தங்க நேர்ந்தது. அங்கே ஒரு குடிசையில் ஒரு கணவனும் அவன் மனைவியும் தம் ஐந்து பிள்ளைகளை வளர்த்து வருவதைக் கண்டேன். அப்பிள்ளைகளின் உடற் பொலிவும், ஒழுக்கமும், உழைப்பும், அன்பும், அடக்கமும் என் மனத்தைக் கொள்ளை கொண்டன. அப்பிள்ளைகள் பெரியவர்களாகும்போது நாட்டின் சிறந்த மக்களாக விளங்குவார்கள் என்பது திண்ணம். இவர்களே நாட்டின் செல்வம். இப்படிப்பட்ட மக்களை வளர்ப்பவர்களே உலகுக்குப் பேருதவி செய்பவராவர். இன்று அவர்கள் வரவில்லை. என்றாலும் அவர்களே முதற் பரிசுக்கு உரியவராவர்" என்று கூறினான்.

அவையோர் யாவரும் மகிழ்ந்தனர்.

**பயிற்சி :**

**சொற்கள்**

| | | |
|---|---|---|
| பரிசு | வீற்றிருந்தான் | பண்டை |
| அத்தாணி | அமைச்சனின் | மடங்கு |
| மண்டபம் | அறிமுகப்படுத்து | முறை |
| இறைவன் | அவை | நன்றி |
| நாழிகை | பொலிவு | ஒழுக்கம் |
| அடக்கம் | திண்ணம் | |

இருபொருள்கள் கூறுக: அவை, படி, குடி,

பொருள் வேற்றுமை கூறுக: இரும்பு-விரும்பு. அரி-அறி. அடு-ஆடு. உரி-உறி.

எதிர்ப் பதங்கள் கூறுக: உண்மை, தண்ணீர், பழைமை.

## வினுக்கள்

*(1)* அரசன் அறையச் செய்த பறைச் செய்தி யாது?

(2) குமணர் ஊருக்குச் செய்த நன்மை யாது?

(3) வாணன் ஊருக்குச் செய்த நன்மை யாது? அதனுல் உண்டான நன்மை யாது?

(4) கபிலர் செய்த நன்மை யாது?

(5) அரசன் யாருக்கு முதற் பரிசு கொடுத்தான்? ஏன்?

## இலக்கணம்

இரண்டாவது பாராவிலுள்ள வாக்கியங்களுக்கு **எழுவாய் பயனிலைகள்** யாவை? ஓர் அட்டவணையில் எழுது.

## புள்ளிகள்

கடைசிப் பாராவில் முற்றுப் புள்ளிகளும் காற் புள்ளிகளும் எங்கெங்கு வந்திருக்கின்றன பாருங்கள்.

வாக்கியங்களை முடிக்கும்போது முற்றுப் புள்ளி யைத் தவருமல் இடவேண்டும்.

## கட்டுரை

*(1)* பொங்கலன்று அத்தாணி மண்டபம் எவ் வாறிருந்தது? ஐந்து வாக்கியங்களிற் சொல்லு.

(2) நான்கு உதவிகளுள் எது சிறந்தது? உன் எண்ணம் யாது?

(3) நீ உலகுக்கு எவ்வாறு உதவி செய்ய எண்ணுகிறாய்?

# 3. குருவியும் யானையும்



கோயம்புத்தூர் ஜில்லாவிலே வெள்ளியங்கிரிக்கு அருகில் அடர்ந்த காடொன்று உண்டு. அங்கே இலைகள் அடர்ந்த ஒரு மரத்திலே தேன் குருவியொன்று தன் கூட்டை அமைத்துக் குஞ்சுகளுடன் தன் வாழ்நாளை இன்பமாய்க் கழித்து வந்தது. அது தினந்தோறும் வெளியிற் சென்று தன் நீண்டு வளைந்த அலகினால் மலர்களிலுள்ள தேனை உறிஞ்சித் தன் குஞ்சுகளுக்குக் கொண்டு வந்து ஊட்டும். அது உருவத்தில் மிகச் சிறியதாயினும் சிறந்த உடல் வலிவும்

அதே காட்டில் ஒரு யானையும் இருந்து வந்தது. அதன் உடல் மிகப் பருத்திருந்தது அதன் கரிய உடலைக் கண்டு எவரும் அஞ்சுவர். அது காடெல்லாம் திரிந்து மரங்களை ஒடித்தும், நீரோடைகளைத் தூர்த்தும், சிறிய உயிர்ப் பிராணிகளைத் தன் கால்களால் நசுக்கியும், துதிக்கையால் பிய்த்தும், இவ்வாறு காட்டிலுள்ள உயிர்க்கெல்லாம் தொல்லை விளைத்துக் கொண்டிருந்தது.

ஒருநாள் அந்த யானை தேன் குருவி வாழும் மரத்தண்டை வந்து அதன் கிளைகளை உலுக்கிற்று. அப்பொழுது தாய்க் குருவி அங்கு இல்லை. குஞ்சுகளெல்லாம் நடு நடுங்கின. தாய்ப்பறவை வெளியில் சென்று திரும்பி வந்ததும் அவை அதனிடம் தாம் அன்று பட்ட துன்பத்தைத் தெரிவித்தன.

அடுத்த நாளும் யானை அங்கே முன் மாதிரியே மரத்தை உலுக்கத் தொடங்கிற்று. குருவி அதைப் பார்த்து, "ஐயா, நாங்கள் எளியவர்கள், எங்களை ஒன்றும் செய்யாதீர். நீர் அன்புகூர்ந்து வேறு மரத்துக்குச் செல்லும்" என்று மரியாதையாகக் கேட்டுக் கொண்டது.

அச் சொற்களைக் கேட்டு யானை "அற்பக் குருவியே! என் விருப்பப்படி செய்

வதைத் தடுக்க நீ யார்? நான் அப்படித்தான் உன் மரத்தை உலுக்குவேன்; இங்கே இருக்க உனக்கு முடியாவிட்டால் நீ வேறு எங்காவது ஓடிப்போ'' என்று மிகவும் இகழ்ச்சியாகப் பேசிற்று.

அதற்குக் குருவி, "ஐயா யானையாரே! பதட்டம் வேண்டா! நான் தலைமுறை தலைமுறையாக இங்கே வாழ்கிறேன். இஃது எனக்கு உரிய மரம். என் இடத்தை விட்டு விரட்ட ஒருவருக்கும் உரிமை இல்லை. நீர் இன்னும் இங்கே நிற்பீரானல் உம்மை அழச் செய்வேன். ஓடிப்போம்'' என்று பெருமிதத்துடன் கூறிற்று.

யானை அதைக் கேட்டு நகைத்து, "அற்பப் பறவையே! உனக்கு இவ்வளவு துடுக்கா! இந்த மரத்தையே வேரோடு பிடுங்கிச் சாய்த்து உன்னையும் உன் குஞ்சு களையும் என் கால்களில் இட்டு நசுக்கி விடுகிறேன் பார்'' என்று சொல்லித் தன் தலையால் மரத்தை ஒரு முட்டு முட்டிற்று.

குருவி கோபங்கொண்டு, "மூட விலங்கே, உனக்கு அறிவு புகட்டுவேன்'' என்று சொல்லிப் பறந்து வந்து அதன் பெரிய காது களுள் ஒன்றில் புகுந்து கொண்டது. அங்கே அது சிறகுகளை அடித்துக் கொண்டும்,

அலகினுல் காதின் ஓரங்களைக் கொத்திக் கொண்டும் யானைக்குப் பெருந் துன்பம் விளைத்தது. யானையால் துன்பம் பொறுக்க முடியவில்லை. அது எவ்வளவு முயன்றாலும் அதனுல் குருவியை வெளியேற்ற முடிய வில்லை.

அது அழுதுகொண்டே, "குருவியாரே! உம்முடைய பெருமையை நான் உணரவில்லை. நான் இன்று முதல் இக்காட்டை விட்டே ஓடி விடுகிறேன். இனி ஒருவரையும் நான் துன்புறுத்த மாட்டேன். தயை செய்து வெளியே வாரும்" என்று கெஞ்சிற்று.

அச்சொற்களைக் கேட்டுக் குருவி வெளியே வந்தது. அன்று முதல் யானை அங்கே வரவேயில்லை. சிறிய குருவியின் தைரியத்தால் காட்டு மரங்களும் உயிர்ப் பிராணிகளும் துன்பத்திலிருந்து நீங்கின.

**பயிற்சி :**

**சொற்கள்**

| | | |
|---|---|---|
| அலகு | குஞ்சு | உரிமை |
| உறிஞ்சு | துன்பம் | பெருமிதம் |
| உருவம் | மரியாதை | துடுக்கு |
| கூரிய | கூர்ந்து | நசுக்கு |
| விளைத்து | இகழ்ச்சி | தைரியம் |
| உலுக்கிற்று | உரிய | கொத்து |

நீரோடை அன்புகூர்ந்து தலைமுறை
உயிர்ப்பிராணி தயை செய்து வெளியேற்ற

எதிரிடைச் சொற்கள் :
வெளியே × உள்ளே. துன்பம் × இன்பம்.
இகழ்ச்சி × புகழ்ச்சி.

## வினாக்கள்

(1) தேன் குருவியின் உருவம் எவ்வாறு இருந்தது ?

(2) யானை குருவிக்கு எப்படித் துன்பம் விளைத்தது ?

(3) குருவி யானைக்கு எப்படிப் புத்தி புகட்டிற்று ?

(4) அறிவு பெரியதா ? உடல் வலிமை பெரியதா ?

## இலக்கணம்

எழுவாயும் பயனிலையும் பல வகைகளில் ஒத்திருக்க வேண்டும்.

கீழே உள்ள வாக்கியங்களில் அவை ஒத்திருக்கவில்லை. திருத்திக் கூறு.

(1) நான் உன் மரத்தை உலுக்குவாய்.

(2) குஞ்சுகள் பயந்தது.

(3) குருவி யானையின் காதினுள் புகுந்தோம்.

## புள்ளிகள்

ஒருவர் பேசியதை அப்படியே எழுதும்போது " " என்ற குறிகளை இடவேண்டும். இந்தப் பாடத்தில் இக்குறிகள் எவ்வாறு இடப்பட்டிருக்கின்றன ? பாருங்கள்.

## நாடகம்

இக் கதையை நடித்துக் காட்டுங்கள்.

## 4. தபால்களில் முகவரி எழுதுதல்

நம்மில் பெரும்பாலோர் அடிக்கடி பிறர்க்குத் தபால் எழுதிக் கொண்டிருக்கிருர்கள்; அவர்களுக்குக் கடிதங்கள் வந்து கொண்டும் இருக்கின்றன. வான ஊர்திகள் வழியாகவும், கப்பல்கள் வழியாகவும், இருப்புப்பாதை வண்டித் தொடர்களின் வழியாகவும் நாள்தோறும் கணக்கற்ற தபால்கள் சென்று கொண்டேயிருக்கின்றன. பல்லாயிரக் கணக்கான தபாற் சேவகர்கள் அவற்றை வீடு தோறும் தவருமல் கொடுத்து வருகிருர்கள்.

இது எப்படி நடக்கிறது? இதனுல் விளையும் நன்மை என்ன என்று நீங்கள் ஆராய்ந்திருக்கிறீர்களா? அவசரமான ஒரு செய்தி நமக்குக் காலத்தில் கிடைக்காவிட்டால் விளைவு என்ன ஆகும்? இவற்றையெல்லாம் எண்ணிப் பார்த்தால் தபால் இலாகா நமக்குச் செய்துவரும் பேருதவி விளங்கும்.

தபாற்காரர்களுக்கு நாம் செய்ய வேண்டிய உதவிகள் ஒன்றிரண்டு உண்டு. அவை நமக்கு நாமே செய்துகொள்ளும் உதவிகளும் ஆகும். அவ்வாறு செய்வது

நமது கடமையுமே. அவை யாவையெனில் சரியானபடி தபால்தலைகளை ஒட்டுவதும், முகவரிகளை நேர்மையாக எழுதுவதுமே யாகும். கார்டுகளுக்கு உள்ளூர்க் கார்டா ஞல் அரையணுத் தலையும், பிறவற்றிற்கு முக்கால் அணுத் தலையும் ஒட்ட வேண்டு மென்று விதித்திருக்கிருர்கள். உறைகளுக் குக் குறைந்தது இரண்டணுத் தலை ஒட்ட வேண்டும். கனமான உறைகள், புத்தகக் கட் டுகள் போன்றவற்றிற்கு வெவ்வேருன கட் டணங்கள் உண்டு. அவற்றையும் தபால்தலை களாகத்தான் ஒட்ட வேண்டும்.

இத் தலைகளை உறைகளின் மீதும் கார்டு களிலும் முகவரி எழுதும் பக்கத்தில் மேலே வலப்புற ஓரத்தில் ஒட்டவேண்டும். கண்ட இடங்களில் அவற்றை ஒட்டிஞல் அவற்றின் மீது முத்திரையிடுகிறவர்களுக்குத் தொல்லை உண்டாகும்; நேரமும் கெடும். இது முதன் முதலாகச் செய்ய வேண்டியது.

முகவரி எழுதுவதில்தான் அதிகக் கவனம். வேண்டும். எழுத்து விளக்கமாகவும் நேர்மை யாகவும் இருக்க வேண்டியது இன்றியமை யாதது. யாரிடம் கடிதம் கொடுக்கப்பட வேண்டுமோ அவருடைய பெயர் முதலிலும், அவருடைய பெற்ருேர் பெயர் எழுதப்பட

எல்லையையும் குறிக்க ஒவ்வோர் எண்ணை இட்டிருக்கிறார்கள். உதாரணமாகச் சென்னையில் எண் 5, திருவல்லிக்கேணியைக் குறிக்கும்; எண் 15, சைதாப் பேட்டையைக் குறிக்கும். இவற்றை அறிந்து அந்த அந்த மண்டலம் பெயரை எழுதும் போது அதனருகில் எழுத வேண்டும்.

கீழே வரும் முகவரியைக் காண்க.

*திரு. சு. வேலாயுதம் பிள்ளை அவர்கள்,*<br>
*திரு. சுந்தரம் பிள்ளை அவர்களின் மகனார்,*<br>
*மளிகை வியாபாரம்,*<br>
*40, ஐயன் கடைத் தெரு,*<br>
**தஞ்சாவூர் மேற்கு,**<br>
*தஞ்சாவூர்*

**பயிற்சி:**

**சொற்கள்**

| | | |
|---|---|---|
| பெரும்பாலோர் | விளைவு | முகவரி |
| அடிக்கடி | இலாகா | முத்திரை |
| ஊர்தி | கடமை | கவனம் |
| சேவகர் | உள்ளூர் | அடுத்தும் |
| அவசரம் | உறை | மண்டலம் |

கணக்கற்ற, ஒன்றிரண்டு, வெவ்வேறான, முதன் முதலாக, அடுக்கடுத்து, சிற்றூர்.

## படி

எதிர்ப்பதங்கள் :

பிறர் × தமர். குறைந்தது × நிறைந்தது.

உண்டு × இல்லை. முதல் × கடைசி.

## வினாக்கள்

(1) தபால் செல்லும் வழிகள் யாவை?

(2) உறையில் தபால் தலை ஒட்ட வேண்டிய இடம் யாது?

(3) உள்ளூர்க் கார்டு, அயலூர்க் கார்டு என்பவை எவை? ஒவ்வொன்றிற்கும் ஒட்ட வேண்டிய தலைகளின் பெறுமானம் என்ன?

(4) முகவரியில் முதலில் எழுத வேண்டியது யாது?

(5) கடைசியில் எழுத வேண்டியது எது?

(6) எத்தனை கோடிட வேண்டும்?

(7) முகவரி பிழையாக எழுதப்பட்டால் விளையும் கேடு என்ன?

## இலக்கணம்

பின் வரும் வாக்கியங்களில் தடித்த எழுத்தாலமைத்த சொற்களுக்குப் பதிலாக வேறு சொற்களை அமைக்க.

(1) முகவரிகளைச் **சரியான** முறையில் எழுத வேண்டும்.

(2) முகவரிகளில் **முதலில்** எழுத வேண்டியது மனிதரின் பெயர்.

(3) **இறுதியில்** எழுத வேண்டியது ஊரின் பெயர்.

## கட்டுரை

உன் தந்தை, பாட்டன், ஆசிரியர், மாமன், ஒரு நண்பர் இவர்களின் முகவரிகளை எழுதுக.

# 5. முருகன் பாடுகின்றான்



### தாய்

என்ன பண்ணுகின்றாய்—முருகா
எழுந்து வாடா கண்ணே!
அன்னம் ஆறிப் போகும்—அங்கே
அப்பா காத்திருக்கார்.

### குழந்தை

பாட்டுப் பாடுகின்றேன்—இப்போ
பசிக்கவில்லை யம்மா!
கேட்டுவிட்டு நீ போ—புதிய
கீதஞ் சொல்லுகின்றேன்.

## தாய்

என்ன பாட்டுத் தெரியும்? நீ
எவரிடம் படித்தாய்?
கன்னு பின்னு வென்றே—கத்திக்
காதைத் துளைத்திடாதே.

## குழந்தை

பறவை பாட்டைக் கேட்டேன்-நானும்
பாட்டு பாடக் கற்றேன்—அது
சிறகை வீசிப் பறக்கும்—போதே
திருநடங்கள் கற்றேன்.

என்ன ராக தாளம்—என்றே
ஏதும் யானறியேன்.
வண்ணக் கோகிலம் போல்—நானும்
வந்த பாட்டைச் சொல்வேன்.

மலையினின் றருவி—பாய்ந்து
வரக்கண்டுள்ளங் குளிர்வேன்—அது
விலையில்லாத பாட்டை—எனக்கு
விரும்பித் தந்து செல்லும்.

பாட்டுக் கற்றுக் கொண்டேன்—அம்மா
பாயும் வெள்ளம் போலே,
காட்டுப் பட்சி போலே—நானும்
கவிகள் பாடுகின்றேன்.

—சுவாமி சுத்தானந்த பாரதியார்

## பயிற்சி :

### சொற்கள்

| | | |
|---|---|---|
| பண்ணு | கீதம் | ராகம் |
| அன்னம் | துணை | தாளம் |
| ஆறிப்போகும் | நடம் | வன்ன |
| கோகிலம் | அருவி | வெள்ளம் |

உள்ளங் குளிர்வேன் : விலையில்லாத.

வெள்ளம் பாய்தல் : காதைத் துளைத்தல்.

கன்னுபின்னு :

இரு பொருள் கூறு :

அன்னம், ஆறு, பாடு.

இவற்றின் பொருள் என்ன ?

கீதம், கோகிலம், ராகம், தாளம், நடம், கவி

### வினாக்கள்

(1) முருகன் யாரிடம் நடனங் கற்ருன் ?

(2) அவன் யாரிடம் நடனங் கற்ருன் ?

(3) விலையில்லாத பாட்டு என்று அவன் எதைச் சொல்லுகிருன் ?

(4) எதைப் போலக் கவிகளை அவன் பாடுவாணும் ?

### இலக்கணம்

கோடிட்ட இடங்களை எதிரிடைச் சொற்களால் நிரப்புக.

(1) குயில் இனிமையாய்ப் பாடும் : கழுதை—— கதறும்.

(2) நிலா குளிர்ச்சியானது : வெயில்——.

(3) ஆற்றில் வெள்ளம் பாய்கிறது : குளத்தில் தண்ணீர்——.

### கட்டுரை

நீ விரும்பும் ஏதேனும் ஒரு காட்சியைப்பற்றி 2, 3 வாக்கியங்களில் எழுதுக.

# 6. சொறித் தவளை




உலகில் காணப்படும் உயிர்ப் பிராணி களின் எண்ணிக்கைக்கு அளவேயில்லை. அவற்றின் உடல் உறுப்புக்களும், வாழ்க்கை முறைகளும், செயல் குணங்களும் பார்க்கப் பார்க்க விநோதமாயிருக்கும். சாதாரண மாக நாம் வீடுகளில் காணும் ஈ, எறும்பு, புழு, தவளை முதலியவற்றில் எத்தனையோ வகைகள் உண்டு. அவை பார்ப்பதற்கு எளி யவையாகத் தோன்றினும் அவை ஒவ் வொன்றும் மிக விந்தையான அமைப்புக் களைப் பெற்றிருக்கின்றன. அவற்றின் பயன் களும் விநோதமானவை.

அநேகமாக எல்லா வீடுகளிலும் காணப் படும் சொறித் தவளை யொன்றைப் பார்ப் போம். அது நம் வீடுகளில் எங்கும் காணப்

படும். சட்டி பானைகள் வைத்திருக்கும் இடங்களில் அது இடுக்குகளில் பதுங்கி வாழும். அதற்கும் சாதாரணத் தவளைக்கும் வேற்றுமை உண்டு. சாதாரணத் தவளையின் மேல் தோல் வழவழப்பாயும் ஈரமுள்ள தாயும் இருக்கும். சொறித் தவளையின் தோல் காய்ந்தும் சொறிகள் நிறைந்தகா யும் இருக்கும்.

இத் தவளை பகலில் அதிகமாக வெளியே வராது. அதற்கு வாய் மிகப் பெரியது. ஈ, கறையான் முதலிய பூச்சிகளைத் தின்பதில் அதற்கு விருப்பம் அதிகம். அதன் நா மிகவும் நீளமானது. அது தான் இருந்த இடத்திலிருந்தே தன் நீண்ட நாவைத் திடீ ரென்று நீட்டி ஈ முதலியவற்றை அதனில் ஒட்டிக்கொள்ளச் செய்யும்.

நாய்கள் சொறித் தவளைகளைக் கண் டால் உடனே அவற்றின்மேல் பாயும். ஆனால் ஒரு முறை அத் தவளையைப் பிடித் தால் நாய் அதனிடம் போகாது. ஏனென் றால் சொறித் தவளையின் கண்களுக்குப் பின் புறமாய் இரண்டு கரிய புடைப்புக்கள் இருக் கின்றன. அவை விஷப் பைகள். அவ் விஷம் நாய்க்குப் பிடிக்காது. ஆகவே ஒரு முறை ஒரு சொறித் தவளையைப் பிடித்த நாய் மறு முறை அதனிடம் போகாது.

தவளைக்குக் கண்கள் எப்படி யிருக்கின்றன. பார்த்திருக்கிறீர்களா? அதற்குக் கழுத்தைத் திருப்பிப் பார்க்க முடியாது. ஆதலால் பக்கங்களில் கண்கள் குழிகளில் அமைக்கப்படாமல் அவை உயர்த்தி வைக்கப்பட்டுள்ளன. கண்களுக்குப் பின்னே இரண்டு புள்ளிகள் போலத் தோன்றுபவைகளே அதன் காதுகள்.

தவளைகளுக்கு முன்னங்கால்கள் குட்டையாகவும், பின்னங்கால்கள் நீளமாகவும் இருக்கும். அவற்றால் அது நீண்ட தூரம் பாயும்.

இது போன்ற பல உயிர்ப் பிராணிகளையும் நாம் ஊன்றிப் பார்க்க வேண்டும். அவற்றின் பழக்க வழக்கங்களைக் கவனிக்க வேண்டும். அப்படிச் செய்வதால் நல்ல அறிவு உண்டாகும்.

**பயிற்சி :**

**சொற்கள்**

எண்ணிக்கை　விந்தை　விஷம்
வழக்கம்　அளவு　விநோதம்
உயர்த்தி　செயல்　உடல்
பதுங்கி　புள்ளி　குணம்
உறுப்பு　நா　ஊன்றி
சாதாரணமாக　புடைப்பு　பழக்கம்
சட்டிப்பானை　ஏனென்றால்　ஒருமுறை
திடீரென்று　விஷப்பை　மறுமுறை
முன்னங்கால்　பின்னங்கால்　செயல்குணம்

## வினாக்கள்

(1) சொறித் தவளை வீடுகளில் எங்கே காணப்படும்?

(2) அதன் தோல் எப்படி இருக்கும்?

(3) தவளை தன் இரையை எப்படிப் பிடிக்கும்?

(4) நாய் தவளையை ஒருமுறை பிடித்தால் மறுமுறை பிடிக்காது. ஏன்?

(5) தவளையின் கண்கள் எப்படி அமைந்துள்ளன? ஏன்?

(6) தவளையின் கால்கள் எப்படி உள்ளன? அதனால் என்ன பயன்?

## இலக்கணம்

சில பெயர்ச் சொற்கள் **பொருள்களைக்** காட்டும். உ-ம். நாற்காலி.

சில பெயர்ச் சொற்கள் **இடங்களைக்** காட்டும். உ-ம். வீடு.

சில பெயர்ச் சொற்கள் **காலத்தைக்** காட்டும் உ-ம். செவ்வாய்.

பின்வரும் பெயர்ச் சொற்கள் எவற்றைக் காட்டுகின்றன?

உலகு, தவளை, இரவு, பூச்சி, குழி, பிராணி.

## படம்

தவளையின் படம் ஒன்று எழுது.

# 7. உயிரினும் மானமே பெரியது

## ஒரு நாடகம்



[சேரன் கணைக்கால் இரும்பொறைக்கும் சோழன் செங்கணானுக்கும் போர் உண்டாயிற்று. அப்போரில் சேரன் பிடிக்கப்பட்டான். அவனைச் சோழன் குடவாயில் கோட்டத்துச் சிறையில் அடைத்து வைத்திருந்தான்.]

### காட்சி 1.

**இடம்:** சிறை.

**காலம்:** பிற்பகல்.

சேரன் சிறையினுள் இருக்கிறான். இரண்டு காவலர்கள் சிறையைக் காத்து வருகின்றனர்.

**சேரன்:** அரசனுய்ப் பிறந்தேன்! வணங்கா முடியாய் வாழ்ந்தேன்! இன்று நாய் போல் கட்டுண்டு கிடக்கிறேன். தாகம் அதிகமாகிறது. தண்ணீருக்குத் தவிக்கும் நிலை வந்து விட்டது! ஏ! காவலா!

**முதற் காவலன்:** என்னடா முணுமுணுக் கிறுன்?

**இரண்டாம் காவலன்:** அவனை என்னவென்று கேளேனடா!

**மு. காவலன்:** கூப்பிடட்டுமே!

**சேரன்:** காவல! காவல!

**மு. காவலன்:** காவல! ஏன் எனக்குப் பெயர் இல்லையோ?

**சேரன்:** காவல!

**மு. காவலன்:** என்ன ஐயா, சும்மா, உயிரை வாங்குகிறீர்!

**சேரன்:** தண்ணீர் வேண்டும்! தருவாயா!

**மு. காவலன்:** ஆகட்டும்.

### காட்சி 2.

**இடம்:** சோழன் அரண்மனை.
**காலம்:** பிற்பகல்.

*சோழன் புலவர் ஒருவரோடு பேசிக்கொண்டிருக் கிறுன்.*

**சோழன்:** புலவர் பெருமானே! தாங்கள் பாடிய நூல் எவ்வளவு அருமையாய் இருக்கிறது! இதற்கு எவ்வளவு பரிசு

கொடுத்தாலும் அமையும், தாங்கள் விரும்புவது ஏதேனும் உண்டோ?

**புலவர்:** என் நண்பன் சேரன் சிறையில் துன்புறுகிருன். அவனை விடுதலை செய்தால் அதுவே போதும்.

**சோழன்:** நானே அவரை விடுதலை செய்வதாகத் தான் இருக்கிறேன். தங்களிடமே ஓர் உத்தரவு எழுதித் தருகிறேன். அவரை விடுதலை செய்து நாளை இங்கே அழைத்து வாருங்கள். அவருக்குத் தகுந்த மரியாதைகள் செய்தனுப்புகிறேன். தங்களுக்கும் தகுந்த பரிசில்கள் கொடுத்தனுப்ப விரும்புகிறேன்.

**புலவர்:** அரசே, மிகுந்த நன்றியறிவுடையவனுகிறேன். நாளை, சேரருடன் தங்களை வந்து காண்பேன்.

### காட்சி 3.

**இடம்:** சிறைச்சாலை.

**காலம்:** மாலை.

சேரன் சிறைக்குள் இருக்கிருன். ஒரு காவலன் வெளியில் நிற்கிருன்.

**சேரன்:** என்ன! என் உயிர் இவ்வளவு மேலானதா? மானங்கெட்டபின் உயிர் வாழவும் வேண்டுமோ? நான்கு நாழிகையாய்த் தண்ணீர்க்கு நான்

கெஞ்சவும், இக் காவலன் என்னை இகழவும் நேர்ந்ததே! இனி, அவன் தண்ணீர் கொண்டு வந்து கொடுக்கும் வரையில் நான் உயிர் வைத்திருக்க வேண்டுமா? என் ஆசிரியருக்காக இது வரை காத்திருந்தேன். அவரும் வருவதா யில்லை. அவருக்காகத் தரையில் ஒருகடி தம் எழுதி வைத்து உயிரை விடுகிறேன்.

(எழுதுகிருன்)

**1-காவலன் :** ஏ! ராசா! உனக்குத் தண்ணீர் கொண்டு வந்து தொலைத்திருக்கிறேன். குடித்துக் கொள்.

**சேரன் :** காவலரே! உம் தண்ணீரைக் குடித்து நான் உயிர் வைத்திருப்பதினும் என் மானத்தைக் காத்து அவ்வுயிரை விடுகிறேன்.

(சாகிருன்)

**1-காவலன் :** ஐயோ! இவன் செத்துத் தொலைந்தானடா! என்னடா செய்கிறது?

**2-காவலன்:** ஐயோ! குடிமுழுகிப்போயிற்றே! அரசர் அறிந்தால் என்ன ஆகுமோ!

(புலவர் வருகிருர்)

**புலவர் :** காவலர்களே! என் நண்பர் சேர மன்னர் எங்கே? அவருக்கு விடுதலை ஓலை கொண்டு வந்திருக்கிறேன்.

(சேரனைப் பார்த்து)

ஐயோ! நண்பா! நீ இறந்து போயினையோ? உன் விடுதலைக்காக அரும்பாடு பட்டேனே! நீ இறக்கும் போது என்ன நினைத்தாயோ?

இதோ என்னவோ எழுதியிருக்கிறதே! பார்க்கலாம்.

(படிக்கிருர்)

என் ஆருயிர் ஆசிரியரே! உம் திருவடிகளைத் தொழுது இறக்கிறேன். அரசர் குலத்தில் பிறந்து போர்க்களத்தில் மாளாமல் உயிர் வாழ விரும்பிச் சிறையில் வாழ உடன் பட்டேன். அவ்வாறு மானம் அழிந்தேன். தண்ணீர் கேட்டுக் காவலனுல் இகழப்பட்டேன். இப்படி உயிர் வாழ்வதிலும் இறப்பது மேலாகும்; ஆதலால் உயிர் துறக்கிறேன். தங்கள் திருவடிகளுக்குப் பிழை செய்திருந்தால் மன்னிக்க வேண்டுகிறேன். வணக்கம்.

சேரன்

**புலவர்:** கவரிமான் தன் மயிர் நீப்பின் உயிர் வாழாது; அதைப் போலவே இவரும் தம் மானம் நீத்தபின் உயிர் வாழாமற் போயினுர். இவரே மானிடர்! இவரே அரசர்! இவர் பெயர் நீடூழி வாழ்க!

## பயிற்சி:

### சொற்கள்

| | | | |
|---|---|---|---|
| கோட்டம் | அரண்மனை | பரிசில் | தொலை |
| குலம் | சிறை | பெருமான் | காவலன் |
| மானம் | இகழ் | கட்டுண்டு | துன்புறுகிறான் |
| கெஞ்ச | பாடு | துற | நிலை |
| விடுதலை | ஆசிரியர் | திருவடி | பிழை |

வணங்காமுடி — முணுமுணுக்கிறான்
மானம் கெட்டபின் — மானங்காத்து
குடிமுழுகிப் போகிறது — அரும்பாடு

பின் வரும் சொற்களைப் பெயர்களாகவும் வினைகளாகவும் உபயோகி.

அறை, ஆடு, ஆள், ஆறு, இடி.

### வினாக்கள்

(1) போர் எவர்க்கும் எவர்க்கும் நடந்தது ?
(2) சேரன் எச்சிறையில் வைக்கப்பட்டான் ?
(3) காவலன் அரசனை எவ்வாறு இகழ்ந்தான் ?
(4) புலவர் சேரனுக்காக என்ன செய்தார் ?
(5) அரசன் ஏன் இறந்தான் ?
(6) புலவர் என்ன சொல்லி வருந்தினார் ?

### இலக்கணம்

மரத்துக்குக் கிளை ஓர் **உறுப்பு**.
உடலுக்குக் கண் ஓர் **உறுப்பு**.
சில பெயர்கள் **உறுப்புக்களைக்** காட்டும்; இவற்றைச் சினைப்பெயர் என்பர்.

பின் வரும் பெயர்ச் சொற்களுக்குப் **பொருள், இடம், காலம், சினை** என்ற பாகுபாடு கூறுக :— புத்தகம், பள்ளிக்கூடம், சிறை, தலை, ஆவணி, அரசன்.

### கட்டுரை

சேரன் என்ன எழுதி இருப்பான் ?

# 8. நன்றி கொன்ற மாது



பல ஆண்டுகட்கு முன்னே, புகார் என்னும் நகரிலே ஒரு குடியானவன் தன் மனைவியோடு இல்லறம் நடத்தி வந்தான். அவர்களுக்குக் குழந்தையில்லாத குறையொன்று இருந்தது. அவர்கள் ஒரு கீரிப்பிள்ளையைக் குஞ்சியிலேயே பிடித்துத் தம் குழந்தைபோல் வளர்த்து வந்தார்கள். அது அவர்களிடம் மிகுந்த அன்பு காட்டி வந்தது.

இப்படியிருக்கும்போது குடியானவன் மனைவிக்கு ஓர் ஆண்குழந்தை பிறந்தது. அருமையாகப் பெற்ற அக்குழவியை அவர்கள் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்த்து வந்தனர்.

ஒரு நாள் குடியானவன் வயற்புறங் களுக்குச் சென்றிருந்தான். குழந்தை தொட்டிலில் உறங்கிக் கொண்டிருந்தது. அதன் தாய் அவசரமாய் அயல் வீட்டுக்குப் போக வேண்டியிருந்தது. அவள் கீரியை நோக்கி, "நான் வருமளவும் நம் குழந்தை யைக் கண்கொட்டாமல் பார்த்திரு. நான் ஒரு நொடியில் திரும்பி விடுகிறேன்" என்று சொல்லிப் போனாள்.

அவள் வெளியேறியவுடன் எங்கிருந்தோ ஒரு நாகம் தொட்டிலின் கயிற்று வழியாய் இறங்கி வந்து குழந்தையைக் கடிக்கப் போயிற்று. உடனே கீரி சரேரென்று அதன் மீது ஒரே தாவலில் பாய்ந்து அதன் கழுத்தை இறுகப் பிடித்துக் கடித்து அந்நாகத்தைக் கொன்றுவிட்டது.

அந்த மகிழ்ச்சியைத் தன் தாய்க்குத் தெரிவிக்கவேண்டுமென்றெண்ணிக் கீரி குருதி படிந்த வாயுடன் வீட்டின் வாயிலில் வந்தது. அதைக் கண்டு தாய், 'ஐயோ' என்று அலறி னாள். அது தன் குழந்தையைக் கடித்து விட்டு இப்படிப் புறப்பட்டுவிட்டது என்று அவள் எண்ணினாள். அவளுக்கு அளவு கடந்த கோபம் உண்டாயிற்று. அவள் அங்கே கிடந்த மரக்கட்டையைக் கையி

லெடுத்து, பாவி, கீரியே! என் குழந்தையையா நீ கடித்தாய்? என்று சொல்லிக்கொண்டு அதனை அக்கட்டையால் கொன்று விட்டாள்.

அவள் பரபரப்புடன் உள்ளே புகுந்தாள். கொடிய பாம்பு ஒன்று துண்டமாய்க் கிடப்பதையும் குழந்தை இன்பமாய்த் தொட்டிலில் உறங்குவதையும் அவள் கண்டாள். தனக்குப் பெரிய நன்றி செய்த கீரியை ஆராயாமல் கொன்றதை எண்ணி அவள் கண்ணீர் விட்டாள்.

அச்சமயத்தில் கணவன் வீட்டுக்கு வந்தான். நடந்த செய்திகளை அறிந்தான். அவனைத் துன்பம் ஒரு புறமும், கோபம் ஒரு புறமும் அலைத்தன. அவன் தன் மனைவியை நோக்கி, "நீ செய்த குற்றம் மிகவும் கொடியது. நீ பெரும் பாவியானாய்" என்று கூறி வருந்தினான்.

. அவ்வூரில் கோவலன் என்ற வள்ளலொருவன் இருந்தான். அவன் இச்செய்திகளைக் கேட்டு அவ்வீட்டுக்கு வந்து அவர்களுக்கு ஆறுதல் கூறினான். அவன் நூல் வல்லோர்களைக் கேட்டு அறியாமற் செய்த தீவினை போக ஆக வேண்டிய கழுவாய்களைச்

செய்ய அவர்களுக்குப் பணம் உதவினுன். அவற்றை அவர்கள் செய்தார்கள். என்ருலும் கீரிக்குத் தான் செய்த தீமையை அம்மாது மறக்கவேயில்லை.

## பயிற்சி :

### சொற்கள்

| | | |
|---|---|---|
| இல்லறம் | நொடி | கணவன் |
| குறை | இறுக | மனைவி |
| அவசரம் | குருதி | வள்ளல் |
| அயல் | ஆராயாமல் | ஆறுதல் |

நாளொருமேனியும் பொழுதொரு வண்ணமும், அளவு கடந்த.

பின்வரும் சொற்களைப் பெயர்களாகவும் வினைகளாகவும் உபயோகி.

இரை, ஈ, ஓடு, கல், துணி.

### வினுக்கள்

(1) குடியானவனுக்கும் அவன் மனைவிக்கும் இருந்த குறை யாது ?

(2) அதை அவர்கள் எப்படித் தீர்த்துக் கொண்டார்கள் ?

(3) கீரி ஏன் வாயிலில் சென்றது ?

(4) மனைவி ஏன் கீரியைக் கொன்ருள் ?

(5) கணவன் அவளைப் பாவி என்றது ஏன் ?

(6) கோவலன் அவர்களுக்குச் செய்த உதவி யாது ?

## இலக்கணம்

முன் பாடங்களில் 4 விதமான பெயர்ச் சொற்களை அறிந்தீர்கள்; இன்னும் 2 வகைகள் உண்டு.

*(1)* குணங்களைப் பற்றியவை - உ-ம். நன்மை, கருமை. இவை **குணப் பெயர்கள்;** பண்புப் பெயர்கள் என்றும் சொல்லலாம்.

*(2)* தொழில்களைப் பற்றியவை, உ-ம் நடத்தல், உண்ணல். இவை **தொழிற் பெயர்கள்.**

பின்வரும் பெயர்ச் சொற்களுக்கு வகைகள் கூறுக. நகர், கீரி, உறக்கம், வாய், கோபம், கை, நொடி.

## கட்டுரை

மனைவி அவசரப்படாதவளாய் இருந்திருந்தால் கீரியைக் கண்டவுடன் என்ன கேட்டிருப்பாள் ?

அதற்குக் கீரி என்ன விடை பகர்ந்திருக்கும் ?

---

# 9. அமெரிக்காவைக் கண்டுபிடித்தது



ஏறக்குறைய ஐந்நூறு ஆண்டுகளுக்கு முன்னே ஐரோப்பாக் கண்டத்திலே கொலம்பஸ் என்ற ஒருவர் இருந்தார். நம் இந்தியா ஐரோப்பாக் கண்டத்துக்குக் கிழக்கே உள்ளது. கொலம்பஸ் இந்தியாவிற்கு வருவதற்கு ஒரு புதிய வழியைக் கண்டுபிடிக்க விரும்பினார். அவருக்கு உலகம் வட்ட வடிவானது என்பது தெரியும். ஆகையால் அவர் தம் நாட்டினின்று மேற்கு நோக்கிச் சென்று கொண்டேயிருந்தால் இந்தியாவுக்கு வந்துவிடலாம் என்று எண்ணினார்.

அவர் மூன்று கப்பல்களுடன் மேற்கு நோக்கிப் புறப்பட்டார். அவருடன் பலர் துணையாகச் சென்றனர். கப்பல்கள் கடலில் சென்றன. எங்கும் ஒரே நீர். நீரையன்றி வேறொன்றும் கண்களிற் படவில்லை. நாட்கள் பல சென்றன. அறுபது நாட்கள் ஆயின. நிலம் எதையும் அவர்கள் காண வில்லை. கொலம்பஸுடன் சென்றவர்கள் முணுமுணுக்கத் தொடங்கினர்கள். வழி தெரியாமல் கடலில் போய்க்கொண்டே யிருந்தால் அது எங்கே கொண்டுபோய் விடுமோ என்று அவர்கள் அஞ்சினர்கள்.

கொலம்பஸ் மட்டும் மனத்திட்பத் துடன் இருந்தார். இந்தியாவுக்குப் புதிய வழியைக் கண்டுபிடித்துவிடலாம் என்று அவர் உறுதியாயிருந்தார். அவர் தம் மக்களைப் பொறுமையுடன் இருக்கும்படி கெஞ்சினர். அப்பொழுது சில நிலப்பற வைகள் வானத்தில் பறந்தன. நிலம் அரு கில் இல்லாவிட்டால் பறவைகள் எங்கிருந்து வரமுடியும் என்று அவர் எண்ணினர். அவர் என்ன சொன்னலும் அவருடைய துணைவர்களுக்கு நம்பிக்கை உண்டாகவில்லை. அவர்கள் அவரைத் தூக்கிக் கடலில் எறிந்து விட்டுத் தாம் மட்டும் வந்த வழியே திரும்பி

விடத் தீர்மானித்தார்கள். நாட்கள் அறு பத்து மூன்றும் ஆயின.

திடீரென்று ஒருவர் கண்ணில் நிலம் தென்பட்டது. அவர், 'நிலம்! நிலம்' என்று கூவினர். எல்லோரும் பார்த்தார்கள். கொலம்பஸ் நிலமொன்று தூரத்தில் தெரி வதைக் கண்டு கீழே மண்டியிட்டுக் கடவு ளுக்கு நன்றி கூறினர்.

அவர்கள் அந்த இடத்துக்குச் சென்றார் கள். அங்கேயுள்ள மனிதர்களைக் கண்டார் கள். கொலம்பஸ் அந்த நிலத்தை இந்தியா என்றும் அந்த மனிதர்களை இந்தியர் என்றும் கருதினர். ஆனல் அது புதியதொரு நிலம். அதன் இருப்பை அக்காலத்தார் எவரும் முன்னே அறிந்ததில்லை. அதுதான் அமெ ரிக்கா. இன்று உலகத்திலே மிகுந்த செல் வத்துடன் விளங்கும் கண்டமான அமெரிக்கா அதுவே.

பயிற்சி :

சொற்கள்

| | | |
|---|---|---|
| கண்டம் | பொறுமை | நம்பிக்கை |
| வட்டம் | பயின்று | இருப்பு |
| திட்பம் | துணை | விளங்கு |
| உறங்கி | வானம் | நன்றி |

| | |
|---|---|
| ஏறக்குறைய | நிலப்பறவை |
| முணுமுணுக்க | திடீரென்று |
| வேறொன்றும் | மண்டியிடு |

## வினாக்கள்

(1) உலகத்தின் வடிவு என்ன?

(2) கொலம்பஸ் மேற்கே சென்றால் எங்கே சேரலாம் என்று எண்ணினார்?

(3) அவருடன் எத்தனை கப்பல்கள் சென்றன?

(4) எத்தனை நாட்கள் அவர்கள் கடலிற் சென்றனர்?

(5) மக்கள் ஏன் அஞ்சினார்கள்?

(6) நிலத்தைக் காண முடியும் என்று கொலம்பஸ் நினைக்கக் காரணம் என்ன?

(7) நிலத்தைக் கண்டதும் கொலம்பஸ் செய்தது என்ன?

(8) கொலம்பஸ் கண்டுபிடித்த கண்டம் யாது?

(9) இந்தப் பாடத்துக்கு வேறு என்ன தலைப்புக் கொடுக்கலாம்?

## இலக்கணம்

பின்வரும் வாக்கியங்களில் உள்ள வினைச் சொற்களைக் காட்டுக.

நான் சென்ற ஆண்டு மூன்றாம் வகுப்பில் படித்தேன்.

நான் இந்த ஆண்டு நான்காம் வகுப்பில் படிக்கிறேன்.

நான் அடுத்த ஆண்டு ஐந்தாம் வகுப்பில் படிப்பேன்.

**படித்தேன், படிக்கிறேன், படிப்பேன்.**

இம்மூன்றுக்கும் உள்ள வேற்றுமை யாது?

## புள்ளிகள்

பின் வரும் வாக்கியங்களில் புள்ளிகள் இட்டுக் காட்டுக:

கொலம்பஸ் தம்முடன் வந்தவர்களைப் பார்த்து தயவு செய்து இன்னும் மூன்று நாட்கள் பொறுங்கள் என்றார் அவர்கள் அதற்கு இணங்காமல் நாங்கள் இனி உம்மோடு வரமாட்டோம் என்று சொன்னார்கள்

## கட்டுரை

கொலம்பஸ் நிலத்தைக் கண்ட பிறகு, அவருக்கும் அவரைச் சேர்ந்தவர்களுக்கும் இடையே நடந்த பேச்சை நீங்கள் ஊகித்துச் சொல்லுங்கள்.

# 10. விடுகதைகள்

1



தண் தரும் நீர் நிறைந்திருக்கும்
குளமுமல்லன்;
தவள நிறம் பெற்றிருக்கும்
சங்குமல்லன்;
கண்டவுடன் நரை விளங்கும்
கிழவனல்லன்;
காரிகையார் கை ஏறும்
கிளியுமல்லன்;
மண்டலத்தின் விலைப்படும்
ஓர் அடிமையல்லன்;
வாளாலே வெட்டி மடித்திட்ட போதும்
நாணயம் காட்டி எல்லோர்க்கும்
இதம் செய்வான்.
எவன் அவன்?

2



நிலத்தன்; நிலந்தனைத்
தேடும் நெருப்புமன்று.
நீள்வானத்தே பறக்கும்;
பறவையன்று.
தலைமீது கொம்பிருக்
கும்; பந்தரன்று.
பகரும் ஓர்வாலாட்டும்;
குரங்குமன்று.
சலத்லைதக் கண்டால்
அஞ்சும்; நரியுமன்று.

சண்டைக்குச் செல்லும் சேனுபதியன்று.
மைந்தர் கையாளும் கடிகாரமன்று.
நாடி இதன் பொருள் அறிந்து
சொல்லுவீரே.

3

எவரையும் ஒரு கண்
ணுகப் பார்ப்பார்;
கார்மிக்க நிறத்தார்;
வேற்றுமை பாரா
மல் சவத்திடத்தும்
பொருள் கவர்வார்.
சகுனத்திற்கும் சாப்
பாட்டிற்கும்
சமயம் நோக்கி வரு
வார்.



அருணனும் பின்வர முன்னே வருவார்.
மேலான ஆயுள் உள்ளார்.
அறிவுள்ளோரே இவர் எவர்? சொல்வீர்.

பயிற்சி:

**சொற்கள்**

| | | |
|---|---|---|
| தவளநிறம் | பந்தர் | கார் |
| நரை | பகரும் | சவம் |
| காரிகை | சேனுபதி | சகுனம் |
| மண்டலம் | மைந்தர் | அருணன் |
| நாணயம் | கடிகாரம் | ஆயுள் |

**வினுக்கள்**

(1) முள்ளங்கியின் இயல்புகள் யாவை?
(2) காற்ருடியின் இயல்புகள் யாவை?
(3) காகத்தின் இயல்புகள் யாவை?

# 11. கடிதங்கள்

முன்னொரு பாடத்தில் தபால்களில் முகவரி எழுதும் முறையைப் பற்றிப் படித்தீர்கள். இனி கடிதங்கள் எழுதுவது எப்படி என்று இங்குப் பார்ப்போம்.

கடிதங்களிற் பல வகைகளுண்டு. நண்பர்களுக்கும் உறவினர்களுக்கும் எழுதும் கடிதங்கள் ஒரு வகை. இவைகளே நாம் பெரும்பாலும் எழுதுபவை. இவற்றைச் சமூகக் கடிதங்கள் என்போம். நமக்கும் பிறரால் எவ்வளவோ காரியங்கள் ஆக வேண்டியிருக்கின்றன. உதாரணமாக, வெளியூரிலிருந்து ஒரு பொருளை நாம் தருவிக்க விரும்பலாம்; அல்லது, அந்நியர் ஒருவரால் நமக்கு ஏதேனும் காரியம் ஆக வேண்டியிருக்கலாம். இவ்வகையில் எழுதும் கடிதங்களைக் காரியக் கடிதங்கள் என்போம். அதிகாரிகளுக்கு எழுதும் கடிதங்களை உத்தியோகக் கடிதங்கள் என்னலாம். இன்னும் வேறு விதமான கடிதங்களும் உண்டு.

எல்லாக் கடிதங்களையும் எழுதுவதற்குச் சில பொது விதிகள் உண்டு. கடிதம் என்பது நாம் நேரில் பேசுவதற்குப் பதிலாய் எழுதுவது. பேசும்போது நாம் எவ்வளவு

நேர்மையாகவும் விளக்கமாகவும் பேச வேண்டுமோ அவ்வாறே கடிதத்தையும் நாம் எழுதவேண்டும். அன்றியும், எழுதப்படுகிறவர்க்கும் நமக்கும் உள்ள அன்பு நட்பு இவற்றிற்குரிய சொற்களைக் கையாள வேண்டும்.

இன்னும் கடிதத்தின் தலைப்பில் நம்முடைய இடம்; தேதி இவற்றை எழுத வேண்டும். பிறகு மரியாதையும் அன்பும் காட்டும் சொற்களால் கடிதத்தைத் தொடங்கிப் பிறகு செய்திகளை எழுத வேண்டும். முடிவில் நம் கையொப்பத்துக்கு மேலேயும் நம் அன்பையும் மரியாதையையும் காட்டக் கூடிய சொற்களை எழுதவேண்டும்.

கீழே ஒரு கடிதம் எழுதப்பட்டிருக்கும் முறையைக் காணுங்கள்.

30, வடக்குச் சித்திரை வீதி,
ஸ்ரீ ரங்கம்,
30-8-'51.

தேவரீர் என் அருமைத் தந்தையார் அவர்களின் திருவடிகளில் பல முறை வணங்கி எழுதுவது. இங்கு யாவரும் நலம். அங்கும் என் அன்புள்ள அன்னையும் தாங்களும் நலமென்றே எண்ணுகிறேன்.

இங்கு நான் நன்ருகப் படித்து வருகிறேன். எங்கள் பள்ளிக்கூடத்தில் ஆசிரியரும் பிள்ளைகளும் சேர்ந்து 15-9-'51 அன்று இங்கிருந்து புறப்பட்டு மேட்டூர் அணை பார்க்கப் போவதாக எண்ணி இருக்கிருர்கள். என் மாமாவும் மாமியும், நானும் போகலாம் என்று கூறுகிருர்கள். தங்கள் அன்பான உத்தரவை எதிர்பார்க்கிறேன்.

என் அன்புள்ள அன்னைக்கும் தங்களுக்கும் என் மனம் நிறைந்த வணக்கம்.

இங்ஙனம்,

தங்கள் அன்பும் பணிவுமுள்ள

**சோமு.**

இவ்வாறே நண்பர், உறவினர் முதலியோருக்கு முகவுரையையும் முடிவையும் ஏற்றபடி மாற்றி அமைத்து எழுதலாம்.

இனி, காரியக் கடிதம் ஒன்று எவ்வாறு

கீழே உள்ள கடிதத்தைப் பாருங்கள்.

வி. ரா. சந்திரன்
மாணவன்

40, அருண்டேல் தெரு,
மயிலாப்பூர், சென்னை-4.
31-8-'51

திரு. விவேகாநந்தா பதிப்பகத்தார்,
பிரசுரகர்த்தர்,
விஜயபுரம்,
திருவாரூர் ஜங்.

ஐயன்மீர்,

பின்னே காணப்பெறும் புத்தகப் பிரதிகளை அன்பு கூர்ந்து மேலே கண்ட என் முகவரிக்கு வி. பி. பி. வழியாக அனுப்ப வேண்டுகிறேன்.

| | | | |
|---|---|---|---|
| 1. | கமல வாசகம் | முதற் புத்தகம் | 2 பிரதிகள் |
| 2. | ஷை | 2-ஆம் புத்தகம் | 3 ,, |
| 3. | ஷை | 3-ஆம் புத்தகம் | 2 ,, |
| 4. | ஷை | 4-ஆம் புத்தகம் | 2 ,, |

இங்ஙனம்,
தங்கள் உண்மையுள்ள
**வி. ரா. சந்திரன்.**

**பயிற்சி:**

**சொற்கள்**

| | | |
|---|---|---|
| வகை | உத்தியோக | கையாள |
| உறவினர் | விதம் | திருவடி |
| பெரும்பாலும் | நேர்மை | அணை |
| சமூக | அன்றியும் | முகவுரை |
| அந்நியர் | நட்பு | பிரதி |
| அதிகாரி | | |

பொதுவிதி அன்புகூர்ந்து

இவற்றிற்குரிய பதிப்பகத்தார்

பொருள் வேற்றுமை என்ன ?

தலை × தளை, கட்டு × காட்டு, மனம் × மணம்.

## வினாக்கள்

(1) நம்மோடு ஒத்த நண்பர்க்கு எழுதும் கடிதத்தைத் தொடங்குவது எப்படி ?

(2) ஆசிரியர்க்கு இரண்டு நாள் ஊருக்குப் போய்வர அனுமதி கேட்டு எழுது.

(3) வீட்டில் வந்திருக்கும் ஏதேனும் ஒரு மண அழைப்புக் கடிதத்தைப் படித்துப்பார்.

## இலக்கணம்

வினைச் சொற்கள் காலம் காட்டும்.

எழுதினான்—இது நடந்த காலம் அல்லது **இறந்த** காலம்.

எழுதுகிறான்—இது நடக்கிற காலம் அல்லது **நிகழ்** காலம்.

எழுதுவான்—இது நடக்கப் போகும் காலம் அல்லது **எதிர்காலம்.**

பின் வரும் வினைச் சொற்களுக்குக் காலம் கூறு :—

வந்தோம், படிக்கிறான், உண்ணும், உறங்கினேன், பேசுவாய்.

# 12. தேசிங்கு மன்னன் குதிரையை அடக்கியது



[ஏறக்குறைய முந்நூறு ஆண்டுகட்கு முன்னே செஞ்சிக்கோட்டையில் தேசிங்கு ராஜன் என்ற மன்னன் இருந்தான். அவன் பல கலைகளிலும் வல்லவனாய் விளங்கினான். அக்காலத்தில் டில்லியிலிருந்த பாதுஷாவிடம் ஒரு முரட்டுக் குதிரை இருந்தது. அதை அடக்குவதற்குப் பலர் முயன்று தோற்றார்கள். தேசிங்கு அப்பொழுது இளம் பிராயத்தினன். அவன் டில்லிக்குச் சென்று அக்குதிரையை அடக்கி அதன் மீது ஏறிச் சவாரி செய்தான். இவ்வரலாற்றைக் கீழே காணலாம்.]

குதிரையின் அருகே வந்து நின்றான்
 குழந்தை தேசிங்கு ;
கொல்லும் வேங்கைபோல நின்றது
 குதிரையும் அப்போது.

பார்த்தான் மன்னன் லகானைக் கையால்
பாங்குடனே பற்றிப்
பாய்ந்தே ஏறி முதுகில் அமர்ந்தான்
பாலன் தேசிங்கு.

கலகல வென்றே சிரித்துப் பிடித்தான்
கையில் சாட்டைதனை ;
கனைத்த பரியைக் கழுத்தில் தட்டினான்
கண்மணி தேசிங்கு,

தட்டின தட்டில் குதிரை கிளம்பித்
தரையில் நில்லாமல்
தாவியே வானில் சென்று பாய்ந்தது
தங்கமேனிக் குதிரை.

மலையும் குன்றும் உடைந்து சிதறி
மண்ணில் விழுவதைப் பார் ;
குன்றுமலைகளைத் தாண்டிக் குதிரை
குதித்துப் பாயுது பார் !

அசுவம் போகும் வேகத் தாலே
அலையுது மேக மெலாம்
மேகம் இடித்து மின்னல் கக்கி
மழையைப் பொழியுது பார் !

புரவி போகும் வேகம் அறிந்தான்
புலிக்குட்டி தேசிங்கு
பொல்லாக் குதிரை தன்னைக் கொல்லப்
போகுதென் றறிந்தான்.

லகானை இழுத்துக் கொடுத்தான் சிமிட்டா
ராஜா தேசிங்கு
சிமிட்டா கொடுத்த வேகத்தினாலே
திகைத்து நின்றது பார் !
நின்ற குதிரையை டில்லிக்குத் திருப்பி
நேரே ஓட்டி வந்தான் ;
நிமிஷந்தன்னில் கீழே குதித்து
நின்றான் தேசிங்கு.

—தேசிங்குராஜன் கதை

பயிற்சி :

**சொற்கள்**

| | | |
|---|---|---|
| பாதுஷா | வேங்கை | மேனி |
| முயன்று | லகானை | அசுவம் |
| தோற்றார் | சாட்டை | சிமிட்டா |
| பிராயம் | கண்மணி | கனைத்து |

**வினாக்கள்**

(1) குதிரை செய்தவை யாவை ?
(2) தேசிங்கு அதை எவ்வாறு அடக்கினான் ?

**இலக்கணம்**

இப் பாடலில் பின்வரும் வினைச் சொற்கள் வந்துள்ளன.

நின்றான், பாய்ந்து, அறிந்தான், கொடுத்தான், இச்சொற்கள் எல்லாம் எந்தக் காலத்தைக் காட்டுகின்றன ? இவை ஒவ்வொன்றிற்கும் வேறு இரண்டு காலங்களையும் எழுது.

**கட்டுரை**

இப்பாடலில் வந்துள்ள வரலாற்றைத் தேசிங்கே சொல்லுவது போலச் சொல்லு.

# 13. மழைத் துளி சொன்ன கதை



ஒரு நாள் மல்லிகை மாலை நேரத்தில் தன் தோழிகளை விளையாடும் தோட்டத்தில் வந்து கூடுவதாகக் கூறியிருந்தாள். ஆதலால் அவள் பள்ளிக்கூடம் விட்டு வீடு வந்ததும் அவசரம் அவசரமாகச் சிற்றுண்டியை உண்டு விட்டுப் புதிய உடைகளை அணிந்து கொண்டு வெளியே புறப்பட்டாள். அப்பொழுது எதிர்பாராமல் ஒரு மழை பெய்தது. மல்லிகைக்கு உண்டான ஏமாற்றத்துக்கு எல்லையில்லை. அவள் முகத்தைச் சுளித்துக் கொண்டு "பாழும் மழை என் பொழுது போக்கைக் கெடுத்துவிட்டது" என்று கூறிக்கொண்டாள். அவ்வாறு சொல்லிக்கொண்டே தன் முகத்தில் விழுந்த

சில நீர்த்துளிகளை விரலால் வழித்துக் கீழே எறிந்தாள்.

அவள் மேலே சொன்னபடி பேசி முடித்தாளோ இல்லையோ, எங்கிருந்தோ ஒரு குரல் "என்னை ஏன் திட்டுகிறாய்?" என்று கேட்டது. மல்லிகை திடுக்கிட்டாள். அவள் வீட்டுத் தாழ்வாரத்தில் சில பூச்செடிகள் வளர்ந்து கொண்டிருந்தன; அவற்றிலொரு செடியில் ஓர் இலையின் நுனியில் முத்துப் போல ஓர் உருவம் நின்றுகொண்டிருந்தது. அது கண்ணாடிபோல ஒளி வீசிற்று. அது மிகச் சிறியதாயிருந்தாலும் ஒரு பெண் வடிவில் அது தோன்றியதைப் பார்த்து மல்லிகை வியந்தாள். மறுபடியும் அக்குரல், 'என்னை ஏன் திட்டுகிறாய், மல்லிகா?' என்றது.

மல்லிகை அப் பெண்ணைப் பார்த்து, "நான் உன்னைத் திட்ட வில்லையே! நீ யார்? இங்கே எப்படி வந்தாய்?" என்று கேட்டாள். அதன் பிறகு அவர்களுக்குள்ளே பின்வருமாறு பேச்சு நடந்தது.

**மழைத்துளி**: நீ உன் முகத்திலிருந்து வழித்தெறிந்தனையே! அந்த மழைத்துளியே நான்.

**மல்லிகை**: உன்னைப் பார்க்க என்ன விந்தையா யிருக்கிறது, நீ எங்கிருந்து இங்கே வந்தாய்?

**மழைத் :** வானத்திலிருந்து வந்தேன்! உனக்குத் தெரியாதா?

**மல்லிகை :** வானத்தில் எப்படி யிருந்தாய்?

**மழைத் :** எனக்கு அங்கே பலகோடி சகோதரர்களும் சகோதரிகளும் உண்டு. நாங்கள் ஒன்றுகூடி உல்லாசமாக உலாவிக்கொண்டு இருந்தோம்.

**மல்லிகை :** இங்கே எப்படி வந்தாய்?

**மழைத் :** எங்கள் மன்னராகிய காற்று ஏவின இடத்துக்கு நாங்கள் செல்லவேண்டும். இவ்வூர் மழை இல்லாமல் வாடுகிறதென்று அவர் எங்களை இங்கே அனுப்பினர். எங்கள் மீது குளிர்ச்சியை அவர் பாய்ச்சினர். நாங்கள் துளிகளாகி மெதுவாக இறங்கினேம்.

**மல்லிகை:** வானத்தில் இருந்தபோது எப்படி இருந்தீர்கள்?

**மழைத் :** நீராவியாக இருந்தோம்.

**மல்லிகை :** நீங்கள் எங்கிருந்து வானத்துக்கு வந்தீர்கள்?

**மழைத் :** நாங்கள் கடலில் நீராக இருந்தோம். சூரியன் எங்களைக் காய்ச்சி ஆவியாய் மா்ற்றினன்.

**மல்லிகை :** நல்லது. நீங்கள் மழையாகப் பெய்து என்ன செய்வீர்கள் ?

**மழைத் :** மண்ணுக்குள் பலர் போவோம். அங்கே பயிர் பச்சைகளுக்கெல்லாம் உணவாவோம். பலர் மண்ணுக்குள் நெடுந்தூரம் சென்று விடுவோம். பலர் நிலத்தின்மீது வழிந்தோடி வாய்க்கால் களாகி, ஆறுகளாகி முடிவில் நாங்கள் எங்கள் பிறந்த இடமாகிய கடலுக்கே செல்வோம்.

**மல்லிகை :** மண்ணுக்குள் போனல் உங்க ளுக்கு அச்சமாயிராதா ?

**மழைத்:** அச்சமேன்! மண்ணுக்குள் எத்தனை அழகான இடங்கள் இருக்கின்றன ? அங்கே நாங்கள் விளையாடிக் கொண் டிருப்போம்.

**மல்லிகை :** பிறகு வெளியே வரவே மாட்டீர் களோ ?

**மழைத் :** ஏன் வரமாட்டோம் ? கிணறுகளி லுள்ள நீரெல்லாம் நாங்களே. ஊற்றுக் களிலிருந்தும் நாங்கள் தாம் வெளி வரு கிறோம்.

**மல்லிகை:** இவ்வளவு வேலை செய்கிறீர்களா? ஆறு, குளம், கிணறு, ஊற்று எங்கும் [illegible]

**மழைத் :** ஆம்!

**மல்லிகை :** உன் பெருமையை அறியாமல் உன்னைத் திட்டினேன்! மன்னிக்க; என் விளையாட்டை நீ கெடுத்துவிட்டாயே என்று தான் சினந்தேன்!

**மழைத் :** உன் விளையாட்டைப் பெரிதாய் நினைக்கிருயா? ஊர் நன்மையைக் கருது கிருயா? நாங்கள் பொழியாவிட்டால் ஊர் என்னவாகும்? எண்ணிப்பார்.

**மல்லிகை :** ஆம். உண்மையே! மழை இல்லா விட்டால் உலகு ஏது? உன் பெருமையை உணர்ந்தேன்.

இப்படிப் பேசிக் கொண்டிருந்தபோதே மழைத்துளிப் பெண் மறைந்துவிட்டாள். பொழுதும் போய்விட்டதால் மல்லிகை தன் வீட்டினுள் சென்ருள்.

**பயிற்சி:**

**சொற்கள்**

| | | |
|---|---|---|
| தோழி | வானம் | ஆவி |
| திட்டுகிருய் | உல்லாசம் | அச்சம் |
| உருவம் | குளிர்ச்சி | ஊற்று |
| விந்தை | காய்ச்சி | தாழ்வாரம் |
| சிற்றுண்டி | நீராவி | |

**விஞக்கள்**

(1) இலை நுனியிலிருந்து துளி எப்படித் தோன் றிற்று?

(2) மேகத்திற்கு மன்னர் யாராம்?

(3) மேகம் எப்படி உண்டாகிறது?

(4) ஊற்று நீரும் மழை நீரே என்பது எப்படி?

## இலக்கணம்

உலகப் படைப்பில் **ஆண், பெண்** என்ற பிரிவுகள் இருப்பதைக் காண்கிறோம். அவ் ஆண் பெண்களைக் குறிக்கச் சொற்களும் அமைந்திருக்கின்றன. ஆணுக்குரிய சொற்களைச் சிறிதளவு மாற்றியே பெண்ணுக்குரிய சொற்களை உண்டாக்கலாம்.

உதாரணம்: தோழன்—தோழி, இவற்றை ஆண்பால், பெண்பால் சொற்கள் என்பர்.

பின்வரும் ஆண்பால் சொற்களைப் பெண்பாற் சொற்களாக மாற்று.

**அரசன், தோழன், சகோதரன், வேலைக்காரன்.**

## கட்டுரை

கடல்நீர், மேகநீர், ஆற்றுநீர், ஊற்று நீர் எல்லாம் ஒன்றே; எப்படி? சில வாக்கியங்களில் சொல்லு.

# 14. அரசாட்சி எளிதோ?



'உனக்கென்ன? நீ ஓர் அரசன்!' என்று ஒருவரைப் பார்த்து மற்றொருவர் சில சமயங்களில் பேச நாம் கேட்டிருக்கிறோம். அரசனாயிருத்தல் செல்வமுடையதென்றும் பெருமையுடையதென்றும் உலகம் நினைக்கும். ஆனால், அரசனுக்கு உரிய பொறுப்பும், கவலைகளும் இவ்வளவென்று பலர் கருதுவதில்லை. பதவியில் மேலோங்க ஓங்கக் கடமைகளும் பொறுப்புக்களும் அதிகம்.

நம் தமிழகத்தில் மன்னர்கள் சிறிதளவும் தம் கடமைகளில் தவறாதவர்களாக இருக்க

அரசன் அறியாமல் தன் கையால் ஒருகுற்றம் செய்து விட்டதற்காகத் தன் கையையே வெட்டிக் கொண்டான். அவன் அக் கைக்குப் பதிலாகப் பொன்னுல் ஒரு கை செய்து வைத்துக் கொண்டான். அவனுக்குப் பொற்கைப் பாண்டியன் என்ற ஒரு பெயர் உண்டாயிற்று. மற்ருெரு பாண்டியன் ஆராயாமல் யாரோ ஒருவன் சொற்கேட்டுக் கோவலன் என்ற குற்றமற்றவனைக் கொன்ருன். அவ்வாறு தான் தவறு செய்ததை உணர்ந்ததும் அவன் தன் உயிரைத் தானே மாய்த்துக் கொண்டான். இவ்வாறு நீதியை உயிரினும் மேலாய் மதித்தவர்களின் வரலாறுகள் நம்மிடையே எவ்வளவோ விளங்குகின்றன.

நெடுநாள்களுக்கு முன்னே சோழர்களின் தலைநகர்களுள் ஒன்ருன ஆரூரிலே மனுச்சோழன் என்ற மன்னன் ஆண்டு வந்தான். அரண்மனை வாயிலில் அவன் ஒரு மணியைக் கட்டி வைத்திருந்தான். அதனை ஆராய்ச்சி மணி என்பர். எவரேனும் அரசனிடம் தன் குறையைத் தெரிவித்துக்கொள்ள வேண்டுமானுல், அவர் அந்த மணியை அசைப்பர்; உடனே அரசன் வெளியே

குறையைக் கேட்டு அதனை உடனே தீர்த்து வைப்பான். ஆனால் அந்த மணி நெடுநாளாக அடிக்கப்படாமலே இருந்தது.

ஒரு நாள் திடீரென்று அம் மணிச் சத்தம் கேட்டது; அரசன் திடுக்கிட்டான்; வாயிலில் ஓடிவந்தான். அவனுடன் அமைச்சர்களும் வந்தார்கள். வாயிலில் ஒரு பசுமாடு கண்ணீர் ஆறாகப் பெருக்கிக் கொண்டு நின்றது. அரசன் அதனைப் பார்த்து மனம் கரைந்தான். அவன் தன் அமைச்சர்களை நோக்கி "இவ்வாயில்லா உயிருக்கு இன்னல் விளைத்தவர் யாரோ? அமைச்சர்களே! உங்கள் ஆட்சி நன்றாயிருக்கிறது" என்று கூறினான்.

அச் சொற்களைக் கேட்ட அமைச்சர்களுள் ஒருவன் "வேந்தே! இதன் துன்பத்தை நான் அறிவேன். தங்கள் மகன் தேரூர்ந்து வீதி வழியே சென்று கொண்டிருந்தான். தேரைச் சுற்றிக் கூட்டம் அளவில்லாமல் நின்றது. எங்கிருந்தோ இப்பசுவின் கன்று அங்கே கூட்டத்துள் புகுந்து தேர்க்காலில் பட்டு அரைந்து போயிற்று" என்றான்.

அரசன் தாய்ப் பசுவை நோக்கி "தாயே! நீ வாயில்லாப் பிராணி. இருந்தாலும் உன் பிள்ளையை இழந்ததால் நீ அடைந் [illegible] இவ்வளவென்பதை நான்

உணரக்கூடும். உன் கன்றைத் திருப்பித் தர என்னுல் இயலாது. எனினும், உனக்குக் குற்றம் செய்தவனைக் கொன்று நான் என் செங்கோலை நிலை நிறுத்துவேன்'' என்று கூறி ஓர் அமைச்சனை நோக்கி இப் பசுவின் கன்றைக் கொன்ற பாதகனைத் தேரிலிட்டு அரைத்துக் கொன்றுவா'' என்று கட்டளை யிட்டான்.

அமைச்சர்கள் அரசகுமாரனைக் கொல்ல லாகாது என்று எவ்வளவோ சொல்லிப் பார்த்தார்கள். அரசன் அச் சொற்களுக்குச் செவி சாய்க்கவில்லை, அவனுல் கட்டளையிடப் பட்ட அமைச்சன் வேறு வழியில்லாமல் வெளியேறினுன். ஆனுல் அவனுக்கு அரசன் மகனைக் கொல்ல மனம் வரவில்லை. அவன் தன்னைத் தானே கொன்று கொண்டான்.

அரசனுக்குத் துன்பத்துக்குமேல் துன்ப முண்டாயிற்று. கன்றின் கொலைக்காக அவன் தன் மகனையும், அமைச்சன் தற் கொலைக்காகத் தன்னையும் கொன்றுவிட அவன் முடிவு செய்தான்; அவ்வண்ணம் அவன் தானே தேரூர்ந்து தன் மகனைத் தேர்க் காலில் இட்டு அரைத்தான்; பிறகு அவன் தானே தன்னைக் கொன்று கொள்ளத் தொடங்கினுன். அப்பொழுது கிழவொன்று

கடவுளருளால் இறந்த கன்றும் குமாரனும் அமைச்சனும் உயிர் பெற்றெழுந்தனர்.

இவ்வாறு புராணம் கூறுகிறது. அரசருடைய பொறுப்பையும் கடமையையும் எடுத்துக் காட்ட இவ் வரலாறு இன்றும் எல்லோராலும் பேசப்பட்டு வருகிறது. இவ் வரலாற்றை ஒட்டிய அறிகுறிகளை நாம் இன்னும் ஆரூரில் காண்கிறோம்.

**பயிற்சி:**

**சொற்கள்**

| | | |
|---|---|---|
| உரிய | வரலாறு | அமைச்சன் |
| பொறுப்பு | ஆராய்ச்சி | கொலை |
| கவலை | குறை | புராணம் |
| பதவி | இன்னல் | எடுத்துக்காட்ட |
| கடமை | அரை | ஒட்டிய |

மேலோங்க, தேரூர்ந்து, செங்கோல், நிலை நிறுத்துவேன், செவி சாய்க்கவில்லை.

இரு பொருள்கள் கூறுக:

கவலை, மணி, சத்தம், ஆறு, ஊர்.

பின் வரும் வினைகளிலிருந்து பெயர்களை உண்டாக்கு:—

நினை, இழ, கொல்.

**வினாக்கள்**

(1) அரசனை உலகம் ஏன் பெருமையாகக் கூறுகிறது?

(2) பொற்கைப் பாண்டியன் என்ற பெயருக்குக் காரணம் யாது?

(3) கோவலனுக்கு அரசன் செய்த தீங்கு யாது?

(4) ஆராய்ச்சி மணியின் உபயோகம் என்ன?

(5) தாய்ப் பசுவை நோக்கி அரசன் கூறியவை என்ன?

(6) சோழன் நீதியுள்ளவன் என்பது எப்படித் தெரிந்தது?

## இலக்கணம்

சொற்களில் ஆண், பெண் என்ற பிரிவை மக்களைக் குறிக்கும் பெயர்களில் மட்டும் தாம் கொள்கிறோம். விலங்குகள், பறவைகள், கல், மண் முதலியவற்றில் இவ் வேற்றுமையை நாம் கொண்டாடுவதில்லை. அவற்றையெல்லாம் **ஒன்றன்பால்** என்கிறோம்.

பின் வரும் சொற்களுக்குப் பால் கூறுக.

பசு, மகன், நகரம், சோழன், உபாத்தியாயினி.

## கட்டுரை

(1) மனுச்சோழன் மகனை அரைத்தது நியாயமா? உன் கருத்தைச் சொல்லு.

(2) நீ அரசனாய் இருக்க விரும்புகிறாயா? ஏன்?

# 15. அழுக்குச் சுப்பன்




ஓரூரில் சுப்பன் என்ற பெயருடைய சிறுவன் ஒருவன் இருந்தான். அவன் பல் துலக்குவதில்லை; முகங் கழுவுவதில்லை; தலையைச் சீவுவதில்லை; உடலைத் தேய்த்துக் குளிப்பதில்லை; துணியைத் துவைத்துக் கட்டுவதில்லை; அவன் உடலில் அழுக்கு படலம் படலமாய்ப் படிந்து கிடக்கும். தலை பேனும் ஈருமாய் நிறைந்து கிடக்கும். அவன் உடலிலிருந்து துர் நாற்றம் எழும்பி வீசும். அவனைக் கண்டோர் எவரும் அருவருப்பார். அவனருகில் எவரும் அணுக விரும்பார். அவன் எப்போதும் நோயால் துன்புற்று வந்தான். இப்படியிருந்தும் அவனுக்கு நல்லறிவு உண்டாகவில்லை.

அவன் ஒரு நாள் தன் அத்தையின் ஊருக்குச் சென்றான். அத்தை அவனை அன்புடன் வரவேற்றாள். ஆனால் அவனுடைய அழுக்குடலையும் அழுக்குடையையும் கண்டு அவள் மனம் வருந்தினாள். அவள் சுப்பனை நோக்கி, "அப்பா! இந்த ஊரில் உனக்கோர் அண்ணன் இருக்கிறான். நீ அவனைக் காண வேண்டாமா?" என்றாள். சுப்பனுக்குத் தன் அண்ணனைக் காண வேண்டுமென்ற அவா உண்டாயிற்று. அவன் சிற்றுண்டி அருந்தி விட்டு அண்ணனைப் பார்க்க வீட்டை விட்டு வெளியே சென்றான்.

முதலில் அங்கொரு கோழி அவன் முன் சென்றது. அக்கோழியே தன் அண்ணனென்று அவன் கருதி அதை நோக்கி, 'அண்ணா!' என்று அழைத்தான். அதைக் கேட்டவுடன் கோழி நகைத்து, "அட! அழுக்குப் பிடித்த பயலே! நான் உன் அண்ணனா? என் உடலைப் பார்; எவ்வளவு பளபள வென்று நான் அதனை வைத்திருக்கிறேன். போ; உன்னோடு நான் பேசவும் வெட்கமடைகிறேன்" என்றது.

சுப்பனுக்கு மனம் வருந்தியது. அவன் சிறிது தூரம் சென்றான். அங்கே ஒரு பூனை ஒரு திண்ணையில் படுத்துக்கொண்டு தன்

உடலைத் தன் நாவால் நக்கிக்கொண்டிருந்தது. சுப்பன் அதுவே தன் அண்ணனுயிருக்கலாமென்று எண்ணி அதனண்டை போனன். உடனே அந்தப் பூனை எழுந்து, "அடே! அழுக்குப் பிடித்த பையா! என் அருகில் வராதே! உன்னிடமிருந்து வீசும் அழுக்கு நாற்றம் என் நாசியைத் துளைக்கிறது. நான் எப்படி என் உடலை வைத்திருக்கிறேன் பார். போ! போ!" என்றது.

சுப்பன் நாணத்தால் தலை குனிந்து தெருவினிலே சிறிது தூரம் சென்றான். அங்கே ஒரு சாக்கடையில் ஒரு பெரிய பன்றி பல குட்டிகளுடன் சேற்றில் புரண்டு கொண்டிருந்தது. அவற்றின் உடலெல்லாம் சேறு நிறைந்து கிடந்தது. அங்கிருந்து கிளம்பிய நாற்றத்தைச் சுப்பனல் தாங்க முடியவில்லை. அவ்வளவு அழுக்கு நிறைந்த இடத்தை அவன் கண்டதேயில்லை. அவன் அவ்விடத்தை விட்டு அகல எண்ணினன். ஆனல் பன்றி ஓடோடியும் அவனிடம் வந்து, "தம்பி, உன் வருகையை நான் நெடுநாளாக எதிர்பார்த்திருக்கிறேன்; நாமிருவரும் கூடி இச்சாக்கடையில் விளையாடுவோம், வா" என்று அழைத்தது.

சுப்பனுக்கு அப் பன்றியைக் காணவும் மனங்கொள்ளவில்லை. அது தன்னைத் தம்பி

என்று அழைத்ததைக் கேட்டு அவன் மிகவும் நாணினன். இனி ஒரு கணங்கூட அழுக்குடன் இருக்கக் கூடாதென்று அவன் தீர்மானித்தான். உடனே அவன் குளக் கரைக்குச் சென்று பற்களை நன்றாகத் துலக்கினன். உடலெல்லாவற்றையும் நன்றாகக் கழுவிக் கொண்டான்.

அவன் வீட்டுக்குப் போனபோது அவனுடைய அத்தை வெந்நீர் போட்டு வைத்திருந்தாள். அவள் அவனுக்கு எண்ணெய் தேய்த்து அவனைக் குளிப்பாட்டினாள். அவனுக்குப் புதிய ஆடை யொன்று கொடுத்தாள். அவள் அவன் தலையை நன்றாகச் சீவி, பேன் முதலானவற்றை யெல்லாம் எடுத்தெறிந்தாள்.

சுப்பன் புதிய பையனாகி விட்டான். அவன் தன் ஊருக்குத் திரும்பியபோது, அவனைக் கண்ட அவ்வூரார் யாவரும் வியந்தார்கள். அழுக்குச் சுப்பன் என்ற பெயர் அவனை விட்டோடிற்று; தூய சுப்பன் என்ற பெயர் அவனுக்கு உண்டாயிற்று.

### பயிற்சி:

#### சொற்கள்

| | | |
|---|---|---|
| துலக்கு | அருந்து | சாக்கடை |
| துவைத்து | வெட்கம் | கணம் |
| பேன் | நாற்றம் | வெந்நீர் |
| ஈரும் | நாசி | சீவி |

வரவேற்ருள், சிற்றுண்டி.

ஒரே பொருளில் பல சொற்கள் வழங்குகின்றன.

**சென்ருன் என்ருன்**

இந்த இரண்டு சொற்களின் பொருள்களைக் குறிக்கும் வேறு சொற்கள் யாவை ?

**விஞக்கள்**

(1) சுப்பனுடைய அழுக்கு உடல் எப்படி இருந்தது ?

(2) கோழி, பூனை—இவை தம்மை எப்படிச் சுத்தம் செய்து கொள்கின்றன ?

**இலக்கணம்**

ஒருமைச் சொற்களுக்கு **ஆண்பால், பெண்பால், ஒன்றன்பால்** என்ற மூன்று பால்களைக் கண்டோம்.

பன்மைச் சொற்களுக்கு **ஆண், பெண்** என்று வேற்றுமையில்லை. மக்கள் பன்மைச் சொற்களைப் **பலர் பால்** என்பர்.

மக்கள் அல்லாப் பன்மைச் சொற்களைப் **பலவின் பால்** என்பர்.

தேவர்களையும் மக்களோடு சேர்த்துக் கொள்வது வழக்கம். **சோழன் தஞ்சையில் சிவ பெருமானுக்கும்** அவன் **தேவிக்கும்** ஒரு **கோயில்** கட்டினன், அதைப் பார்க்கப் பல மக்கள் தினந்தோறும் செல்கிருர்கள்.

தடித்த எழுத்திலுள்ள சொற்களுக்கு (1) வகை (2) இடம் (3) பால் இவைகளைக் கூறுக.

**கட்டுரை**

சுப்பன் தன் கதையைத் தானே சொல்வது போல் கூறு.

# 16. குமரி முனை



வடக்கே இமயமும், தெற்கே குமரியும் எல்லையாகக் கொண்டது நமது பாரதநாடு. 'வட வேங்கடம் தென் குமரி' என்று தமிழகத்திற்கு இரண்டு எல்லைகள் கூறுவது வழக்கம். இக் குமரி என்பது இன்று முப் பக்கங்களிலும் நீர் சூழ்ந்த ஒரு முனையாக விளங்குகிறது. இந்தியாவுக்குக் கிழக்கிலும் மேற்கிலும் இரு கடல்களும் தெற்கில் பெரிய சமுத்திரமும் உள்ளனவென்பதை நீ அறிவாய். இரு கடல்களும் குமரி முனையில் சமக்கிரக்கோடு ஒன்று கூடுகின்றன.

குமரி முனைக்கப்பால் இந்தியாவின் நிலப் பகுதியே இல்லை. இத்தகைய இடம் பார்ப்பதற்கு மிக அழகானது. இயற்கைக் காட்சியைக் கண்டு களிக்க, இந்தியர்களும் பிற நாட்டு மக்களும் இங்கு வந்து போய்க் கொண்டே இருக்கிறார்கள்.

குமரி முனை இப்பொழுது திருவாங்கூர் நாட்டைச் சேர்ந்ததாய் இருக்கிறது. திருவாங்கூரின் தலை நகரம் திருவனந்தபுரம் என்பது. இது சென்னையிலிருந்து 512 மைல் தொலைவில் இருக்கிறது. இன்றிரவு சென்னையிலிருந்து புறப்பட்டால் நாளை இரவு அங்கே மெயில் வண்டி போய்ச் சேரும். திருவனந்தபுரத்தில் நாம் பதுமநாபர் ஆலயம், ஓவியக் காட்சிச் சாலை, மீன் காட்சிச் சாலை, விலங்குகள் காட்சிச் சாலை முதலியவற்றைக் காணலாம்.

திருவனந்தபுரத்திலிருந்து பஸ் வழியாகக் குமரிக்குப் போகலாம். போகும் வழியில் நாகர்கோயில், சுசீந்திரம் என்ற இடங்களைக் கடந்து செல்லவேண்டும். நாகர்கோயிலுக்கருகில் புத்தேரி என்ற சிற்றூரில் தமிழ்ப் பெருங் கவிஞர் ஸ்ரீ தேசிக விநாயகம் பிள்ளை அவர்கள் வாழ்ந்தார்கள். அவர்கள் எழுதிய பாடல்கள் சிலவற்றைப் படித்திருக்

கிறீர்கள். சுசீந்திரத்தில் சிற்ப வேலைகள் செறிந்த கோயிலொன்றுண்டு.

குமரி முனை நாகர்கோயிலிலிருந்து பன்னிரண்டு மைல் தூரத்திலிருக்கிறது. அவ்வூர் மிகச் சிறியது. ஆனால் அங்கே தங்குவதற்கு வசதியான இடங்களிருக்கின்றன. முனையில் கன்னிகா பரமேசுவரி அம்மன் கோயில் கொண்டிருக்கிறார். அக்கோயிலை ஒட்டிக் கடல்கள் முப்புறங்களிலும் இருக்கின்றன. அங்கே மக்கள் நின்று பார்க்கவும் கடலில் நீராடவும் இடங்கள் இருக்கின்றன. கடலில் கரைக்கு அருகில் சில கற்பாறைகள் நீர் மட்டத்திற்கு மேலே ஓங்கி நிற்கின்றன.

அங்கே நின்று கொண்டு நாம் நம்மைச் சூழப் பெருங்கடல்கள் பரந்து கிடப்பதைக் காண்கிறோம். இயற்கையின் பெருமைகளெல்லாம் அங்கே விளங்குகின்றன. அவ்வியற்கையை ஆளும் தெய்வமாக அம்பிகை அங்கே கோயில் கொண்டிருக்கிறார்.

அந்த இடத்தில் நின்றுகொண்டு காலையில் கதிரவன் கிளம்புவதையும் மாலையில் மறைவதையும் காணலாம். பௌர்ணமியில் கிழக்கே சந்திரன் தோன்றுவதும் மேற்கே சூரியன் மறைவதும் நோக்கும் போது, நிலமகளுக்கு அவ்விரண்டும் இரண்டு

குண்டலங்களாக விளங்குகின்றனவோ என்று தோன்றும்.

அவ்விடங்களை விட்டு மணற் கரையோடு சென்றால் வித விதமான நிறங்களுள்ள மணல்களை நாம் அங்கே காணலாம். இது வேறெங்கும் காணக் கிடைக்காத காட்சி, மணல்களின் உருவங்களும் அரிசி போலும் பருப்புப் போலும், கடுகு போலும் காணப் படுவது விந்தையினும் விந்தை.

இவ்வாறு எழில் நலம் விளங்கும் இடங்கள் நம் நாட்டில் வேறு பல உண்டு. அவை நமக்குக் கிடைத்துள்ள அழியாச் செல்வங்கள். நம்மால் முடிந்தவரை நாம் அவற்றைக் கண்டு அவற்றின் அழகை உணர முயல வேண்டும்.

**பயிற்சி:**

**சொற்கள்**

| | | |
|---|---|---|
| இமயம் | களிக்க | எழில் |
| குமரி | இயற்கை | பௌர்ணமி |
| வேங்கடம் | முனை | குண்டலங்கள் |

காட்சிச்சாலை, கற்பாறை, நிலமகள், விதவிதமான, எழில் நலம்.

பொருள் வேற்றுமை கூறு:

அழகு, அலகு; நடு, நாடு; பாறை, பாரை; காளை, காலை.

**நிலமகள்** என்பது போல மகள் என்று முடியும் வேறு சொற்கள் கூறு.

## வினுக்கள்

(1) தமிழகத்தின் வடக்குத் தெற்கு எல்லைகள் யாவை?

(2) குமரிமுனை எங்கே இருக்கிறது?

(3) திருவனந்தபுரத்தில் நாம் பார்க்கக் கூடியவை யாவை?

(4) அங்கே நாம் காணக்கூடிய காட்சிகள் யாவை?

(5) அங்கே உள்ள தெய்வத்துக்குப் பெயர் யாது?

## இலக்கணம்

இப்பாடத்தில் வந்துள்ள இடப் பெயர்களைப் பொறுக்கி எழுதுக.

இப்பாடத்திலிருந்து மூன்று காலங்களையும் காட்ட மூன்று வினைச் சொற்களை எடுத்துக் காட்டுக.

## கட்டுரை

உன் ஊரிலிருந்து கன்னியா குமரிக்குப் போகும் வழி யாது? வழியில் நீ காணும் ஊர்களையும் சொல்லு.

# 17. வள்ளல் அதியமான்



தகடூர் என்ற ஊரில் அதியமான் என்ற ஓர் அரசன் இருந்தான். அவன் போரில் வல்லவன். தமிழறிவும், தமிழன்பும் அவனுக்கு மிகவும் உண்டு. பரணர், பெருஞ்சித்திரனார், பொன்முடியார், ஔவையார் என்ற புலவர்கள் இவனுடைய வீரம், கொடை முதலியவற்றைப் பற்றிப் பல பாடல்களைப் பாடியிருக்கிறார்கள். புலவர்களுக்கு வேண்டியமட்டும் இவன் பொருள் கொடுப்பான். தனக்கென்று எதையும் வைத்துக்கொள்ளாமல் பிறருக்குக் கொடுக்கும் இயல்புடையவனே வள்ளல் என்று

அழைப்பது வழக்கம். அத்தகைய வள்ளல் களுள் அதியமானும் ஒருவனாகக் கருதப்பட் டான். அவன் வள்ளன்மையை எடுத்துக் காட்ட அவன் வாழ்க்கையிலிருந்து ஓர் உதாரணம் கூறுவோம்.

ஒரு நாள் அதியமான் தன் அரண் மனையில் அமைச்சர் முதலியோர் சூழப் பேரத் தாணி மண்டபத்தில் வீற்றிருந்தான். அச் சமயம் அங்கே ஒரு முனிவர் எழுந்தருளினார். அரசன் எழுந்து அவரை வணங்கி, அவரைப் பெரிதும் பாராட்டினான். அம் முனிவர் மன்னனை நோக்கி, "வேந்தே! நான் தவஞ் செய்துகொண்டிருக்கும் மலையில் ஒரு கல் வெடிப்பில் ஒரு கருநெல்லி மரம் இருக் கின்றது. அதனில் பன்னிரண்டாண்டுகளுக்கு ஒரு முறை ஒரு பழம் பழுக்கும். அதன் சுவை தேவர் அமுதின் சுவையைப் போன்றது. இன்னும் இதன் பெருமை ஒன்று உண்டு. இக்கனியை உண்பவர் நோய் நொடியின்றி நீண்ட நாள் உயிருடன் வாழ்வர். என் போன்ற முனிவர் இதனைத் தின்றே நீண்ட காலம் உயிரோடிருக்கின்றனர். ஆனால் இது கிடைத்தற்கு அரிது. இன்று எனக்கு இப்பழம் கிடைத்தது. இதனை மன்னனுக்கு அளித்தலே நன்று என்று எண்ணி இதனை எடுத்து வந்தேன். இதனை நீ அருந்தி நீடூழி

வாழ்வாயாக'' என்று பருத்து, உருண்டு, திரண்டு விளங்கிய ஒரு கருநெல்லிக் கனியை அவன் கைகளில் ஈந்தார்.

அதியமான் அதனை மிகுந்த அன்போடு பெற்று முனிவருக்குத் தக்க மரியாதைகளைச் செய்து அனுப்பினுன். அருமையாகக் கிடைத்த அத் தெய்வக்கனியை உண்ண விரும்பி அதன் அழகை நோக்கினுன். அச் சமயம் ஔவையார் என்ற பெரும் புலவர் அங்கே வந்தார். அவரைக் கண்டவுடன் அரசன் பெருமகிழ்ச்சி யடைந்து அவரை வணங்கி வரவேற்று, அவரைத் தன்னேடு அரியாசனத்தில் அமர்த்திக்கொண்டான்.

நெடுநாள் தன் அருமைப் புதல்வனை விட்டுப் பிரிந்திருந்த ஒரு தாய் அவனைத் திடீரென்று கண்டதுபோல், ஔவையார் கண்களில் நீர் மல்க அவனை நோக்கினுர். அரசன் அவருடைய வயது முதிர்ந்த யாக்கையைத் தடவிக் கொடுத்து, பிரிந்து காற்றில் அலைந்து கொண்டிருந்த நரைக் கூந்தலை ஒரு குழவி தன் அருமைத் தாயை நோக்குவதுபோல் நோக்கினுன்.

பின்பு அரசன் அம்மையை நோக்கி, ''அம்மையே! தாங்கள் நல்ல சமயத்தில் வந்தீர்கள். சற்று முன்புதான் எனக்கு இனிய

ஒரு தின்பண்டம் கிடைத்தது. அதைப் பெற்றபோதே எனக்குத் தங்கள் நினைவு உண்டாயிற்று. இதோ இருக்கிறது பாருங் கள். இந்த நெல்லிக்கனியை அருந்துங்கள்'' என்று முனிவர் கொடுத்த பழத்தை அப் புலவரிடம் கொடுத்தான். அவரும் அதனை அன்புடன் ஏற்று உண்டார்.

அவர், ''என் அருமை மன்ன! இவ்வளவு அருமையான கனி உனக்கு எங்கிருந்து கிடைத்தது? இஃது இவ்வுலகப் பொரு ளாகவே எனக்குத் தோன்றவில்லையே! தெய்வ உலகத்துப் பொருளாகவே தோன்று கிறது'' என்றார்.

அச் சொற்களைக் கேட்டு மன்னன் ''சற்று முன் ஒரு முனிவர் இதனை எனக்கு ஈந்தார்; இது மிகவும் அருமையான கனி யாம். இதனை உண்பவர் நீண்டகாலம் உயிரோடிருப்பாராம்'' என்றான்.

பிறகு அவ்விருவரிடையே பின்வருமாறு பேச்சு நடந்தது.

**ஔவையார்:** ''அப்படியாயின், நீ உண்ணாமல் எனக்கு ஏன் இதனைக் கொடுத்தாய்?''

**அதியமான்:** ''நான் நீண்ட நாள் இருப்பதால்

**ஔவையார்:** "நான் ஒன்றுக்கும் உதவாத ஏழைக் கிழவி, நீயோ மன்னர் பெருமான்; நீ வாழ்ந்தால் உலகம் வாழும்; என்னால் என்ன பயன் ?"

**அதியமான்:** "நன்கு சொன்னீர்' நான் இறந்தபின் என் இடத்தை நிரப்ப என்னிலும் சிறந்த வீரனான என் மகன் இருக்கிறான். உலகில் என்னைப் போன்ற மன்னர்கள் அளவில்லாமல் இருக்கிறார்கள். உங்களைப் போன்ற புலவர் வேறெவர் உண்டு? உங்கள் இடத்தை வேறு யாரால் நிரப்ப இயலும்? நீங்களே உலகில் நீண்டு வாழ வேண்டும். ஆகவே அக்கனியை நீங்கள் உண்பதே நல்லதாகும்."

**ஔவையார்:** "ஆ! அதியமானே! உன் வள்ளன்மையை நான் என்னவென்று கூறுவேன்! உன்னைப்போல் கொடையாளி வேறு யார் உண்டு? நீ சிவபிரான் போல் என்றும் வாழ்வாயாக."

இவ்வாறு அவர்கள் பேசிக்கொண்டு நீண்ட நேரம் கழித்தனர். அதியமான் ஔவையாரைப் பல நாள் தன் அரண்மனை

## பயிற்சி:

### சொற்கள்

| | | |
|---|---|---|
| போர் | வள்ளல் | முனிவர் |
| அமுது | முதிர்ந்த | வீரம் |
| வள்ளன்மை | பாராட்டினன் | யாக்கை |
| கொடை | வாழ்க்கை | வேந்தே |
| நீடூழி | ஈந்தார் | புலவர் |
| உதாரணம் | தவம் | இயல்பு |
| வீற்றிருந்தான் | வெடிப்பு | மல்க |

### வினாக்கள்

(1) வள்ளல் என்பவர் யார் ?

(2) அதியமான் வாழ்ந்த இடம் யாது ?

(3) அவனுடைய குணங்கள் யாவை ?

(4) முனிவர்க்குக் கிடைத்த நெல்லிக் கனி எப்படி இருந்தது ?

(5) அதியமான் ஏன் அதனை ஔவைக்குக் கொடுத்தான் ?

(6) ஔவையார் நீண்டு வாழ்வதால் உலகுக்கு நன்மை என்ன ?

(7) அதியமானை வள்ளல் என்பது பொருந்துமா ?

## இலக்கணம்

இந்தப் பாடத்தில் வந்துள்ள சில வினைச் சொற்களைக் கீழே தருகிறோம்.

கொடுக்கும், கூறுவோம், பருத்து, உருண்டு, திரண்டு, விளங்கிற்று.

இவற்றுள் சில சொற்களின் பொருள் முடிந்திருக்கிறது. அவை யாவை ?

சில சொற்கள் பொருள் முடியாமல், வேறு சொற்களைத் தழுவுகின்றன. அவை யாவை ?

முடிந்த வினைகளை **முற்றுவினை** என்போம்.

முடியாத வினைகளை **எச்சவினை** என்போம்.

## கட்டுரை

பாடத்தில் வந்துள்ள நெல்லிக் கனியின் வரலாற்றைத் தொகுத்துக் கூறு.

# 18. குறத்தியின் வருகை



தண்டமிழ் ஞானம்
  தழைத்தபொற் குறத்தி
பதத்தினில் தண்டை
  பரிபுரம் சதங்கை
புதுமணிப் பாடகம்
  பொன்முஞ்சி அணிந்து
இடைக்குஇடை முத்தும்
  இசைந்தசெம் பவளமும்
தொடுத்த தாழ்வடம்
  தோள்மாலை புனைந்து
அரதனம் இட்டிழைத்து
  அமைத்த வலியும்
புற்றர வின்மணிப்
  பூணணி அழகும்
இழை ஆயிரம்பொன்
  இசைந்தபொன் கலையும்
குழையினில் தந்த
  கொந்தள ஓலையும்
தின்ற பாக்கும்
  சேல்வரு விழியும்
நின்ற நிலையும்
  நீறணி நெற்றியும்
அக்கு மணியும்
  அம்புய மணியும்
வக்கா மணியும்
  மாமயிற் பீலியும்

புலிநகக் கோவையும்
பூனைக் காய்ச்சியும்
பலமணிச் சங்கா
பரணமும் அணிந்து
கமகமென வெறிபுனுகு
கலகலென வரிவளைகள்
குமுகுமென மலரணியில்
குயில்களென இசைமிடறு
நடைக்குவமை அன்னம், இள
நகைக்குவமை முல்லை, நடு
இடைக்குவமை மின்னல், இனி
எனக்குவமை இல்லையென
மாத்திரைக் கோலும்,
மலர்க்கையில் வற்றுப்
பாத்திர மான
பருங்குறக் கூடையும்
வள்ளிதெய் வானை
மலர்ப்பதம் வணங்கித்
துள்ளுமா மயிலோன்
துணைப்பதம் போற்றிக்
கொஞ்சுகிளி யஞ்சுமொழி
பஞ்சசரன் நெஞ்சும்அயன்
மிஞ்சியுமி தஞ்சொல்குற
வஞ்சியிதோ வந்தனளே.

—கும்பேசர் குறவஞ்சி ஸ்ரீ பாபநாச முதலியார்

## பயிற்சி:

### சொற்கள்

| | | |
|---|---|---|
| ஞானம் | முத்து | சேல் |
| தழைத்த | பவளம் | நீறு |
| பதம் | தாழ்வடம் | அக்குமணி |
| தண்டை | தோள்மாலை | அம்புயம் |
| பரிபுரம் | புனைந்து | வக்கா |
| சதங்கை | அரதனம் | கோவை |
| பாடகம் | கலை | பூனைக்காய்ச்சி |
| தண்டமிழ் | தழைத்த | மாத்திரைக்கோல் |
| ஞானம் | புற்றரவு | மலர்ப்பதம் |

கொந்தள ஓலை சங்காபரணம் துணைப்பதம்

பாதத்தில் அணியும் அணிகள்:

தண்டை, பரிபுரம், சதங்கை, பாடகம், மிஞ்சி.

கழுத்தில் அணிவது—தாழ்வடம்.

தோளில் அணிவது—தோள் மாலை, வலி.

இடையில்—பொன்—கலை—பீதாம்பரம்

காதில்—ஓலை.

சேல்வருவிழி = மீன் போன்ற கண்

நீறு = திருநீறு

அக்குமணி-உருத்திராக்கம்

அம்புயமணி—தாமரை மணி

வக்கா = ஒரு பறவை

பீலி = தோகை

மிடறு = கழுத்து

மாமயிலோன் = முருகன்

துணைப்பாதம் = இரு பாதங்கள்

பஞ்சசரன் = மன்மதன்

இந்தப் பாடல் இதன் ஓசை அழகுக்காகவே வந்துள்ளது. இதைப் பாடிக்கொண்டே குறத்தி ஆடுவது போல் ஆடுவது மகிழ்ச்சியைத் தரும். சொற்களின் ஓசை அழகைக் கவனிக்க.

---

# 19. அசோகர்

இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னே வட இந்தியாவிலே பாடலிபுரம் என்ற நகரிலே அசோகர் என்ற பெயருள்ள மன்னரொருவர் இருந்தார். அவர் ஆற்றல் மிகவும் வாய்ந்தவர். அவர் இந்தியா முழுமையும் வென்று அதன் பிறகு அயல் நாடுகளையும் வெல்ல வேண்மென்று விரும்பியிருந்தார்.

ஒரு முறை அவர் கலிங்க நாட்டின்மீது படையெடுத்தார். அந்நாட்டரசன் அவரை எதிர்த்து நின்றான். போர் மிகக் கடுமையாக நடந்தது. இரு பக்கங்களிலும் மாண்டவர் பல நூறாயிரவர்; காயம் பட்டவர்கள் பல ஆயிரவர்; குருதி ஆறாக ஓடிற்று. அவ் வாற்றில் பிணங்கள் ஓட இடமில்லாமல் மிதந்தன. காலிழந்த யானைகளும் தலை யிழந்த குதிரைகளும் குன்றுபோல் குவிந்து கிடந்தன.

அசோகர் போர்க்களத்தைத் தம் கண் களாற் கண்டார். இறந்தவர்களின் பிணங் களைக் கண்டார். கையிழந்தவரும் காலிழந்த வரும் துடிதுடித்துப் பதைபதைக்கும் கோரக் காட்சியைக் கண்டார். அவர்களுடைய இழப்பால் எத்தனை குடும்பங்கள் தவிக்-

கின்றனவோ என்று அவர் எண்ணினுர். அவர் கண்களினின்று நீர்த்துளிகள் ததும்பி முகத்தில் வழிந்தன. தாம் ஒருவர் கொண்ட நிலவாசையன்றே இவ்வளவு கொடுமைகளுக்குக் காரணம் என்றெண்ணி ஏங்கினுர். "இனி ஒருபோதும் நான் சண்டை செய்யேன்" என்று அங்கிருந்தபடி சபதம் செய்தார். அவர் அக் கணமே போரை நிறுத்தி இறந்து போனவர்கள் இல்லங்களுக்கெல்லாம் ஆறுதல் சொல்லியனுப்பினுர். காயம் பட்டவர்களுக்கெல்லாம் மருத்துவம் செய்யக் கட்டளையிட்டார். இவ்வாறு செய்துவிட்டு அவர் தம் படை வீரர்களுடன் பாடலிபுரம் திரும்பினுர்.

அசோகர் காலத்துக்குச் சில நூற்றுண்டுகள் முன்புதான் புத்த பகவான் உலகில் அவதரித்து அன்பு, உண்மை, தீங்கிழையாமை முதலிய அறங்களைப் பற்றிப் போதித்துச் சென்றிருந்தார். அவர் வழிகளைப் பற்றின துறவிகள் மக்களுக்கு அறங்களைப் புகட்டிக் கொண்டு நாடெங்கும் சென்று கொண்டிருந்தனர். அசோகர் அவர்களை அழைத்து அவர்கள் கூறும் அறவுரைகளைக் கேட்டார். அவர் மனம் முற்றிலும் அன்புடைமை என்ற அறத்திலே நிலை நின்றது.

அக் கருத்தை அவர் நாடெங்கும் பரப்ப வழிகளை நாடினர். நாட்டில் கொடுமை, துன்பம், பசி, பிணி, பொய், களவு இவை அறவே நீங்கவேண்டும் என்று அவர் கட்டளையிட்டார். விலங்குகளை வேட்டை யாடுதல் தீது என்று அவர் அதனை நிறுத்தினர். நாடெங்கும் பெரிய கல் தூண்களை எழுப்பி அவற்றில் அறவுரைகளை எழுதி மக்கள் அவற்றை அறிந்து நடக்க வேண்டுமென்று கூறினர். அவர் காலத்தில் நாடு முழுவதும் அமைதியுடனும் மகிழ்ச்சியுடனும் இருந்தது.



இன்றும் அசோகரை நாம் கொண்டாடுகிறோம். அவர் சென்ற வழியே நாமும் செல்ல வேண்டுமென்று நம் அரசியலார் விரும்புகின்றனர். அசோகர் வழங்கி வந்த அறவாழிக் கொடியையே இன்று இந்தியக் கொடியாக நாம் கொண்டுள்ளோம். அக்கொடி நீடுழி

## பயிற்சி:

### சொற்கள்

| | | | |
|---|---|---|---|
| ஆற்றல் | கோர | சபதம் | கட்டளை |
| கடுமை | குடும்பம் | அக்கணம் | படைவீரர் |
| நூறுயிரம் | ததும்பி | இல்லம் | அவதரித்து |
| துறவி | அமைதி | அறம் | உண்மை |
| அன்பு | அறவாழி | அறவுரை | வேட்டை |

கோரக்காட்சி — நூற்றுண்டு

அறவுரை — அறவாழி

### வினுக்கள்

(1) கலிங்கப் போரில் அசோகர் கண்ட துன்பக் காட்சிகள் யாவை ?

(2) புத்த பகவான் போதித்த அறங்கள் யாவை ?

(3) நாட்டை நலியச் செய்யும் தீமைகள் யாவை

(4) கல் தூண்களில் எழுதுவதால் நன்மை என்ன ?

(5) அசோக சக்கரத்தின் படம் ஒன்று எழுது.

### கட்டுரை

1. காந்திமகான் அசோகர் சென்ற வழியே செல்ல விரும்பினுர்; இது உண்மையா ? 4, 5 வாக்கியங்களில் சொல்லு.

2. போரினுல் விளையும் தீமைகள் யாவை ? 4, 5

## இலக்கணம்

அசோகர் தம் மக்களைப் பார்த்து, "நீங்கள் நல் வாழ்வுடன் வாழ்வதையே நான் விரும்புகிறேன். நீங்கள் பிராணிகளிடம் அன்பு காட்டுங்கள்" என்றார்.

(1) இந்த வாக்கியத்தில் இடப்பட்ட புள்ளிகள் யாவை? அவை எங்கெங்கு இடப்பட்டுள்ளன.

(2) அசோகர், நீங்கள், நான், பிராணிகள், அன்பு.—இப்பெயர்ச் சொற்களுக்கு வகை, எண், பால், இடம் இவை கூறு.

(3) பார்த்து, காட்டுங்கள், என்றார்.

இவ்வினைச் சொற்களுள் முற்று எவை? எச்சம் எது? இவை ஒவ்வொன்றிற்கும் காலம் கூறுக.

# 20. தாயின் மணிக்கொடி



தாயின் மணிக்கொடி பாரீர்—அதைத்
    தாழ்ந்து பணிந்து புகழ்ந்திட வாரீர். (தாயின்)
ஓங்கி வளர்ந்ததோர் கம்பம்—அதன்
    உச்சியில் முந்நிறக் கொடியினில் சக்கரம்
பாங்கின் எழுதித் திகழும்—செய்ப்
    பட்டொளி வீசிப் பறந்தது பாரீர் (தாயின்)
கம்பத்தின் கிழ் நிற்றல் காணீர்—எங்கும்
    காணரும் வீரர் பெருந்திருக் கூட்டம்
நம்பற் குரியர் அவ்வீரர்—தங்கள்
    நல்லுயிர் ஈந்தும் கொடியினைக் காப்பர் (தாயின்)
சேர்ந்ததைக் காப்பது காணீர்—அவர்
    சிந்தையின் வீரம் நிரந்தரம் வாழ்க !
தேர்ந்தவர் போற்றும் பரத—நிலத்
    தேவி துவஜம் சிறப்புற வாழ்க ! (தாயின்)

—சுப்பிரமணிய பாரதியார்.

## பயிற்சி:

### சொற்கள்

| | | |
|---|---|---|
| கம்பம் | திகழும் | சிந்தை |
| பரதநிலத்தேவி | உச்சி | நல்லுயிர் |
| வீரம் | துவஜம் | முந்நிறம் |
| ஈ | நிரந்தரம் | சிறப்புற |

### கட்டுரை

1. இந்தியக் கொடியின் தோற்றத்தைப் பற்றிச் சில வாக்கியங்கள் எழுதுக.

2. நீ பார்த்த ஏதேனும் ஒரு கொடியேற்று விழாவைக் குறித்து உன் நண்பனுக்கு ஒரு கடிதம் எழுதுக.

# செய்யுட் பகுதி

## 1. தாய் தந்தையரை வணங்குதல்

உற்றவரே ! என்னைப் பெற்றவரே ! தினம்
உமக்கே நமஸ்காரம்
முற்றுமே நீர் செய்த உதவிக்கு நான்என்ன
மொழிவேன் உபசாரம் ! 1

எனக்கொரு சுகம்வரின் உமக்கு வந்தது போல
எக்களிப் படைந்தீரே !
எனக்கொரு துயர் வரில் உமக்கு வந்ததுபோல
ஏங்கி உள்ளுடைந்தீரே ! 2

பாலும் சோறும் பக்ஷணங்களும் எனக்கிட்டுப்
பழஞ்சோ றுண்டீரே !
காலமெல்லாம் நல்ல சோமன்நா னுடுக்கநீர்
கந்தையைக் கொண்டீரே ! 3

மண்பிள்ளை யாயினும் தன்பிள்ளை யென்றெனை
மகிழ்ந்தா தரித்தீரே !
பண்புடன் என் பொருட்டாக நீர் பலரையும்
பணிந்துப சரித்தீரே ! 4

தெரியாமல் நான்செய்த பிழைபொறுத்தென்னிடம்
திருவருள் பதிப்பீரே !
அரும்வேத நாயகன் அருள் செய்யும்படி என்னை
ஆசீர் வதிப்பீரே ! 5

## குறிப்புரை

எக்களிப்பு-மிகுந்த மகிழ்ச்சி. துயர்-துன்பம். உள் உடைந்திரே-மனம் உடைந்திரே. சோமன்-ஆடை.

## வினாக்கள்

(1) பெற்றோர் எக்களிப்பது எப்போது?

(2) அவர்கள் உள் உடைவது எப்போது?

(3) அவர்கள் எத்தகைய உணவு குழந்தைகளுக்குக் கொடுத்துத் தாம் எத்தகைய உணவு அருந்துவர்?

(4) பெற்றோர்கள் தம் வறுமையைத் தாம் அனுபவித்துப் பிள்ளைகளுக்கு அதைக் காட்டார்-எப்படி?

(5) காகத்திற்குத் தன் குஞ்சு பொன் குஞ்சு இக் கருத்து எங்கே வைக்கப் பட்டிருக்கிறது?

(6) என் பொருட்டாகப் பலரையும் உபசரித்தீர்-உதாரணம் கூறு.

(7) வேண்டுவது என்ன?

(8) ஆசிரியர் பெயர் எவ்வாறு இங்கு வைக்கப் பட்டிருக்கிறது?

## 2. விவேக சிந்தாமணி

கற்பகத் தருவைச் சார்ந்த
காகமும் அமுதம் உண்ணும் ;
விற்பன விவேகம் உள்ள
வேந்தரைச் சேர்ந்தோர் வாழ்வார்,
இப்புவி தன்னில் என்றும்
இலவுகாத் திடும்கிள்ளை போல்
அற்பரைச் சேர்ந்தோர் வாழ்தல்
அரிதரி தாகும் அம்மா ! 1

வாழ்வது வந்த போது
மனந்தன்னில் மகிழ வேண்டா ;
தாழ்வது வந்த தானால்
தளர்வரோ தக்கோர் ? மிக்க
ஊழ்வினை வந்த தானால்
ஒருவரால் விலக்கப் போமோ ?
ஏழையா யிருந்தோர் பல்லக்கு
ஏறுதல் கண்டி லீரோ ? 2

கலைஎலாம் உணர்ந்தா ரேனும்
கரிசறத் தெளிந்தா ரேனும்
மலைஎன உயர்ந்தா ரேனும்
மனமயல் அகன்றா ரேனும்
உலகெலாம் புகழப் பல்லோர்க்கு
உதவிய கைய ரேனும்
இலகிய இரக்கம் இன்றேல்

## குறிப்புரை

*(1)* தரு-மரம். விற்பன-விவேகம் - கல்வியறிவு. புவி - பூமி. இலவு காத்திடும் கிள்ளை ஏமாந்துபோம்.

*(2)* தக்கோர்-குண நலன்களால் தகுதியுடையோர் ஊழ்வினை - விதி.

*(3)* கரிசு - குற்றம். மயல் - மயக்கம்.

## வினாக்கள்

*(1)* விவேக முள்ளவரைச் சேர்ந்தவர் வாழ்வுக்கும் அற்பரைச் சேர்ந்தவர் வாழ்வுக்கும் உவமைகள் யாவை?

*(2)* ஏழையாயிருந்தோர் பல்லக்கேறுவர்; அதைப் போல, வாக்கியத்தை முடிக்க.

*(3)* இரக்கமில்லாவிட்டால் என்ன நிகழும்?

ஔவையார் அருளிச் செய்த

# மூதுரை

வாக்குண்டாம் நல்ல மணமுண்டாம் மாமலராள்
நோக்குண்டாம் மேனி நுடங்காது—பூக்கொண்டு
துப்பார் திருமேனி தும்பிக்கை யான்பாதம்
தப்பாமற் சார்வார் தமக்கு. 1

நன்றி யொருவருக்குச் செய்தக்கால் அந்நன்றி
என்று தருங்கொல் எனவேண்டா—நின்று
தளரா வளர்தெங்கு தாளுண்ட நீரைத்
தலையாலே தான்றருத லால். 2

நல்லார் ஒருவருக்குச் செய்த உபகாரம்
கல்மேல் எழுத்துப்போற் காணுமே—அல்லாத
ஈரமிலா நெஞ்சத்தார்க் கீந்த வுபகாரம்
நீர்மே லெழுத்துக்கு நேர். 3

அட்டாலும் பால்சுவையிற் குன்றாது ; அளவல்ல
சுட்டாலும் நண்பல்லார் நண்பல்லர் ;
கெட்டாலும் மேன்மக்கள் மேன்மக்களே ! சங்கு
சுட்டாலும் வெண்மை தரும். 4

அடுத்து முயன்றாலும் ஆகுநா ளன்றி
எடுத்த கருமங்க ளாகா—தொடுத்த
உருவத்தால் நீண்ட உயர்மரங்க ளெல்லாம்
பருவத்தா லன்றிப் பழா. 5

உற்ற விடத்தில் உயிர்வழங்குந் தன்மையோர்
பற்றலரைக் கண்டால் பணிவரோ ?—கற்றூண்
பிளந்திறுவ தல்லாமல் நெடும்பாரந் தாங்கின்
தளர்ந்து வளையுமோ தான் ? 6

நீரளவே யாகுமாம் நீராம்பல்; தான்கற்ற
நூலளவே யாகுமாம் நுண்ணறிவு;—மேலைத்
தவத்தளவே யாகுமாம் தான்பெற்ற செல்வம்
குலத்தளவே யாகுங் குணம். 7

நல்லாரைக் காண்பதுவும் நன்றே; நலமிக்க
நல்லார் சொற் கேட்பதுவும் நன்றே;—நல்லார்
குணங்க ளுரைப்பதுவும் நன்றே; அவரோடு
இணங்கி யிருப்பதுவும் நன்று. 8

தீயாரைக் காண்பதுவுந் தீதே; திருவற்ற
தீயார் சொற் கேட்பதுவுந் தீதே;—தீயார்
குணங்களுரைப்பதுவுந் தீதே; அவரோடு
இணங்கி யிருப்பதுவுந் தீது. 9

நெல்லுக் கிறைத்த நீர் வாய்க்கால் வழியோடிப்
புல்லுக்கு மாங்கே பொசியுமாம்—தொல்லுலகில்
நல்லா ரொருவ ருளரேல் அவர் பொருட்டு
எல்லார்க்கும் பெய்யும் மழை. 10

பண்டு முளைப்ப தரிசியே யானாலும்
விண்டுமி போனாலும் முளையாதாம்;—கொண்டபேர்
ஆற்றலுடையார்க்கும் ஆகா தளவின்றி
ஏற்ற கருமம் செயல். 11

மடல் பெரிது தாழை மகிழினிது கந்தம்
உடல் சிறிய ரென்றிருக்க வேண்டா;—கடல்பெரிது
மண்ணீரும் ஆகாது; அதனருகே சிற்றூறல்
உண்ணீரும் ஆகி விடும். 12

கவையாகிக் கொம்பாகிக் காட்ட கத்தே நிற்கும்
அவையல்ல நல்ல மரங்கள்—சபை நடுவே
நீட்டோலை வாசியா நின்றான் குறிப்பறிய
மாட்டா தவன் நன் மரம். 13

கான மயிலாடக் கண்டிருந்த வான்கோழி
தானும் அதுவாகப் பாவித்துத்—தானுந்தன்
பொல்லாச் சிறகை விரித் தாடினாற் போலுமே
கல்லா தான் கற்ற கவி. 14

வேங்கை வரிப்புலி நோய் தீர்த்த விடகாரி
ஆங்கதனுக்கு ஆகார மானாற் போல்—பாங்கறியாப்
புல்லறி வாளர்க்குச் செய்த உபகாரம்
கல்லின் மேலிட்ட கலம். 15

அடக்க முடையார் அறிவிலரென் றெண்ணிக்
கடக்கக் கருதவும் வேண்டா—மடைத் தலையில்
ஓடுமீ னோட உறுமீன் வருமளவும்
வாடி யிருக்குமாங் கொக்கு. 16

அற்ற குளத்தின் அறு நீர்ப் பறவை போல்
உற்றுழித் தீர்வார் உறவல்லர்—அக்குளத்தில்
கொட்டியும் ஆம்பலும் நெய்தலும் போலவே
ஒட்டி உறுவா ருறவு. 17

சீரியர் கெட்டாலுஞ் சீரியரே சீரியர்மற்
றல்லா தார் கெட்டாலங் கென்னாகும்—சீரிய
பொன்னின் குடமுடைந்தால் பொன்னாகும் என்னாகும்
மண்ணின் குடமுடைந்தக் கால். 18

ஆழ அமுக்கி முகக்கினும் ஆழ்கடல் நீர்
நாழி முகவாது நானாழி—தோழி!
நிதியுங் கணவறு நேர்படினும் தத்தம்
விதியின் பயனே பயன். 19

உடன் பிறந்தார் சுற்றத்தாரென் றிருக்க வேண்டா;
உடன் பிறந்தே கொல்லும் வியாதி;—உடன் பிறவா
மாமலையி லுள்ள மருந்தே பிணிதீர்க்கும்;
அம்மருந்து போல் வாரு முண்டு. 20

கற் பிளவோடு ஒப்பர் கயவர்; கடுஞ்சினத்துப்
பொற் பிளவோடு ஒப்பாரும் போல்வாரே;—
விற்பிடித்து
நீர் கிழிய எய்த வடுப்போல் மாறுமே
சீரொழுகு சான்றோர் சினம். 21

நற்ரு மரைக்கயத்தில் நல்லன்னம் சேர்ந்தாற்போற்
கற்ருரைக் கற்ருரே காமுறுவர்;—கற்பிலா
மூர்க்கரை மூர்க்கர் முகப்பர்,—முதுகாட்டில்
காக்கை உகக்கும் பிணம். 22

நஞ்சுடைமை தானறிந்து நாகம் கரந்துறையும்
அஞ்சாப் புறங்கிடக்கும் நீர்ப்பாம்பு;—நெஞ்சில்
கரவுடையார் தம்மைக் கரப்பர்; கரவார்
கரவிலா நெஞ்சத் தவர். 23

மன்னனும் மாசறக் கற்ரேனுஞ் சீர் தூக்கின்
மன்னனிற் கற்ரேன் சிறப்புடையன்—மன்னனுக்குத்
தன்றேச மல்லாற் சிறப்பில்லை கற்ரேர்க்குச்
[illegible] 24

கல்லாத மாந்தர்க்குக் கற்றுணர்ந்தார் சொற்கூற்றம்
அல்லாத மாந்தர்க்கு அறம் கூற்றம்;—மெல்லிய
வாழைக்குத் தானீன்ற காய்கூற்றம்; கூற்றமே
இல்லிற் கிசைந் தொழுகாப் பெண். 25

## குறிப்புரை

1. மாமலராள் - இலக்குமி. நுடங்காது - வாடாது. துப்பு - வலிமை. தும்பிக்கையான் - விநாயகர். சார்வார் - அடைவார். இது விநாயக வணக்கப் பாடல்.
2. நன்றி - உபகாரம். தளரா - தளர்ச்சியடையாமல். தாள் - தன் அடியால்.
3. ஈரம் - இரக்கம். ஈந்த - செய்த.
4. அட்டாலும் - காய்ச்சினாலும். நட்டாலும் - நட்புச் செய்தாலும்.
5. பருவத்தால் - காலத்தால்.
6. உற்றவிடத்தில் - ஆபத்து வந்தபோது. பற்றலர் - பகைவர். இறுவது - ஒடிவது.
8. இணங்கி - சேர்ந்து.
10. தொல்லுலகில் - பழமையான உலகத்தில்.
11. பண்டு - முதலில்.
12. மண்ணீர் - கழுவும்நீர்.
14. பொல்லா - அழகில்லாத.
18. சீரியர் - சிறந்தோர்.
19. நிதி - செல்வம்.
22. கயத்தில் - குளத்தில்.
23. கரந்து உறையும் - ஒளிந்து தங்கும்.
24. மாசுஅற்ற - குற்றமில்லாத.
25. கூற்றம் - யமன்.

## வினாக்கள்

(1) கடவுளை வணங்குவார்க்கு உண்டாகும் நன்மைகள் யாவை ?

(2) தென்னையால் நாம் அறிவது என்ன ?

(3) சங்கு சுட்டாலும் வெண்மை தரும். இது எதற்கு உவமை ?

(4) தீயாரோடு நாம் பழகலாகாது. இது எப்படிச் சொல்லப் பட்டிருக்கிறது ?

(5) நல்லவரால் தீயவரும் நன்மை பெறுவர்; இதற்கு உவமை யாது ?

(6) உடலின் சிறுமை கண்டு ஏமாறலாகாது. என் ?

(7) நன் மரம் எது ?

(8) புலி, கொக்கு, நீர்ப்பறவை - இவற்றின் தன்மைகளாகப் பாடல்களில் என்ன சொல்லப்பட்டுள்ளன ?

(9) அம்மருந்து போல் வாருமுண்டு. — இதன் பொருளை விளக்கிக் கூறு ?

(10) கற்றாரைக் கற்றாரே காமுறுவர். இதற்கு எதிரிடை யாது ?

(11) நாகம், நீர்ப்பாம்பு - இவற்றின் இயல்புகள் யாவை ?

(12) மன்னனைவிடக் கற்றோன் சிறப்புடையன் என்பது எப்படி ?

# கமலவாசகம்

## ஐந்தாம் புத்தகம்



ஆசிரியர்

**வித்துவான் ரா. விசுவநாதன்** எம்.ஏ., பி.ஓ.எல்.,
(முன்பு) சென்னை, பிரஸிடென்ஸி காலேஜ் தமிழ்ப் பேராசிரியர்

&

**பண்டிதர் செ. முத்துரத்ன முதலியார்,**
(முன்பு) திருவாரூர், அரசியல் உயர்தரக் கலாசாலைத்
தலைமைத் தமிழ்ப் பண்டிதர்.

**விவேகானந்தா பதிப்பகம்**

விஜயபுரம் :: திருவாரூர் ஜங்.

# முகவுரை



கமல வாசக வரிசையில் ஐந்தாவதாகிய இப்புத்தகம் அவ் வரிசையின் சிகரமாகும். உடல் வளர்ச்சியிலும் உள்ள வளர்ச்சி யிலும் ஐந்தாவது வகுப்பு மாணவர்கள் ஒரு பருவ எல்லையைக் கடந்து அடுத்த பருவத்தை எட்ட வல்லவர்களாக ஆகின்றனர். அந்நிலைக்கேற்ப, அவர்களுக்கென எழுதப்பெறும் நூலும் அமை தல் வேண்டும்.

தாமாகவே எளிய இனிய தாய்மொழிப் பாடங்களை மௌன மாக - சிறிதளவேனும் உதடுகளை அசைக்காமல் - படிக்கவும், படிப்பதில் சுவை கொள்ளவும் கூடிய ஒரு நிலையை அவர்கள் இங்கு எய்துகின்றனர். ஆகவே இலக்கியச் செறிவும், உலக அறிவும் பொருந்திய பாடங்களை அவர்கள் படிக்கக் கூடியவர்களா கின்றனர். முன் நான்கு ஆண்டுகளுள் அவர்கள் கையாளத் தெரிந்து கொண்டுள்ள தாய்மொழிச் சொற்கள் ஏறக்குறைய 1900; பாடத் திட்டத்தின்படி அவர்கள் இவ்வாண்டு அறிய வேண்டியவை 800. ஆகவே இப்பருவத்தில் அவர்களின் கைக்கு வரும் தமிழ்ச் சொற்களின் தொகை 2,700.

இலக்கண அறிவிலும் அடிப்படையான பெயர், வினை இவற் றின் தன்மைகள், பாகுபாடுகள், வாக்கிய அமைதிகள், சொல் ஆக்கங்கள், வழக்கச் சொற்கள் இவற்றிலும் அவர்கள் ஒரு நிலையை அடைந்தவர்களாக வேண்டும். தாமாகத் தம் மனோபாவத்தைத் தூண்டி அக உலகத்தையும் புற உலகத்தையும் காணவும், அப்படிக் கண்டவற்றைக் கட்டுரையாக எழுதவும், சமூகக் கடிதங்கள் காரியக் கடிதங்கள் இவற்றின் தன்மைகளை அறியவும், பாரா, புள்ளிகள், குறிகள் முதலிய எழுத்து உதவிகளைக் கையாளவும் அவர்கள் தேர்ச்சி பெற்றிருத்தல் வேண்டும்.

இவையே பாடத்திட்டத்தின் குறிக்கோள்கள். இவற்றை உட்கொண்டு இக் குறிக்கோள்கள் நன்கு நிறைவேற வேண்டு மென்ற நோக்குடன் இப்புத்தகம் எழுதப்பெற்றுள்ளது.

இறைவனருள் இதனையும் இதன் முன்னுள்ள நான்கினையும் தமிழகம் நன்கு பயன்படுத்திக்கொள்ள உதவுவதாக.

பிரசுரகர்த்தர்கள்.

# பொருளடக்கம்



## செய்யுட் பகுதி

# 1. தஞ்சைப் பெருங்கோயில்

ஒரு நாட்டின் சிறப்பை அந்நாட்டு மக்களின் கலையறிவைக் கொண்டு காணலாம் என்பர். தமிழகம் பண்டைக்காலம் முதற் கொண்டு இலக்கியம், இசை, நாடகம், சிற்பம், ஓவியம் முதலிய பல கலைகளில்



தஞ்சைப் பெருங் கோயில்

ஓங்கி வளர்ந்து வந்திருக்கிறது என்னும் உண்மையை நாம் நம் பழைய நூல்களிலிருந்தும் கட்டடங்களி னின்றும் அறிகிறோம்.

திராவிடர் சிற்பத்துக்குச் சிகரமாக விளங்குவது தஞ்சையிலுள்ள பெருங் கோயிலே யாகும். நாடு இணையற்ற செல்வத்தில் திளைத்து வந்தது என்பதை யும், மக்கள் கடவுள் பக்தியிலும் கலையறிவிலும் மிக ஓங்கிய நிலையை எய்தி யிருந்தனர் என்பதையும் காட்டச் சிறந்த அறிகுறியாக அக்கோயில் இன்றும் விளங்கி வருகிறது. ஏறக்குறைய ஆயிரம் ஆண்டுகட்கு முன்னே சோழ மன்னர்கள் தஞ்சையிலிருந்து கொண்டு தமிழகத்தை ஆண்டுவந்தார்கள். அவர்களுள் இராசராசன் என்பவனே மிகச் சிறந்தவன். அவன் தமிழகம் முழுமையும் தன்னடிப்படுத்தியதோடு ஈழம், கடாரம் முதலிய வெளிநாடுகளையும் வென்று தன் வெற்றிக் கொடியை நாட்டினன். அவன் எழுப்பிய கோயிலே இன்று இராசராசேசுவரம் என்றும் தஞ்சைப் பெருங் கோயிலென்றும் விளங்கிவருகிறது. அதனை அவன் தன் வெற்றிகளுக்கு அறிகுறியாக எழுப்பினன். எல்லா வழிகளிலும் அது இணையற்ற பெருமையுடன் விளங்க வேண்டுமென்பது அவனது விருப்பம். அவ்விருப்பத் திற்கேற்றபடி அதன் நீளம், அகலம், உயரம் முதலிய வற்றை அவன் அமைத்தான்.

தஞ்சை நகரம் இப்பொழுது ஒரு பெரிய புகை வண்டிச் சந்திப்பாக விளங்குகிறது. முப்புறங்களி லிருந்தும் அங்கே புகை வண்டிகள் வந்து சேருகின்றன. நாம் எப்பாகத்திலிருந்து புகைவண்டியிற் சென்றாலும், தஞ்சையை அடைவதற்கு நெடுந் தொலைவிலிருந்தே கோயிலின் விமானத்தைக் காணலாம். அவ்விமானம் கோயிலிலுள்ள கடவுள் திருமேனிக்கு மேலே 216 அடி உயரமுள்ளதாகக் கட்டப்பட்டிருக்கிறது. அது சதுர வடிவாய், பதின்மூன்று கோபுர மாடிகளையுடையதாய்

இருக்கிறது. அதற்குத் தக்ஷிணமேரு என்றும் உத்தம விமானம் என்றும் வேறு பெயர்கள் உண்டு. அதன் உச்சியில் 25½ அடி நீளமும் 25½ அடி அகலமுமுள்ள ஒரு கருங்கல் வைக்கப்பட்டு, அதன்மேலே பொற்ற கட்டால் மூடப்பெற்ற ஒரு கலசமும் அமைக்கப்பட்டிருக்கிறது. இக்கருங்கல்லை விமானத்தின் மேலேற்றத் தஞ்சைக்கு நாலு கற்களுக்கு அப்பாலுள்ள சாரப் பள்ளம் என்ற இடத்திலிருந்து சாரம் கட்டினார்கள் என்பர். தமிழர்களின் மன எழுச்சியின் உயர்வை எடுத்துக் காட்டுவதுபோல் அவ்விமானம் தோன்று கிறது என்னலாம். விமானத்தின் உயர்வுக்கு ஏற்றபடி அக்கோயிலின் பிற பகுதிகளும் அமைந்திருக்கக் காண் கிறோம். இக்கோயிலைச் சூழ்ந்து ஓர் அகழியும் இருக் கின்றது. கோயிலுக்குள் நுழைய இரண்டு பெரிய கோபுர வாயிலுள்ளும் நாம் நுழையவேண்டும். இரண்டாம் கோபுர வாயிலைக் கடந்தவுடன் நாம் மிகப் பெரியதொரு முற்றத்திற்கு வருவோம். அதன் நீளம் 800 அடி ; அகலம் 400 அடி. அம்முற்றத்தில் பெரிய தொரு மண்டபத்தில் மிகப் பெரியதொரு நந்தி படுத் திருப்பதைக் காணலாம். இதன் உருவத்தை யொத்த வேறொரு நந்தி தமிழகத்தில் வேறெங்கும் இல்லை என்பர்.

நந்தியின் எதிரில்தான் இறைவர் எழுந்தருளி யுள்ள விமானம் உள்ளது. அந்த விமானத்துக்கும் நந்திக்கும் இடையில் ஆறு, பெரிய மண்டபங்கள் இருக்கின்றன. கடவுளைக் காண நாம் ஏழு வாயில் களைக் கடக்கவேண்டும். ஒவ்வொரு வாயிலிலும் 18 அடி உயரமும் 8 அடி அகலமுமுள்ள இரண் டிரண்டு தெய்வக் காவலாளிகளின் உருவங்கள்

வைக்கப் பெற்றுள்ளன. இறைவன் திருமேனியும் மிகப் பெரியது.

இக்கோயிலின் சிற்ப வேலைகளைப்பற்றி எவ்வளவோ பெயர்கள் புகழ்ந்து எழுதியிருக்கிறார்கள். இக்கோயிலில் காணப்பெறும் ஓவியங்களின் அழகைக் கண்டும் பலர் வியந்து கூறியிருக்கிறார்கள்.

இம்மாதிரியான கோயில்கள் நம் நாட்டில் அளவற்று விளங்குகின்றன. அவை நம் முன்னோர் நமக்கு விட்டுவைத்த விலைமதித்தற்கு அரிய அரும் செல்வங்கள். அவற்றைப் பற்றி அறிவதால் நாம் நம் நாட்டின் பண்டைப் பெருமைகளை அறிகிறோம்.

**பயிற்சி:**

**சொற்கள்**

| | | | | |
|---|---|---|---|---|
| கலை | சிற்பம் | எய்தி | கோபுரம் | திருமேனி |
| தமிழகம் | ஓவியம் | சந்திப்பு | முற்றம் | காவலாளி |
| இலக்கியம் | சிகரம் | விமானம் | மண்டபம் | தளம் |
| இசை | இணை | கோட்டை | நந்தி | பண்டை |
| நாடகம் | திளைத்து | அகழி | இறைவர் | எழுச்சி |

2. கலையறிவு, பண்டைக்காலம், இணையற்ற, அறிகுறி, ஏறக்குறைய, அடிப்படுத்துதல், வெற்றிக்கொடி, மதிப்பதற்கரிய, மன எழுச்சி.

3. சில பெயர்ச் சொற்கள் வினைச் சொல் அடிகளிலிருந்து பிறக்கின்றன. (உ - ம்) அறிவு - அறி.

பின்வரும் பெயர்கள் பிறந்துள்ள வினை அடிகளைக் கூறுக.

### வினாக்கள்

1. சில நூண்கலைகளின் பெயர்களைக் கூறுக.

2. நம் கோயில்கள் நமக்குத் தெரிவிக்கும் பண்டைப் பெருமைகள் யாவை ?

3. இராஜராஜன் தஞ்சைக் கோயிலை எதற்கு அறிகுறியாகக் கட்டினான் ?

4. கோயிலின் விமானத்தைப் பற்றி ஒரு சிறிய விளக்கம் கூறு.

5. சாரப்பள்ளம் என்ற பெயர் எதனால் உண்டாயிற்று ?

6. தஞ்சைக் கோயிலில் காணக்கூடியவை யாவை ?

### இலக்கணம்

பின்வரும் வாக்கியங்களை ஒன்றுபடுத்தி எழுதுக :

1. சோழமன்னர்கள் தமிழகத்தை ஆண்டுவந்தனர்; அவர்கள் தஞ்சையிலிருந்து ஆண்டுவந்தனர்.

2. விமானம் கடவுள் திருமேனிக்கு மேலே கட்டப்பட்டிருக்கிறது. அதன் உயரம் 216 அடி.

3. சாரப்பள்ளத்திலிருந்து சாரம் கட்டினார்கள். அவ்வூர் தஞ்சையிலிருந்து நாலு கல் தூரத்தில் உள்ளது.

**புள்ளிகள்** :— முற்றுப்புள்ளி, காற்புள்ளி இவற்றின் உபயோகத்தைப்பற்றி முன் புத்தகத்தில் படித்தீர்கள்.

பின்வரும் வாக்கியத்தைப் பாருங்கள்.

முற்றத்தின் நீளம் 800 அடி; அகலம் 400 அடி.

இவை இரண்டு வாக்கியங்கள்; ஆனால் அவை ஒன்றியும் இருக்கின்றன. அவற்றின் இடையே; **அரைப்புள்ளி** இடப்பட்டிருக்கிறது.

### கட்டுரை

நீங்கள் பார்த்த ஏதேனுமொரு பெரிய கோயிலைப் பற்றிச் சில வாக்கியங்களிற் கூறு.

---

# 2. மணிமேகலை

மணிமேகலை புகார் நகரத்தில் வாழ்ந்த கோவலன் என்ற வணிகனுக்கும் மாதவி என்ற நாடகக் கணிகைக்கும் தோன்றிய பெண். அவள் ஆடல், அழகு, கல்வி என்ற மூன்றிலும் மிகச் சிறப்பு வாய்ந்து விளங்கினாள். ஆனால், அவள் தந்தை திடீரென மதுரையிலே மாண்டு போனதைக் கேட்டு அவளும் அவள் தாயும் ஆற்ற முடியாத துயரத்திலாழ்ந்தனர். மாதவி துறவு பூண்டாள்.

இவ்வாறிருந்தபோது, ஒரு நாள் மணிமேகலை மலர்வனம் புகுந்து மலர் கொய்யச் சென்றாள். ஆங்கே மணிமேகலா தெய்வம் என்ற ஒன்று தோன்றி அவளைத் தூக்கிக்கொண்டு மணிபல்லவத் தீவில் கொண்டு சென்று அங்கே அவளை விடுத்தது. அத்தீவில் மணிமேகலைக்கு முன் பிறப்பு உணர்ச்சியும், சில மந்திரங்களும் அங்கிருந்த ஒரு தெய்வத்தின் உதவியால் கிடைக்கலாயின. அவள் வேற்று வடிவம் கொள்ளவும் ஆகாயத்தின் வழியே செல்லவும் அம்மந்திரங்கள் உதவின. இன்னும் அத்தீவில் எடுக்க எடுக்கக் குறையாததான ஒரு பாத்திரமும் கிடைத்தது. அதன் பெயர் அமுத சுரபி.

அப்பாத்திரத்துடன் அவள் ஆகாய வழியாகத் திரும்பிப் புகார் நகரை அடைந்தனள். அங்கே அவள் துறவிக் கோலத்துடன் பாத்திரமும் கையுமாக நின்றதைக் கண்டு ஊரார் வியந்தனர். அவ்வூரிலே உலக வறவி என்ற ஓரிடம் உண்டு. அங்கே அங்கம் குறைந்தவர், பிணியாளர், வறியோர் ஆகிய ஏழையர் பலர்

இருந்தனர். மணிமேகலை அங்குச் சென்று அவர்களுக்குத் தன் பாத்திரத்திலிருந்து சோற்றை எடுத்து எடுத்து ஊட்டி அவ்விடத்தை அறச்சாலையாக்கினுள்.



நெடுநாளாகக் கொடிய வெயிலால் முற்றிலும் எரிந்து போன ஒரு காட்டில் திடீரெனச் சோனுமாரி பெய்து அவ்விடத்தை யெல்லாம் குளிர்ப்பித்தது போலவிருந்தது உலக வறவியில் அவளுடைய தோற்றம். அங்கிருந்த மக்கள் யாவரும் ஆர உண்டு பசி தீர்ந்திருந்தார்கள். இக்காலத்தில் அறவண வடிகள் என்ற ஒரு பௌத்தப் பெரியாரின் தொடர்பும் அவளுக்குக் கிடைத்தது. அவர் புத்தர் பெருமானின் நல்லுரைகளை யெல்லாம் அவளுக்குக் கற்பித்தார்.

இவ்வாறு மணிமேகலை சமயத்தொண்டு புரிந்து கொண்டு வாழ்ந்து வந்த காலத்தில் அந்நகரத்து அரசனின் மகன், உதயகுமாரன் என்பவன், மணிமேகலையைக் காதலிக்கத் தொடங்கினுன். மணிமேகலை

அவனுக்கு இணங்கவில்லை. தற்செயலாய் ஒருநாள் யாரோ ஒரு தேவன் உதயகுமாரனை வெட்டிக்கொல்ல, அரசன் தன் மகனின் சாவுக்கு மணிமேகலையே காரணம் என்றெண்ணி அவளைச் சிறையிலிட்டான். அரசன் மனைவி மணிமேகலையைப் பல வழிகளிலும் துன்புறுத்த முயன்றாள். ஆனால் அவளால் ஒன்றும் இயலவில்லை. பிறகு அவள் மணிமேகலையின் தூய்மையையும், ஆற்றலையும் உணர்ந்து தான் அவளுக்குச் செய்த துன்பத்திற்காக வருந்தி அவளைச் சிறையிலிருந்து விடுவித்து அவளுடைய மன்னிப்பையும் வேண்டினாள்.

மணிமேகலை அவளுக்கு நல்லறிவு உண்டாகுமாறு உபதேசம் செய்து, அவ்வூரை விட்டுக் கிளம்பிப் பல விடங்களுக்கும் சென்று ஏழை மக்களுக்குச் சோறளித்து உதவியும், அறிவுடையோர்களைக் கண்டால் அவர்களிடமிருந்து அறிவு பெற்றும், சிலரோடு வாதம் புரிந்து தன் மதக் கொள்கைகளை நாட்டியும் வந்தாள். முடிவில் அவள் அறவணவடிகளையே அடைந்து புத்த மதக் கொள்கைகளை ஐயந்திரிபற அறிந்து தவம் புரியலானாள்.

இக்கதையை மதுரைக் கூலவாணிகன் சாத்தனார் என்ற கவிஞர் தமிழில் மிக அழகான காப்பியமாக எழுதியுள்ளார். தமிழிலுள்ள பெருங்காப்பிய நூல்களுள் ஒன்றாக அது திகழ்ந்து வருகிறது. அதனில் மணிமேகலையின் வரலாறு மிக விரிவாக எழுதப்பட்டுள்ளது. நீங்கள் பெரியவர்களாகும்போது அச்சிறந்த நூலைப் படித்துப் பயன் பெறவேண்டும்.

**பயிற்சி :**

| | | | | |
|---|---|---|---|---|
| வணிகன் | விடுத்தது | ஆர | தூய்மை | காப்பியம் |
| கணிகை | மந்திரம் | பௌத்த | ஆற்றல் | திகழ்ந்து |
| ஆடல் | துறவி | சமயம் | உபதேசம் | அங்கம் |
| மாண்டு | கோலம் | காதலிக்க | வாதம் | விரிவாக |
| தீவு | வியந்தனர் | இணங்க | கவிஞர் | |

| | | | |
|---|---|---|---|
| ஆற்றமுடியாத | முன் பிறப்பு | உலகவறவி | சோழநாடு |
| மலர்வனம் | எடுக்க எடுக்க | அறச்சாலை | பசிதீர்ந்து |
| நல்லுரை | தற்செயலாய் | மதக்கொள்கை | |
| சமயத்தொண்டு | நல்லறிவு | ஐயந்திரிபற | |

சில பெயர்ச் சொற்கள் வினையடிகளிலிருந்து பிறக்கும் என்பதை நீங்கள் அறிவீர்கள். பின்வரும் சொற்கள் எவற்றிலிருந்து பிறந்திருக்கும் ?

உணவு, அறிவு, சாவு, மன்னிப்பு.

**வினாக்கள்**

1. கோவலன் இறந்ததால் மாதவி செய்தது என்ன ?
2. மலர்வனத்தில் மணிமேகலைக்கு என்ன நிகழ்ந்தது ?
3. அமுத சுரபியின் இயல்பு யாது ?
4. உலகவறவியில் இருந்தோர் எத்தகையவர் ?
5. அவர்களுக்கு மணிமேகலை செய்த உதவி யாது ?
6. அறவணவடிகள் என்பவர் யார் ?
7. உதயகுமாரன் எப்படி இறந்தான் ?
8. மணிமேகலை சிறையிலிருந்து எப்படி வெளியேறினாள் ?
9. மணிமேகலை நூலை எழுதியவர் யார் ?

## இலக்கணம்

பின்வரும் நீண்ட வாக்கியங்களைச் சிறிய வாக்கியங்களாகப் பிரிக்க.

1. அங்கே மணிமேகலா தெய்வம் என்ற ஒன்று தோன்றி அவளைத் தூக்கிக்கொண்டு மணி பல்லவத் தீவில் கொண்டு சென்று அங்கே அவளை விடுத்தது.

2. அப்பாத்திரத்துடன் அவள் ஆகாய வழியாகத் திரும்பிப் புகார் நகரை அடைந்தாள்.

## கட்டுரை

மணிமேகலை மலர்வனம் புகுந்தது முதல் அமுதசுரபியுடன் திரும்பியது வரையில் நடந்தவை என்ன ?

# 3. மாயக் குழலோன்

ஜர்மனி நாட்டில் ஆமலன் என்ற நகரொன்றிருக்கிறது. அதன் ஓரமாக வீஸர் என்ற ஆறு ஓடிக்கொண்டிருக்கிறது. வெகு காலத்துக்கு முன்னே அந்நகரில் எலிகள் அதிகமாக நகர மக்களை அலைத்துக் கொண்டிருந்தன. அவை இல்லா இடங்களே இல்லை. அவற்றிற்குப் பகலென்றும் இரவென்றும் வேற்றுமை இல்லை. ஒவ்வொரு வீட்டிலும் அவை நூற்றுக் கணக்கில், ஆயிரக்கணக்கில் இருந்தால் யாரால் என்ன செய்யமுடியும்? பூனைகளெல்லாம் அவற்றைக் கண்டு அஞ்சின.

மக்கள் ஆனமட்டும் அவற்றை வேட்டையாடப் பார்த்தனர். அவர்களால் ஒன்றும் செய்ய இயலவில்லை. அவர்கள் ஒருநாள் ஒன்றுகூடி அத் தொல்லையை எவ்வாறு தொலைப்பதென்று ஆராயத் தொடங்கினார்கள்.

அச்சமயம் அங்கே ஒரு புதியோன் புகுந்தான். அவன் விந்தையான உடைதரித்திருந்தான். அவன் கைவிரல்கள் எப்போதும் புல்லாங்குழல் வாசிப்பன போல அசைந்து கொண்டிருந்தன. அவன் நெட்டையாயிருந்தான்; ஆனால் அவனுடல் மெலிந்திருந்தது. அவன் கண்கள் ஒளிவீசின.

அவன் அவையோர்களை வணங்கி, "ஐயன்மீர், நான் ஒரு மாயக் குழலோன்; என் குழலின் வாசிப்பைக் கொண்டு உலகத்திலுள்ள எந்த உயிர்ப் பிராணியையும்

என் வசப்படுத்திவிடுவேன். சென்ற ஆண்டு அரேபியா நாட்டுக்குச் சென்று அங்குள்ள பாம்புகளையெல்லாம் ஒழித்தேன்; இரண்டு தினங்களுக்குமுன் ஆப்பிரிக்கா போய் அங்குள்ள வெளவால்களை யெல்லாம் வெருட்டி னேன். எனக்கு ரூபா ஆயிரம் கொடுப்பீர்களானால் இக்கணமே இந்நகரிலுள்ள எலிகள் யாவற்றையும் இல்லாமற் செய்து விடுவேன்" என்றான்.

அச்சொற்களைக் கேட்ட அனைவரும், "ஆயிரம் என்ன? ஐயாயிரம் தருகிறோம்; எப்படியாவது இவ் வெலிகளைத் தொலைத்துவிடு" என்றார்கள்.



உடனே அக்குழலோன் தெருவில் வந்து, தன் மார்பில் தொங்கிக் கொண்டிருந்த குழலை யெடுத்து வாசிக்கத் தொடங்கினான். அவ்வொலி புறப்பட்டது தான் தாமதம். ஒவ்வொரு வீட்டிலிருந்தும் கடையி லிருந்தும், களஞ்சியத்திலிருந்தும், பண்ட சாலையிலிருந்

தும் எலிகள் குதித்துக்கொண்டு வெளியே வந்தன. அப்பப்பா! எத்தனை எலிகள்! அவற்றில் எத்தனை விதங்கள்! வெள்ளை எலி, கருப்பு எலி; சாம்பல் நிற எலி; பெரிய மீசைக்கார எலி; பெரிய தாடிக்கார எலி; பருத்த எலி; இளைத்த எலி; தாத்தா எலி; பாட்டி எலி; அத்தான் எலி; அம்மான் சேய் எலி; தாய் எலி; தகப்பன் எலி; குழந்தை எலி; பாட்டன் எலி; பாட்டி எலி; பேரன் எலி; பேத்தி எலி; எல்லாம் வாலைத் தூக்கிக்கொண்டும், குதித்துக்கொண்டும், கொம்மாள மிட்டுக்கொண்டும் குழலோன் பின்னே சென்றன.

அவன் வீதி வீதியாய்ச் சென்றான். அந்நகர எலிகள் யாவும் தெருக்களில் நிற்க இடமில்லாமல் ஒரு கல் தூர நீளம் ஊர்வலமாகச் சென்றன. அவன் அவற்றையெல்லாம் அழைத்துக்கொண்டு ஆற்றை நோக்கிக் கடந்தான். ஆற்றோரம் வந்ததும் அவை யாவும் தண்ணீரில் குதித்து விட்டன. ஆறு அவை யாவற்றையும் அடித்துக்கொண்டு போய்விட்டது.

மக்களுக்கு உண்டான மகிழ்ச்சிக்கு அளவே இல்லை. அவர்கள் எல்லோரும் எலி வளைகள் யாவற்றையும் தூர்க்கலாயினர். தங்கள் மகிழ்ச்சியைத் தெரிவிக்க விடுதோறும் தோரணம் கட்டினர். ஆனால் ஒருவரும் குழலோனைக் கவனிக்கவில்லை.

அவன் எலிகளையெல்லாம் கொன்றுவிட்டு நகருக்குள் வந்தான். அவனுக்கு ஒருவரேனும் ஒரு நன்றிச் சொல் சொல்லக்கூட வரவில்லை. அவன் நகரத் தலைவரிடம் நேரிற்சென்று, "என் கூலி ஆயிரம் ரூபாயையும் என்னிடம் கொடுங்கள்" என்று கேட்டான். அதற்கு

அவர், "ஆயிரம் ரூபாவா ? எலிகளைக் கொல்ல ஆயிரம் ரூபாவா ? வேண்டுமானால் ஐந்து ரூபா கொடுப்போம். வாங்கிக் கொண்டுபோம்" என்றார்.

குழலோன், "ஐயா, என்னுடன் விளையாட வேண்டா. எனக்கு உம்முடன் பேச நேரமில்லை; பேசினபடி ஆயிரம் ரூபாவைக் கீழே வையுங்கள்" என்றான்.

அதற்கு நகரத் தலைவர், "எலிகளெல்லாம் இறந்து விட்டன. இனி உம்மால் என்ன செய்யமுடியும் ? நான் பணம் கொடுக்க மாட்டேன்" என்றார்.

குழலோன் வாய் திறக்கவில்லை. வீதியில் வந்தான். தன் கைக்குழலை எடுத்து ஊதினான். ஊரிலுள்ள குழந்தைகளெல்லாம் அவன் பின்னே புறப்பட்டன. ஊரார், என்ன கெஞ்சியும் அக்குழந்தைகள் கேட்க வில்லை. குழலோன் அக்குழந்தைகளுடன் தன் பாட்டுக்குப் போய்விட்டான்.

நகரத்தார் யாவரும் தாம் செய்த குற்றத்தை எண்ணி வருந்தினார்கள். வருத்தி யாது பயன் ?

**பயிற்சி :**

**சொற்கள்**

| | | | |
|---|---|---|---|
| **அலைந்து** | **ஆராய** | **வெருட்டு** | **அம்மான்சேய்** |
| **நெட்டை** | **வேட்டை** | **மாயம்** | **அனைவர்** |
| **பேரன்** | **விதம்** | **இயல** | **வசப்படுத்தி** |
| **களஞ்சியம்** | **பேத்தி** | **கொம்மாளம்** | **தொலைப்பது** |
| **ஒழி** | **இனை** | **நன்றி** | **தோரணம்** |
| | **நூற்றுக்கணக்கு** | **ஆற்றோரம்** | **கொம்மாளமிடு** |

இரு பொருள்கள் கூறுக :

எண், கூடு, ஆண்டு, கவம், திங்கள், ஊது, நாடு.

## வினாக்கள்

1. குழலோன் உடையும் தோற்றமும் எவ்வாறு இருந்தன?

2. அவன் வெவ்வேறு இடங்களில் செய்த பெருஞ் செயல்கள் யாவை?

3. எலிகளின் வகைகளை யெல்லாங் கூறு.

4. எலிகளெல்லாம் எவ்வாறு அழிந்தன?

5. எலிகள் ஒழிந்தபின் ஊரார் செய்தவை யாவை?

6. குழலோனுக்குக் கோபம் வந்ததேன்?

7. அவன் குழந்தைகளை யாது செய்தான்?

## இலக்கணம்

இப்பாடத்திற்குப் பின்வரும் தலைப்புக்களை உரிய இடங்களில் இட்டுக் காட்டு.

(1) எலித்தொல்லை. (2) குழலோன் கூறிய உதவி. (3) எலிகள் நாசம். (4) குழலோன் ஏமாற்றப்பட்டது. (5) பழிக்குப் பழி.

## கட்டுரை

குழலோன் பாம்புகளைத் தொலைத்தான் என்று கதையை மாற்றிக்கொண்டு, பாம்புகள் புறப்பட்ட தோற்றத்தை விளக்கு.

# 4. நாடும் அரசியலும்

கல்வியிற் பெரியவர் கம்பர் என்பது ஒரு பழமொழி. அத்தகைய பெருமை வாய்ந்த கம்பர் தமிழில் ஓர் இராமாயணம் பாடினர். அது உலகப் பெரு நூல்களுள் ஒன்ருக இன்று விளங்கி வருகிறது.

கம்பராமாயண முகப்பிலே கவிஞர் தம் கதாநாயகனுன இராமன் தோன்றிய நாடான கோசலை நாட்டின் வளத்தையும் அதன் தலைநகரான அயோத்தியின் பெருமையையும் அங்கே ஆண்டு வந்த தசரதனின் அரசியல் சிறப்பையும் 145 செய்யுட்களுள் பாடியுள்ளார். கம்பர் காவிரி நாட்டிற் பிறந்து வளர்ந்தவர்; தமிழகத்தில் இணையிலாப் பற்றுக்கொண்டவர். அவர் தம்முடைய நாட்டின் வளத்தையும் அதன்மீது தாம் கொண்ட பற்றையுமே தம் நூலில் அமைத்துள்ளார் என்று அறிந்தோர் கூறுகின்றனர். அன்றியும் அவர் கருத்துப்படி சிறந்த நாடென்பது எவ்வாறிருக்க வேண்டுமென்றும் அதன் அரசியல் எவ்வாறு அமைய வேண்டுமென்றும் அவர் தம் மனக் கண்ணுல் கண்டு, அவற்றையே கம்ப இராமாயணத்தில் வரைந்துள்ளார் என்றும் சிலர் கூறுவதுண்டு. உண்மை எதுவாயினும் அவருடைய கருத்துக்களை நாம் அறிந்துகொள்ள வேண்டியது இன்றியமையாதது. அதனிலுள்ள சில பகுதிகளை இங்கே கூறுவோம்.

நாட்டின் சிறப்பு முதன்மையாக அதன் மக்களால் அமைகிறது. கம்பருடைய நாட்டில் கள்வரே இல்லை; அகலால் அங்குக் காவலுக்குத் தேவையே இல்லை.

அந்நாட்டில் வறியோரே யில்லாமையால் அங்கே கொடைக்கும் வழியில்லை. எல்லோரும் படித்திருந் தனர்; ஆகவே முற்றிலும் கற்றவர் என்று எவரையும் குறித்துச் சொல்ல இயலவில்லை. எல்லாரிடமும் செல் வம் நிறைந்திருந்தது; ஆகவே, அங்கு இல்லாரும் இல்லை. உடையவரும் இல்லை. இவ்விதம் நாடு கல்வி, செல்வம் இவற்றில் நிரம்பியிருந்தது. மக்கள் கேள்வி களிற் சிறந்திருந்தமையால் அவர்களுடைய மனம் நல் வழிகளிலேயே சென்றிருந்தது. அவர்கள் தம் வாழ் வால் பெறும் நன்மைகள் யாவற்றையும் இனிதே நுகர்ந்து வந்தனர்.

இனி நாட்டின் வளங்களைக் காண்போம். சரயு நதி தன் ஆயிரங் கிளைகளோடு நாடெல்லாம் பாய்ந்து வந்தது. தண்ணீர்ப் பஞ்சம் எங்குமே யில்லை. நில வளமும் மக்கள் உழைப்பும் செழித்தோங்கி வந்தன. ஆண்களும் பெண்களும் ஓயாமல் உழைத்து வந்தனர். இவற்றின் விளைவாக நாட்டின் விளைபொருள்கள் மல்கின.

சோலைகளில் மயில்கள் ஆடின; தாமரைகள் விளக் குகள் எரிவனபோல விளங்கின; வானம் மத்தளம் கொட்டுகிறது என்னும்படி குமுறிக்கொண்டு மாதம் மும்மாரி பொழிந்தது. குவளைப் பூக்கள் நீர் நிலை களிலே நின்று பெண்களின் கண்களோ என்னும்படி மலர்ந்தன. கடலின் அலைகள் ஒருபுறத்தில் எழுந்து மடங்கும் தோற்றம் நாடக மேடையில் ஏறி இறங்கும் திரைகள் போல விளங்கின. மரங்களிலும் செடிகளி லும் கொடிகளிலும் பூக்களை நுகர்ந்து திரியும் வண்டி னங்கள் யாழ்போல் பாடின.

வயல்களில் உழவர்கள் நெற்கதிர்களைப் போர் போராகக் குவித்தனர். இடையர் மாட்டு வளம் பெருகப் பாலும் தயிரும் விற்றுப் பெரும் செல்வம் படைத்தனர். நுளையரும் நுளைச்சியரும் மீன் பிடித்தும், முத்துக் குளித்தும், உப்புக் காய்ச்சியும் உலகுக்கு அளித்து வந்தனர்.

வீடுதோறும் பெண்டிர் தம் கூந்தலைப் புலர ஊட்டும் அகிற் புகையும், ஆலைகளில் வெல்லங் காய்ச்சுவதால் எழும் புகையும் மறையோர் வேள்விகளில் எழுப்பும் புகையும் மேகங்கள் போல வானத்தில் பறந்தன.

கப்பல்களிலும் வண்டிகளிலும் சரக்குகள் வந்து கொண்டும் போய்க் கொண்டுமே இருந்தன. மக்கள் செல்வக் களிப்பால் பலவகை மகிழ்ச்சிகளில் இறங்கினர். ஆடல்களும் பாடல்களும் எங்கும் மலிந்தன. வீடுகளில் குழந்தை குட்டிகள் பெருகின.

இத்தகைய நாட்டைத் தயரதன் என்ற மன்னன் ஆண்டு வந்தான். அவன் நிரம்பக் கற்றிருந்தான்; அதனோடு தான் கற்ற வழியே நின்றும் வந்தான். அவன் மக்களிடம் தாய்போன்ற அன்பு கொண்டிருந்தான்; மக்களுக்கு வேண்டிய நன்மைகளை யெல்லாம் ஆராய்ந்து அவர்களுக்கு அளிப்பதிலேயே அவன் முனைந்திருந்தான். அவர்களுக்கு உண்டாகும் தீமைகளை முன்பே உணர்ந்தறிந்து அவற்றை வராமல் தடுத்து வந்தான்.

அவனுடைய வீரத்துக்கு எல்லையில்லை. அவன் தன் ஆண்மையால் உலகத்தையே தன் அடிப்படுத்தி ஆண்டு வந்தான். அவனுடைய அமைச்சர்கள் அவ

னுக்குக் கண்கள் போலிருந்து வருங் காரியங்களை ஆராய்ந்து அவனுக்குதவி வந்தனர்.

இத்தகைய நாட்டிலே இத்தகைய மன்னனுக்கு ஸ்ரீராமன் புதல்வனாகத் தோன்றினான். அவனுடைய வரலாற்றைக் கூறுவதே இராமாயணம்.

### பயிற்சி :

### சொற்கள்

| | | | | |
|---|---|---|---|---|
| பழமொழி | அரசியல் | கொடை | நுளையர் | முனைந்திருந்தான் |
| முகப்பு | வரை | நுகர்ந்து | நுளைச்சியர் | ஆண்மை |
| வளம் | பகுதி | குமுறு | கூந்தல் | அடிப்படுத்தி |
| பற்று | வறியோர் | யாழ் | புலர | வரலாறு |
| கதாநாயகன் | மனக்கண் | | கல்விகேள்வி | செழித்தோங்கி |
| இணையிலா | இன்றியமையாதது | | நல்வழி | நாடகமேடை |

ஆடு, பாடு, உணர், தோன்று.— இவ்வினையடிகளி லிருந்து பெயர்ச்சொற்கள் உண்டாக்குக.

### இலக்கணம்

பின்வரும் வாக்கியங்களைப் பன்மையில் அமைக்க.

அவன் படித்திருந்தான்.

வண்டியில் சரக்கு வந்தது.

நான் நூல் படிக்கிறேன்.

### கட்டுரை

சோழநாட்டின் வயல்வள இயற்கைக் காட்சியை வர்ணித்தெழுது.

## 5. முருகன் கணபதி விளையாட்டு

சிவப்பிரகாசர் என்ற கவிஞர் தம் உடன் பிறந்தார் திருமணக் காலத்திலே சில பாடல்களைப் பாடினர். அவற்றிலொன்று கீழே வருவது. இப்பாடலில் மூத்த பிள்ளையாரும், முருகனும் குறும்பு விளையாடல்கள் புரிவதைப் புலவர் சித்திரிக்கிருர் :

அரனவ னிடத்திலே ஐங்கரன் வந்துதான்,
    'ஐய! என் செவியை மிகவும்
அறுமுகன் கிள்ளினன்' என்றே சிணுங்கிடவும்,
    அத்தன் வேலவனை நோக்கி,

விரைவுடன் வினவவே, 'அண்ணன் என் சென்னியில்
    விளங்குகண் எண்ணினன்' என,
வெம்பிடும் பிள்ளையைப் பார்த்து, 'நீ அங்ஙனம்
    விகடம் ஏன் செய்தாய்?'' என,

'மருவும் என் கைந்நீளமுழம் அளந் தான்' என்ன,
    மயிலவன் நகைத்து நிற்க,
மலையரையன் உதவவரும் உமையவளை நோக்கி, "நின்
    மைந்தரைப் பாராய்" எனக்

கருதரிய கடலாடை உலகுபல அண்டம்
    கருப் பெறு தீன்ற கன்னி
கணபதியை அருகழைத் தகமகிழ்வு கொண்டவள்
    களிப்புடன் உமைக்காக்கவே.

### குறிப்புரை

அரனவன் இடத்திலே - சிவபெருமானிடத்திலே. ஐங்கரன்-ஐந்து கைகளையுடைய விநாயகன். அறுமுகன்-முருகன். சிணுங்கிடவும்-முகத்தைச் சுளிக்கவும். அத்தன்-சிவபிரான். வேலவனை - முருகனை. சென்னி - தலை. விகடம் - வேடிக்கை. மருவும்-பொருந்திய. மயிலவன்-முருகன். மலை அரையன் உதவ வரும் உமை - மலை அரசனான பர்வதராசன் பெற்ற உமாதேவி. கருத அரிய கடல் ஆடை உலகு பல அண்டம் கரு பெறுது ஈன்ற கன்னி-நினைக்க முடியாத (பெரிய) பெரிய கடலை ஆடையாகக் கொண்ட நிலவுலகையும் பல அண்டங்களையும் கருவிலே கொள்ளாமல் பெற்ற பெண்ணான அம்பிகை.

உமை - மணமக்களை.

# 6. கடமையின் பெருமை

முன்னொரு காலத்தில் இளந்துறவி யொருவர் கானகத்துக்குச் சென்று தவம் செய்யத் துடங்கினர். அவர் அங்கே மானிடப் பிறப்பின் நுட்பங்களை ஆராய்ந்து கொண்டும், கடவுளைப் பற்றி நினைத்துக் கொண்டும், யோகமுறைகளைப் பயின்று கொண்டும் வந்தார். இவ்வாறு பன்னிரண்டாண்டுகள் கடந்தன.

இவ்வாறு அவர் உட்கார்ந்திருந்த போது அவர் தம் தலைமேல் பல சருகுகளும் இலைகளும் உதிர்வதைக் கண்டார். அவர் அதன் காரணத்தை ஆராய்வ தற்காகத் தம் தலையை உயர நிமிர்த்திப் பார்த்தார். அங்கே ஒரு கொக்கும் காகமும் சண்டையிட்டுக் கொண்டிருந்தன. அவற்றைப் பார்த்தவுடன் அவ ருக்குக் கோபம் மூண்டெழுந்தது. அவர் அவற்றைப் பார்த்து, "அற்பப் பறவைகளே! என் தலைமீது இவ் வளவு இலைகளை உதிர்க்க உங்களுக்கு இவ்வளவு ஆணவமா?" என்று வினவினர். அப்பொழுது அவர் கண்களினின்று நெருப்பு எழுந்தது. அதன் வேகத்தால் அவ்விரு எளிய பறவைகளும் சாம்பராகி உதிர்ந்தன.

அதனைக் கண்டவுடன் துறவிக்கு வியப்பும் மகிழ்ச் சியும் உண்டாயின. தமக்கு உண்டாகிய புதிய ஆற்றலைக் கண்டு அவர் பெருமிதம் கொண்டார். அப்பொழுது அவருக்குப் பசி தோன்றிற்று. அருகி லுள்ள ஓர் ஊருக்குச்சென்று எவரிடமேனும் சிறிதளவு சோறு இரக்க எண்ணி அவர் அவ்வாறே சென்றார்.

அவர் ஒரு வீட்டின் வாயிலில் நின்று, "தாயே!
பிச்சை !" என்றார். உள்ளிருந்து ஒரு குரல், "சற்றுப்
பொறும்; வருகிறேன்." என்று வந்தது. கணங்கள்
பல கடந்தன. ஒருவரும் வெளியே வந்தபாடில்லை.



துறவிக்கு எழுந்தது கோபம். அவர் உரத்த குரலில்,
"வாயிலில் நிற்பவன் யாரென்று நினைத்தாய் ! பிச்சை
போடுகிறாயா ? இல்லையா ?" என்று வினவினார்.

உள்ளிருந்து முன் வந்த குரல், "கொக்கெனவே எண்ணி னையோ ? கொங்கணவா ? பதட்டம் வேண்டா. வந்து கொண்டிருக்கிறேன்" என்று வந்தது. உடனே வயது முதிர்ந்த ஓர் அம்மையார் கைகளில் இன்னடிசில் களுடன் வெளியே வந்தார்.

அவரைக் கண்டதும் துறவிக்கு மெய் நடுக்கம் உண்டாயிற்று. அவர் அம்மையின் அடிகளில் விழுந்து, "அம்மையே ! அறியாமற் செய்த குற்றத்தை மன்னிக்க வேண்டுகிறேன் ; எளியேன் காட்டில் நிகழ்த்திய செய்தியைத் தாங்கள்தெரிந்துகொண்டது எவ்வாறோ?" என்று வினவினர்.

அதற்கு அவ்வம்மை, "நான் தவம் முதலிய தொன்றையும் அறியேன். வயது முதிர்ந்தவரும் நோயாளியுமான என் கணவர்க்குத் தொண்டு புரிவதும் வீட்டுக் கடமைகளைக் கவனிப்பதுமே நான் அறிந்தவை. என் கடமைகளை, நான் சற்றும் பிசகாமல் செய்து வருவதால், பிறர் மனத்துள் உள்ளவற்றை அறியும் ஆற்றல் பெற்றிருக்கிறேன்" என்ருள்.

துறவி அவள் கொடுத்த உணவை ஏற்றுக் கொண்டு, "எனக்கு நல்லறிவு உண்டாகுமாறு உபதே சிக்க வேண்டுகிறேன்" என்று கேட்க, அவள், "ஐயா, அவ்வளவு அறிவு படைத்தவள் நான் அல்லள்; வேண்டு மானல் இவ்விடத்திலிருந்து இரண்டு நாழிகை அளவி லுள்ள நகரில் உள்ள ஆலமரத்தடிக் கசாப்புக் கடைக் காரரைப் போய்ப் பாரும்" என்ருள்.

அச்சொற்களைக் கேட்டு மேலும் வியந்த துறவி அவள் குறித்த நகருக்குச் சென்ருர். அங்கே அவரா

மொன்றின் கீழ் அருவருக்கத் தக்க நிலையில் நிணவாணி கம் செய்து கொண்டிருந்த ஒருவரிடம் போனார். அவ் வணிகர் துறவியைக் கண்டவுடன், "அந்த அம்மாள் அனுப்ப வந்தீர் போலும். எனக்கு இப்பொழுது பேச நேரமில்லை. என்னிடம் சரக்கு வாங்கப் பலர் காத்திருக் கின்றனர்; அவர்களை அனுப்பி விட்டு என் வீட்டி லுள்ள முதிர்ந்த பெற்றோர்களுக்கு உதவி செய்ய வேண்டும். பிறகு வீட்டுக் காரியங்களை முடிக்கவேண் டும். பிறகு மாலை நேரத்தில் பேச இடமுண்டு; அப்பொழுது வந்தால் பேசிக்கொள்ளலாம்" என்றனர்.

வணிகர் இருக்கும் நிலையும் அவர் செய்யும் தொழி லும் துறவிக்குச் சற்றேனும் பிடிக்கவில்லை. இவரிடம் எவ்வித அறிவை நாம் பெறக்கூடும் என்று அவர் ஐயுற்றார். என்றாலும் அவர் குறித்தபடி மாலையில் அவர் இல்லத்துக்குச் சென்றார். எழுந்து நடக்க இய லாத தம் முதிய பெற்றோர்க்கு வேண்டியவற்றை யெல்லாம் வணிகர் செய்து கொண்டிருந்தார். பல குழந்தைகள் அங்கே விளையாடிக் கொண்டிருந்தன. கொட்டிலில் சில மாடுகள் நின்றன. துறவியைக் கண்ட வுடன் வணிகர் வெளியே வந்து அவருடன் பேச லாயினர்.

வணிகர் துறவியை நோக்கி, "ஐயா! என்னுடைய குடும்பம் பெரியது. வீட்டில் செய்யக்கூடிய ஆள் யானே ஒருவனே. என் பெற்றோர்கள் வயது முதிர்ச்சியால் மிகுந்த தள்ளாமை அடைந்திருக்கிறார்கள். தலைமுறை தலைமுறையாக என் மூத்தோர் செய்து வந்த தொழி லையே நான் செய்து வருகிறேன். நான் என் கடமை களைச் சிறிதும் தவறாமல் செய்துவருகிறேன். என்னிடம்

பேராசையோ வஞ்சனையோ கிடையாது. என் கடமைகளைச் செய்து கிடைத்ததைக் கொண்டு மகிழ்ச்சியுடன் வாழ்ந்து வருகிறேன். எனக்கு விருப்பம் எதுவுமில்லை. நான் ஒருவரிடமும் சென்று ஒன்றையும் படிக்கவில்லை. என் வாழ்க்கை நெறியால் என் மனத்தில் சில உண்மைகள் தாமே புலப்பட்டுள்ளன. அவற்றை உமக்குக் கூறுவேன்" என்று சொல்லித் தாம் கண்ட உண்மைகளை அவருக்குக் கூறினர்.

அவர் அன்று சொன்னவை "வியாதகீதை" என்னும் பெயரால் வடமொழியில் இன்றும் விளங்கி வருகின்றன. ஸ்ரீ கிருஷ்ணபகவான் அருச்சுனனுக்குக் கீதையை உபதேசித்தார் என்பதைக் கேட்டிருப்பீர்களே! அந்தக் கீதையைப் படித்தபின் அறிஞர்கள் வியாதகீதையைப் படிக்கிறார்கள்.

இவ்வரலாறுகளால் கடமைகளின் பெருமைகளை நாம் உணர்கிறோம்.

### பயிற்சி

| | | | |
|---|---|---|---|
| நுட்பம் | பெருமிதம் | அடிசில் | இல்லம் |
| யோகம் | இரக்க | தவம் | முதிர்ச்சி |
| பயின்று | கணம் | உபதேசி | பேராசை |
| ஆணவம் | கொங்கணவன் | அருவருக்கத்தக்க | வஞ்சனை |

2. யோகமுறை இன்னடிசில் கசாப்புக்கடை
மூண்டெழு மெய்நடுக்கம்

3. உபதேசம், கீதை, பகவான்—இவை வடமொழிச் சொற்கள்.

### வினக்கள்

1. துறவி தாம் ஆற்றல் பெற்றதை எப்பொழுது உணர்ந்தார்?

2. சோறுபோட அவ்வம்மைக்கு ஏன் நேரம் தாழ்ந்தது?

3. கசாப்புக் கடைக்காரரைக் கண்ட துறவி வியந்தது ஏன்?

4. கசாப்புக் கடைக்காரருக்கு அறிவு எதனுல் உண்டாயிற்று?

5. அவர் இயற்றின நூலின் பெயர் யாது? அதன் பெருமை என்ன?

### இலக்கணம்

ஒரு வாக்கியத்தில் சில முக்கியமான பகுதிகள் உண்டு.

துறவி கொக்கை எரித்தார்.

இதனில் **துறவி** செயலேச் செய்தவரைக் குறிப்பது—எழுவாய்.

**எரித்தார்** செயலேக் குறிக்கும்—பயனிலே.

எதை? என்ற கேள்விக்கு விடை **கொக்கை**—இது செயப்படுபொருள்.

பின்வரும் வாக்கியங்களிலுள்ள **எழுவாய், பயனிலே செயப்படுபொருள்** இவற்றைக் காட்டு.

1. கொக்கு சருகுகளே உதிர்த்தது.
2. கடைக்காரன் மாமிசத்தை விற்ருன்.
3. கிருஷ்ணர் கீதையை உபதேசித்தார்.

### கட்டுரை

1. இப்பாடத்திற்கு வேருெரு தலேப்புக் கொடு.
2. கசாப்புக் கடைக்காரர் செய்து வருவனவற்றை உன் சொற்களால் கூறுக.

# 7. செஞ்சிக் கோட்டை




தேசிங்கு மன்னனைப் பற்றிக் கேள்விப்படாத தமிழரே இரார் என்று கூறிவிடலாம். அவன் அஞ்சா நெஞ்சு படைத்தவன்; வீரர்களுள் வீரன். தான் ஒருவனுகவே நின்று பல பகைவர்களைக் கொன்று குவிக்கும் ஆற்றல் வாய்ந்தவனுக அவன் இருந்தான். இளம்பிராயத்திலேயே அவன் டில்லி பாதுஷாவினிடமிருந்த முரட்டுக் குதிரை யொன்றை அடக்கினன். அவனுடன் போருக்கெழுந்த நவாப்பின் படைகளை அவன் சின்னுபின்ன மாக்கினன். அவன் குடிகளிடத்தில் மிகுந்த அன்புடையவனுகவும் இருந்தான்.

அவன் அரசாண்ட ஊர் செஞ்சி என்பது. அங்குள்ள மலைகளின்மீது கோட்டைகளைக் கட்டிக்கொண்டு அங்கே அவன் வாழ்ந்து வந்தான். முன்காலத்தில்

மலையரண், காட்டரண், நிலவரண், நீரரண் என்ற நால் வகை அரண்களுக்கிடையே கோட்டைகளைக் கட்டிக் கொண்டு மன்னர்கள் வாழ்ந்து வந்தார்கள். செஞ்சியும் இவ்வகை அரண்களை இயற்கையிலேயே பெற் றிருந்தது.

செஞ்சி நகரின் எழிலைப் பற்றித் தேசிங்கு ராஜன் கதை என்ற அருமையான நூல் பின்வருமாறு அழகாகப் பகருகின்றது.

"செஞ்சி நகர்ச் சீரில் சிலவற்றை எடுத்துரைப்போம்;
எஞ்சிலிலா வீதிகளும், எழில் தோரண நிரையும்,
வாழை, கமுகுகளும், வளமாகக் கட்டியதும்,
ஏழைகளைக் கூவி அன்னம் இட்டு வருவதும்,
இந்திரலோகம் போல் இருக்கும் அரண்மனைகளும்,
கந்த மின்னார்களின் நல் கற்பின் திறமைகளும்,
வேதியர்கள் கூடி வேதங்கள் படிப்பதுவும்,
நீதி தவறாமல் நிகழ்புலவர் பாடுவதும்,
பொன்னகரின் தன்மைபோல் பொருந்தி நின்றாடுவதும்,
மன்னர்சீர்க் கீர்த்திதனை வாழ்த்தி வருகிறதும்"

இவ்வாறு செழுமை வாய்ந்து விளங்கிய செஞ்சி இன்று மிக எளிய நிலையில் இருக்கின்றது. என்றாலும், பழைய பெருமைகளின் குறிகள் இன்னும் அங்கு இல்லாமற் போகவில்லை. அவற்றைப் பார்ப்பதற்காக மக்கள் அங்குப் போய் வருகின்றனர்.

விழுப்புரத்துக்கும் செங்கற்பட்டிற்கும் இடையே திண்டிவனம் என்ற ஓர் இருப்புப்பாதை வண்டி நிலையம்

உண்டு. அதனிலிருந்து பதினேழு மைல்கள் சென்றால் செஞ்சியை அடையலாம். செஞ்சி இப்பொழுது ஒரு தலைமை ஊராக இருக்கிறது. தாலூக்காவின் அதிகாரி களின் காரியாலயங்கள் அங்கே உண்டு. அங்கே



தங்கிக் கொண்டு நாம் மலைமேலுள்ள கோட்டைகளைக் காணச் சொல்லலாம்.

இராஜகிரி என்பது மிகப் பெரியகோட்டை. அதைச் சூழ்ந்துதான் தேசிங்கின் காலத்தில் படை வீரர்கள் தங்கிய இடங்கள் இருந்தன. அம்மலை மீது ஏறும் வழியில் ஆறு மாடியுள்ள ஒரு கட்டடத்தை நாம் காணலாம். அதனருகே அரசருடைய குதிரை லாய மிருந்ததாம். அவ்விடம் இப்பொழுது பாழாய்க் கிடக்

சூழ்ந்து ஒரு மண்டப மிருக்கிறது. அம் மண்டபம் நிலமட்ட அளவே உயரமுள்ளதாக விருக்கிறது. அதன் கீழே செல்லும் வழியாக நாம் சென்று குளத்தை அடையலாம்.

அடுத்தாற்போல அரசன் தானியங்களைச் சேர்த்து வைப்பதற்காகக் கட்டிய பெரிய களஞ்சியங்கள் இருக்கின்றன. அவற்றிற்கடுத்தாற்போல அரசர் உடற் பயிற்சி செய்யும் சாலையும் இருக்கிறது.

மலையின்மீது ஏறும்போது வழியே நாம் பல மண்டபங்களைக் கடந்து செல்லவேண்டும். போகும் வழியில் பிரயாணிகள் தங்கிச் செல்வதற்கு இவை பயன்படும். மலையின் உச்சியில் அரங்கநாதர் ஆலயம், மணிக்கூண்டு, அரசர் தர்பார் மண்டபம், பொக்கிஷசாலை முதலானவை இருக்கின்றன. அரசர் வாழ்ந்த காலத்தில் இவை மிக ஆடம்பரமாக அமைந்திருக்க வேண்டும்.

இன்னும் இங்கே இரண்டு மலைகள் உண்டு. ஒன்று கிருஷ்ணகிரி; மற்றது அரங்ககிரி. கிருஷ்ணகிரி மிகவும் செங்குத்தானது. இதன் உச்சியில் சில ஆலயங்களும், களஞ்சியங்களும், மண்டபங்களுமுண்டு. அரங்ககிரியில் அரங்கநாதர் ஆலயம் இருக்கிறது. பள்ளிகொண்டிருக்கும் அப் பெருமான் முகத்தைத் திருப்பிக் கொண்ட நிலையில் அங்குக் காட்சியளிக்கின்றார். தேசிங்கு நவாப்புடன் போர் புரியுமுன் அக் கடவுள் முன் சென்று விடை வேண்டினராம். அவர் "இன்று வேண்டாம்; நாளைப் போகலாம்" என்று குறிப்பித்தனராம். அச்சொல்லை வீரன் கேளாமல் அன்றே போருக்குப் புறப்பட விடை கேட்டபோது

அவர் மனங்கசந்து முகத்தைத் திருப்பிக் கொண்டனராம்'' இவ்வாறு அங்குள்ளவர்கள் கதை கூறுகிறார்கள்.

இவ்வாறு நம் பண்டை வரலாறுகளைக் காட்டும் அறிகுறிகள் நாடெங்கும் மலிந்து கிடக்கின்றன. முடிந்த வரையில் நாம் அவற்றைக் காண்பது நலமாகும்.

### பயிற்சி:

**சொற்கள்**

| | | | | |
|---|---|---|---|---|
| **அரண்** | **எஞ்சல்** | **கந்தம்** | **வேதியர்** | **படைவீரர்** |
| **கிரி** | **இயற்கை** | **தோரணம்** | **மின்னூர்** | **வேதம்** |
| **சாயம்** | **களஞ்சியம்** | **எழில்** | **நிரை** | **கற்பு** |
| **கீர்த்தி** | **பாழ்** | **மலிந்து** | **நிலையம்** | **தானியம்** |

**அஞ்சாநெஞ்சு பொன்னகர் உடற்பயிற்சி பொக்கிஷசாலை சின்னபின்னம் காரியாலயம் மணிக்கூண்டு.**

பின்வரும் சொற்களைப் புணர்த்தி எழுது :—

அந்த + கிளி. இந்த + சட்டி. எந்த + புத்தகம்.

அவனை + பார். பாக்கை + கடி. புத்தகத்தை + படி.

**வினாக்கள்**

1. தேசிங்கு மன்னனின் இளமையைப்பற்றி நீ அறிவன யாவை ?

2. செஞ்சிநகர் மக்கள் எவ்வாறு வாழ்ந்து வந்தனர்?

3. மூவகை அரண்கள் யாவை ?

4. இராஜகிரிக் கோட்டையில் நீ காணக்கூடியவை யாவை ?

5. அரங்கநாதர் முகத்தைத் திருப்பிக் கொண்டது ஏன் ?

## இலக்கணம்

செயப்படுபொருளை எழுவாயாக மாற்றலாம்.

(உ-ம்) தேசிங்கு குதிரையை அடக்கினன்.
குதிரை தேசிங்கால் அடக்கப்பட்டது.

மேலே காட்டிய பின்வரும் வாக்கியங்களை மாற்றி அமை.

1. தேசிங்கு நவாப்பின் படைகளைச் சின்னபின்ன மாக்கினன்.

2. உலகத்தார் செஞ்சியின் கீர்த்தியை வாழ்த்துகிறார்கள்.

3. அங்கே நாம் பல கட்டடங்களைக் காணலாம்.

## கட்டுரை

உன் ஊரிலிருந்து செஞ்சிக்குப் போகும் வழி யாது? விளக்கிக் கூறு.

# 8. மன்னரும் மாமுனிவரும்

திருச்சிராப்பள்ளியிலே விஜயரங்க சொக்கநாதர் என்ற நாயக்கமன்னர் ஆட்சிபுரிந்து வந்த காலத்திலே அவரிடம் தாயுமானவர் என்ற பெயருள்ள பெரியார் அமைச்சராய் அமர்ந்திருந்தார். தாயுமானவர் தமிழறிவும் வடமொழியறிவும் நிரம்பவும் பெற்றுக் கடவுளறிவு கைவந்தவராய்த் திகழ்ந்தார். உலக வாழ்க்கையில் பற்றற்றவராய் அவர் இருந்தும் அரசியல் காரியங்களில் அவர் ஒரு சிறிதும் வழுவினதில்லை. அவர், 'எல்லாம் இறைவன் செயலே' என்றும், எல்லாம் கடவுள் உருவமே, என்றும் கருதும் மனப்பான்மை பெற்றிருந்தார், அவருடைய குணநலன்களையும் அரசியல் திறமைகளையும் அரசன் உணர்ந்து அவரிடம் அளவிலா அன்பும் பக்தியும் கொண்டிருந்தான்.

ஒரு முறை அரசரிடம் காஷ்மீரத்திலிருந்து அருமையான சால்வையொன்று வந்தது. அதன் அருமை வேலைப்பாடுகளைக் கண்டு அரசன் வியந்தான். அதனை அணியத்தக்கவர் தம் அமைச்சரே என்று அவன் கருதி அதனை அவருக்குக் கொடுத்தான். அச்சால்வையுடன் அவர் அரச சபையில் புகும்போது எல்லாருடைய கண்களும் அதனிடமே விழுந்தன.

சில நாட்கள் கழிந்தன. கூதிர்காலம் வந்தது. சிறு துளியும் பனியும் நாட்டைக் குளிரச் செய்தன. விலங்குகளும் பறவைகளும் தத்தம் இடங்களிலேயே ஒடுங்கிக் கிடந்தன. விடிந்து வெகுநேரம் ஆகியும் மக்கள் வெளியே வரவில்லை.

ஒரு நாள் தாயுமானவர் வயற்புறங்களுக்குச் சென்றிருந்தார். குளிர்காலமாகையால் அவர் அரசன் கொடுத்த சால்வையைத் தம்மீது போர்த்திருந்தார். அங்கே சாலையோரத்தில் குளிரால் நடுங்கிக்கொண்டு ஒரு கிழவி உட்கார்ந்திருந்தாள். அவள் உடலிலிருந்த புடவை கிழிந்தும் நைந்தும் காணப்பட்டது. .அவள் குளிர் தாங்கமுடியாமல் தன் கைகளால் உடலைப் பொத்திக்கொண்டு பற்கள் கிடுகிடுக்க உட்கார்ந்திருந்தாள். அமைச்சர் வருவதை அவள் கண்டும் அவளால் எழுந்து நிற்கமுடியவில்லை.



தாயுமானவர் அவளைக் கண்டார். அவர் மனம் உருகிற்று. அவர் உடனே தம்மேலிருந்த காஷ்மீர்ப் போர்வையை எடுத்து அக்கிழவியின்மீது போர்த்தி, அவள் கைகளைப் பிடித்துத் தூக்கி விட்டு மெதுவாக அவளைத் தன் வீட்டுக்குச் செல்லுமாறு பணித்தார். அவருடைய அரிய செயலைக் கண்டு அம்முதியவள்

நாத்தழதழக்கக் கண்களில் நீர் துளிக்க அவருக்கு நன்றியும் ஆசியும் கூறி ஏகினுள்.

இச் செய்தி எப்படியோ மன்னன் செவிகளுக்கு எட்டிற்று. அமைச்சர் தன்னை அவமதித்ததாகவே அவன் கருதினுன். மறுநாள் அவர் அவைக்கு வந்ததும் அவன் அவரை வணங்கி, "ஐயனே, நான் தங்களுக்கு அருமையாக வழங்கிய சால்வை எங்கே?" என்று வினவினுன்.

அவர், "அகிலாண்டேசுவரிக்குக் கொடுத்துவிட்டேன்" என்ருர். அகிலாண்டேசுவரி அவ்வூரில் கோயில் கொண்டருளிய அம்பிகையின் திருநாமம்.

உண்மையை உணரமாட்டாத மன்னன், "அகிலாண்டேசுவரிக்கா? பிச்சைக்காரக் கிழவிக்கா?" என்று அதட்டிக் கேட்டான்.

அதற்குத் தாயுமானவர், "மன்ன, தங்கள் கண்களுக்குக் கிழவியாகவும் குமரியாகவும் தோன்றலாம். என் கண்களுக்கு எல்லாம் தெய்வமயமாகவே தோன்றுகின்றன. நான் என்ன செய்வேன்! அவள் குளிர் தாங்கமாட்டாமல் தவிக்கும்போது எனக்குப் போர்வை ஏன்? அன்றியும் மன்ன, தாங்கள் அளித்த பெருவிலைப் போர்வைக்கும் மிக எளிய ஆடைக்கும் எனக்குச் சிறிதும் வேற்றுமையில்லை. தங்கள் அன்புடைமையை மறுக்கலாகாதென்றே அதனை ஏற்றுக்கொண்டேனேயன்றி அதனிடம் நான் வைத்த பெருமைக்காகவன்று" என்ருர்.

இச் சொற்களைக் கேட்ட அரசன் தலை குனிந்தான். தாயுமானவரின் உள்ளப் பெருமையைக் கண்டு அவரை

வியந்தான். தான் அவருக்குச் செய்த குற்றத்துக்காக அவருடைய மன்னிப்பையும் கேட்டான்.

**பயிற்சி:**

**சொற்கள்**

**அமைச்சர் அரசியல் போர்த்து நிரம்பவும்**
**திறமை குமரி கைவந்தவர் வேலைப்பாடு**
**மன்னிப்பு இறைவன் அணிய**
**கடவுளறிவு மனப்பான்மை கூதிர்க்காலம்**
**உலகவாழ்க்கை குணநலன் அகிலாண்டேசுவரி**

பின் வரும் சொற்களைப் புணர்த்திக் காட்டு:—

கண்களுக்கு + கிழவியாகவும் : அவருக்கு + செய்த. கூதிர் + காலம். அவனை + கண்டார்.

**வினாக்கள்**

1. தாயுமானவர் மன இயல்புகளைப் பற்றி நீ அறிவன யாவை ?

2. கூதிர்கால நிலைமை எத்தகையது ?

3. தாயுமானவர் கிழவியை யாராகக் கண்டார் ?

**இலக்கணம்**

பின்வரும் வாக்கியங்களிலுள்ள எழுவாயைச் செயப்படுபொருள்களாக மாற்று:—

1. சால்வை அரசனால் வாங்கப்பட்டது.
2. கடவுள் தாயுமானவரால் எங்கும் காணப்பட்டார்.
3. அமைச்சர் அரசனால் கோபிக்கப்பட்டார்.

**கட்டுரை**

புத்தக சாலையில் தாயுமானவரைப் பற்றி ஏதேனும் புத்தகம் இருக்கிறதா என்று பார்த்து அதனைப்படி.

# 9. விதைகள் பரவும் விதம்

மனிதர்க்கு இருக்கும் உணர்ச்சிகளைப் போலவே தாவரங்களுக்கும் உண்டு. மனிதர்கள் தம் குழந்தைகளைப் பாதுகாக்க எவ்வளவு கவலை கொள்கிறார்களோ, அவ்வளவு கவலையைச் செடி கொடிகளும் மரங்களும் தம் குழந்தைகளைக் காக்கக் கொள்கின்றன.

செடிக்கு அதன் விதையே குழந்தை. அது வளர்ந்து தன் முறையில் புதிய விதைகளை உண்டாக்குகிறது. இவ்வாறு செடி தன் இனத்தை வளர்க்கிறது. விதையின் பாதுகாப்புக்குத் தோலும் ஓடும் உள்ளன. அவற்றினுள் விதை உயிருடன் நீண்ட நாள் பிழைத்திருக்கும்; பிறகு அது நிலம், நீர், காற்று முதலிய உதவிகள் அமைந்தவுடன் செடியாக முளைத்து வளரும்.

நெற்றுக்களிலும் நன்றாகப் பழுத்த பழங்களிலும் உள்ள விதைகளே நன்றாக விளைந்த விதைகள். அவரை, வெண்டை முதலியவற்றின் நெற்றுக்களில் விதைகள் மட்டுமே இருக்கும்; அவற்றை ஆட்டினால் சலசல வென்று ஒலிப்பதை நீங்கள் கேட்டிருப்பீர்கள். மா, கொய்யா, பலா, நாரத்தை முதலிய பழங்களில் சாறும் சதையும் விதைகளைச் சூழ்ந்திருப்பதையும் பார்த்திருப்பீர்கள்.

மனிதர்களும் விலங்குகளும் பறவைகளும் பழங்களைத் தின்கின்றன. அவ்வாறு பழவிதைகள் பலவிடங்களிற் போய்ச் சேருகின்றன. பறவைகள் எச்சமிடும்

இடங்களில் செடிகள் வளர்வதற்கு இதுதான் காரணம். இவ்வாறு பழங்களை யாரும் விரும்பி நாடுவதற்காகவே அதற்கு இரசமும் சதையும் அமைந்திருக்கின்றன.

சாரில்லாத காய்கள் முற்றின பிறகு வெடிக்கும். அப்பொழுது விதைகள் சிதறும், அப்படிச் சிதறுவதால் விதைகள் செடியின் அடியிலேயே விழாமல் அகன்று போம். அப்படிச் செய்வதால் குழந்தைச் செடிகள் ஒரே இடத்தில் பிறந்து வளர இடமில்லாமல் தவிக்கமாட்டா.



சில சமயங்களில் பஞ்சு போன்ற பொருள்கள் பிள்ளைகள் எட்டிப் பிடிக்கும் உயரத்தில் பறப்பதை நீங்கள் பார்த்திருக்கிறீர்களா? அவற்றைப் பிடித்துப் பார்த்தால் அவை ஒவ்வொன்றின் அடியிலும் ஒவ்வொரு விதை இருப்பதாகக் காண்பீர்கள். எருக்கஞ்செடி விதைகள் இவ்வாறு பறக்கும்.

புற்கள் உயரமாக வளர்ந்திருக்கும் இடங்களின் வழியாக நடந்து சென்றால் நம் உடைகளில் முள் போன்ற பொருள்கள் ஒட்டிக்கொள்வதைப் பார்த்-

திருக்கிறீர்களா? இவை அங்கு மேயும் ஆடு மாடு களின் உடல்களில் ஒட்டிக்கொள்ளும். இவைகளும் விதைப் பொதிகளே. இவ்வாறு புற் பூண்டுகள் விலங்குகளையும் மனிதர்களையும் வாகனங்களாகக் கொண்டு தம் குழந்தைகளை வெளியே சென்று வளரச் செய்கின்றன.

ஆமணக்கு விதைகளை நீங்கள் பார்த்திருக்கிறீர் களா? அவை பார்வைக்கு வண்டுகள் போலத் தோன் றும். அவற்றைப் பறவைகள் தம் தின்பண்டங்க ளெனக் கருதி எடுத்துப்போய், பிறகு தாம் ஏமாந் ததைக் கண்டு அவற்றை அங்கே போடும்.

இவ்வாறு தாவரங்கள் தங்கள் விதைகளை மிகுந்த சாமர்த்தியத்துடன் நாலாபக்கங்களிலும் பரப்பு கின்றன.

**பயிற்சி:**

**சொற்கள்**

| | | | | |
|---|---|---|---|---|
| **1. உணர்ச்சி** | **இனம்** | **சாறு** | **முற்று** | **வாகனம்** |
| **தாவரம்** | **தோல்** | **எச்சமிடும்** | **அகன்று** | **ஏமாந்தது** |
| **பாதுகாக்க** | **ஒடு** | **இரசம்** | **எட்டி** | **சாமர்த்தியம்** |
| **முறை** | **நெற்று** | **சதை** | **பொதி** | **காரணம்** |

**எவ்வளவு... அவ்வளவு எட்டிப்பிடித்தல். நாலாபக்கங்களிலும்**

சில சொற்கள் பெயர்களாகவும் வினைகளாகவும் வழங்கும். அவற்றின் பொருள் வேறுபாடுகளைக் காண வேண்டும். உ-ம் பரப்பு.

இந்த அறையின் நிலப்பரப்பு 200 சதுர அடி.

அரிசியைப் பலகையில் பரப்பு.

பின்வரும் சொற்களைப் பெயராகவும் வினையாகவும் உபயோகித்துக் காட்டு.

அகல், அடி, அடை, அணி, அணை.

## வினாக்கள்

1. விதைகளுக்குத் தோலும் ஓடும் எப்படிப் பயன் படுகின்றன ?

2. விதை செடியாக வளர உதவுவன யாவை ?

3. சாறும் சதையும் உள்ள பழங்கள் சிலவற்றின் பெயர்களைச் சொல்லு.

4. அவற்றால் பயன் என்ன ?

5. முற்றிவெடிக்கும் காய்கள் சில சொல்லு.

6. சில விதைகள் பறக்கின்றன ? உதாரணம் கொடு.

7. பிராணிகளை வாகனமாகக் கொண்டு பரவும் விதைகள் யாவை ?

8. காட்டாமணக்கு பறவைகளை எப்படி ஏமாற்று கிறது ?

## இலக்கணம்

மாடு **ஓடிற்று.**

இடையன் மாட்டை **ஓட்டினான்.**

இவை இரண்டிற்கும் என்ன வேற்றுமை ?

ஓடிற்று என்பது தன்வினை.

ஓட்டினான் என்பது பிறவினை.

பின்வரும் பிறவினைகளை வாக்கியங்களில் வைத்துக் காட்டு.

பாய்ச்சு : உருட்டு. போக்கு. விளக்கு.

## கட்டுரை

ஒரு புல் தன் விதைகளை நோக்கி, "நீங்கள் தந்திரமாக வேறிடம் சென்று பிழையுங்கள்" என்று சொல்வது போலச் சொல்லு.

---

# 10. ஆறு

கல்லும் மலையும் குதித்து வந்தேன்—பெருங்
காடும் செடியும் கடந்து வந்தேன்.
எல்லை விரிந்த சமவெளி எங்கும் நான்
இறங்கித் தவழ்ந்து தவழ்ந்து வந்தேன்.

காயும் நிலத்தழல் ஆற்றி வந்தேன்—அதில்
கண்குளிரப் பயிர்கண்டு வந்தேன்.
ஆயும் மலர்ப்பொழில் செய்து வந்தேன்—அங்கென்
ஆசை தீர விளையாடி வந்தேன்.

ஆயிரம் காலால் நடந்து வந்தேன்—நன்செய்
அத்தனையும் சுற்றிப் பார்த்து வந்தேன்.
நேயமுறப் புன்செய்க் காட்டினிலும்—அங்கங்கு
நீரை இறைத்து நெடுக வந்தேன்.

மாங்கனி தேங்கனி வாரி வந்தேன்—நல்ல
வாச மலர்களும் அள்ளி வந்தேன்.
தீங்கரும் பாயிரம் தள்ளி வந்தேன்—மிகத்
தேனும் தினையுமே சேர்த்து வந்தேன்.

அல்லும் பகலும் அலைந்து வந்தேன்—எங்கள்
ஆழி இறைவனைக் காண வந்தேன்.
நில்லும் எனக்கினி நேரமில்லை—இன்னும்
நீண்ட வழி போக வேண்டும் அம்மா!

—தேசிக விநாயகம் பிள்ளை.

### குறிப்புரை

அழல் - நெருப்பு. பொழில் - சோலை. கால் - வாய்க்கால். தீம் - இனிய, அல் - இரவு. ஆழி - கடல்.

### கட்டுரை

1. மலை, காடு, பாலை, சமவெளி, கடற்கரை என்று நான்கு நிலங்களின் வழியாக ஆறு, ஓடுகிறது என்பது இங்கு எவ்வாறு சொல்லப்பட்டிருக்கிறது ?

2. நன்செய், புன்செய் நிலங்களுக்கு எவ்வாறு பயன்பட்டது ?

3. ஆறு சுமந்து வந்தவையாவை ?

4. ஆழி இறைவன் என்பது எதனைக் குறித்தது ?

# 11. கலிங்கப் போர்

பதினோராம் நூற்றாண்டில் சோழ வேந்தனான குலோத்துங்கன் கங்கை கொண்ட சோழபுரத்திலிருந்து கொண்டு அரசு புரிந்து வந்தான். இவனுக்கு அபயன் என்ற வேறொரு பெயரும் உண்டு. அவன் பல நாடுகளையும் வென்று தன் இராஜ்யத்தைப் பெருக்கிக் கொண்டான்.

ஒரு முறை அரசன் காஞ்சியம்பதியை யடைந்து அங்கேயுள்ள சித்திர மண்டபம் என்ற அரண்மனையில் கொலு வீற்றிருந்தான். அப்பொழுது பல சிற்றரசர்கள் அவனைக் கண்டு அடி பணிந்து அவனுக்குரிய கப்பப் பொருள்களைக் கட்டினர். அரசருடைய காரியஸ்தர்கள் அத்தொகைகளைக் குறித்துக் கொண்டு அரசருக்குக் கப்பங்கட்டிய சிற்றரசர்களின் பெயர்களை அவ்வப் பொழுது அறிவித்து வந்தனர். முடிவில் அரசன், "கப்பங்கட்டாதவர் எவரேனும் உண்டோ?" என்று வினவினான். அருகிலிருந்தவர், "வடகலிங்க மன்னன் இரண்டு முறைகளாகக் கட்டவில்லை" என்று கூறினர்.

அச்சொற்களைக் கேட்ட மன்னன் கோபக்குறி சிறிதும் காட்டாமல் தன் படைத் தலைவரை நோக்கி, "நம் யானைப் படைகளுடன் அந்நாட்டின் மீது படையெடுத்து அவனையும் கொணர்மின்" என்று கட்டளையிட்டான்; அங்கே கருணாகரத் தொண்டைமான் என்ற படைத்தலைவன் இருந்தான். அவன் அரசனை வணங்கித் தான் போய் கலிங்கத்தை வென்று விடுவதாகக் கூறினான்.

தொண்டைமான் மிகச் சிறந்த வீரன்; சோழர் படைத்தலைவர்களுள் அவனே சிறந்தவன். அவன்

நால்வகைப் படைகளுடன் எழுந்தான். அவன் பகைவர் நாட்டினுள் புகுந்தவுடன் அந்நாட்டு ஊர்களையெல்லாம் சூறையாடினன். மக்கள் அவனுக்கு முன் நிற்கமாட்டாமல் ஓடோடிச் சென்று தம் மன்னனான அனந்த



பதுமன் என்றவனிடம் முறையிட்டார்கள். அவன் உடனே வெகுண்டெழுந்தான். கைகளோடு கைகளைப் புடைத்தான். சோழன் படைகளை ஒரு நொடியில் தொலைத்து விடுவதாக வீரம் பேசினன்.

அவனுடைய அமைச்சர்கள் எவ்வளவு சொல்லியும் அவன் கேட்கவில்லை. கலிங்கர் படையும் சோழர் படையும் கை கலந்தன. கருணாகரன் யானை மீதிருந்து கொண்டு கடும்போர் புரிந்தான். கலிங்கர் முறியடிக்கப் பட்டனர். தோற்றவர்கள் தமிழர் படைக்குத் தப்ப வெண்ணிப் பல்வேறு வேடங்களைப் புனைந்து கொண்டு ஓட்டமெடுத்தனர். கலிங்க மன்னன் ஓடி யொளித்துக்

கொண்டான். தொண்டைமான் ஆங்குள்ள செல்வங்கள் பலவற்றையும் திரட்டிக்கொண்டு தன் மன்னன் முன் பணிந்தான்.

இவ்வரலாற்றை ஓர் அழகிய நூலாக ஜயங்கொண்டார் என்ற புலவர் பாடியுள்ளார். அதற்குக் கலிங்கத்துப் பரணி என்பது பெயர். தமிழிலுள்ள வீரச் சுவை நூல்களுள் இது மிகச் சிறந்தது.

**பயிற்சி :**

| | | | |
|---|---|---|---|
| 1. | கப்பம் | நொடி | முறியடிக்கப்படுதல் |
| | தோற்றம் | வேடம் | பரணி |
| 2. | சித்திரமண்டபம் | சிற்றரசர் | வீரச்சுவை |
| | கொலுவீற்றிருத்தல் | பல்வேறு | |

3. பின்வரும் சொற்களைக் கூட்டி எழுது.

வேறு + ஒரு சிறுமை + அரசர்கள்.

அ + நாடு. வெகுண்டு + எழுந்தான்.

**வினாக்கள்**

1. இவ்வரலாறு எந்த மன்னன் காலத்தில் நிகழ்ந்தது ?
2. கருணாகரத் தொண்டைமான் யார் ?
3. கலிங்கம் எங்குள்ளது ? காஞ்சியிலிருந்து அதற்குப் போகும் வழி யாது ? படத்தைப் பார்த்துக் கூறுக.
4. கலிங்கப் போர் எவ்வாறு முடிந்தது ?
5. கலிங்கத்துப் பரணியைப் பாடியவர் யார் ?

**இலக்கணம்**

பின்வரும் வாக்கியங்களில் கோடிட்ட பெயர்ச் சொற்களை வினை முற்றுக்களாக மாற்றி எழுதுக.

(1) மாட்டின் **தீனி** புல் ஆகும்.
(2) தமிழரின் **உணவு** அரிசி ஆகும்.
(3) திருமாலின் **படுக்கை** பாம்பாகும்.
(4) யானையின் **நடை** வேகமானது.
(5) பிராணிக் **கொலை** கொடியது.
(6) கடலின் **பரப்பு** எல்லையற்றது.

**கட்டுரை**

பத்திரிகைகளிலிருந்து நீ படித்திருக்கும் ஏதேனும் ஒரு போரைப்பற்றி நீ அறிந்ததைச் சொல்லு.

## 12. பெரிய மூடன் யாவன்?

ஒரு நாள் இரு நண்பர்கள் கடைத் தெருவின் வழியே நடந்து சென்று கொண்டிருந்தனர். அவர்களுக் கெதிரே ஒரு கிழவி வந்து கொண்டிருந்தாள். அந் நாட்டின் வழக்கத்தின்படி இருவர் சாலையில் எதிர்ப்பட நேர்ந்தால் ஒருவருக்கொருவர் 'வணக்கம்' என்று சொல்லிக்கொள்ள வேண்டும். கிழவி முதலில் அவர்களை நோக்கியதால் அவர்களுக்கு வணக்கம் கூறினள். அவர் களும் மறு வணக்கம் கூறி அகன்றனர்.

ஆனல் சிறிது தூரம்செல்வதற்குள் அவர்களுக்கோர் ஐயம் உண்டாயிற்று. ஒருவன் பிறனை நோக்கி, "அக் கிழவி என்னைக் குறித்தே வணக்கம் கூறினள் என் றெண்ணுகிறேன்" என்ருன். அதற்கு மற்றவன், "அன்று; அவள் எனக்கே வணக்கம் கூறினள்" என்ருன். அவ்விருவர்களும் அக்கிழவியையே கேட்டு அறிந்து கொள்ளலா மென்றெண்ணினர்கள்.

அவ்வண்ணமே அவர்கள் திரும்பிச் சென்று, அம் முதியாளைக் கண்டு வினவினர். அவள் அவர்களுடைய அறிவின்மையைக் கண்டு மனத்துள் நகைத்து, "உங்களுள் பெரு மூடனை வணங்கினேன்" என்ருள். "அத்தகையவன் யாவன்?" என்று அவர்கள் கேட்க, "நீங்கள் செய்த மூடச் செயல்களுள் சிறந்தவற்றைக் கூறுங்கள். யார் பெரிய மூடர் என்று நான் அறிந்து சொல்கிறேன்" என்ருள்.

மூவரும் ஒரு மரத்தடியில் உட்கார்ந்து கொண்டனர். முதல் மூடன் தன் கதையைப் பின்வருமாறு சொன்னான்.

"ஒரு நாள் நான் விலாப் புடைக்க உண்டு ஊர்ப் புறத்திலுள்ள குளக்கரையில் ஒரு மரநிழலில் படுத்து உறங்கினேன்; நன்றாய் அயர்ந்துவிட்டேன். சற்றுப் புரண்டு படுத்த போது என் தலைப்பாகை நெகிழ்ந்து குளத்தில் விழுந்துவிட்டது. நான் எழுந்து பார்ப்பதற்குள் அது தண்ணீரில் முழுகி விட்டது.



எங்களுள் வீட்டில் ஏதேனும் இழவு நேர்ந்தால் தான் தலைப்பாகை இல்லாமலிருக்கலாம். ஆகவே நான் அதனை இழந்த நிலையிலிருக்க விரும்பாமல் வேகமாக வீடு நோக்கித் திரும்பினேன். என்னைத் தூரத்தில் கண்ட என் மனைவி என்னைச் சேர்ந்தவர்

யாரோ இறந்து விட்டாரென்றெண்ணி ஓவென்றலறலானுள். அவள் அழுவதைக் கண்டு நானும் காரணத்தை ஆராயாமல் உரக்க அழத் தொடங்கினேன். இவ்வாறு நாங்கள் அழுவதைக் கண்டு அக்கம் பக்கங்களில் உள்ளவர் எல்லோரும் கூடி விட்டனர். அவர்கள் எங்களை விளித்துக் கேட்டபோது, நான் நடந்ததைக் கூறினேன். அவர்கள் நகைத்து என்னைப் போன்ற மூடன் இல்லை என்ருர்கள். இதுவே என் கதை'' என்ருன்.

மற்றவன் தன் கதையைக் கூறத் தொடங்கினுன். அவன்,

“தாயே! என் கதை என் திருமணத்தை ஒட்டி நிகழ்ந்தது. என் நண்பர்கள், நான் பெண் வீட்டிலிருக்கும்போது அதிகமாகப் பேசக் கூடாதென்றும் அதிகமாக உண்ணக் கூடாதென்றும் எச்சரித்திருந்தார்கள். நான் அவ்வண்ணமே அடக்கமாக நடக்க எண்ணினேன். நான் ஒருவரோடும் அதிகமாகப் பேசுவதில்லை. இலையில் உட்கார்ந்தால் இரண்டொரு பிடி உணவுக்கு மேல் உண்பதில்லை. எனக்குப் பசி அதிகமாயிருந்தும் மரியாதையாகச் சிறிதளவே உண்டு வந்தேன். என் உடல் இளைத்துவிட்டது. அதனைக் கண்ட என் மனைவி உணவு அதிகம் உண்ணுமைக்குக் காரணம் என்னவென்று பலமுறை வினவினுள். நான் 'வயிற்றுவலி' என்று பொய் கூறினேன்.

இப்படிச் சில நாட்கள் கழிந்தன. ஓரிரவு எனக்குப் பசி முற்றி விட்டது. எல்லோரும் உறங்குகிற நேரம் பார்த்து நான் மெல்ல அடுப்பங்கரைக்குச் சென்று அங்கு ஏதேனும் தின்பண்டங்கள் உளவோ என்ரு

ராய்ந்தேன். ஒரு பாத்திரத்தில் லட்டுகள் இருந்தன. அவற்றில் இரண்டினை எடுத்து வாயில் போட்டுக் கொண்டேன். நான் இருட்டில் நடமாடியதால் என் கைகள் பட்டுச் சில ஏனங்கள் கீழே விழுந்தன. அந்த ஓசையைக் கேட்டு வீட்டிலுள்ளார் யாவரும் விழித்துக் கொண்டு ஓடிவந்தனர். நான் மெதுவாக நழுவி என் படுக்கையறையுள் நுழைந்தேன்.

என் வாயில் உள்ளவற்றை எனக்கு விழுங்க நேரமில்லை. என் மனைவி என் தாடைகள் பருத்திருப்பதை நோக்கி அலறினள். வீட்டிலுள்ளவர்கள் எல்லோரும் அங்கே வந்தனர். அவர்கள் வயிற்று வலியால் என் முகம் வீங்கி விட்டதென்று எண்ணினர்கள். ஒருவர் ஓடிப்போய் ஓர் இரண வைத்தியரை அழைத்துவந்தார். அவர் என் முகத்தைப் பார்த்து, 'இப்பொழுதே இவர் கன்னத்தில் ஓரிடத்தில் கிழித்துக் கெட்ட குருதியை வெளிப்படுத்தினலன்றி இவர் பிழைக்க மாட்டார் என்று கூறிக் கத்தியைத் தீட்டினர். நான் அச்சத்தால் வாயைத் திறந்தேன். இரண்டு லட்டுகளும் தொப்பென்று கீழே விழுந்தன. அப்பொழுது அவர்கள் நகைத்ததையும் பேசியதையும் என்னவென்று கூறுவேன்! எல்லோரும் என்னை முழு மூடன் என்றார்கள். நானும் அப்படியேதான் எண்ணுகிறேன்'' என்றான்.

அக்கதையைக் கேட்டு, 'நீயே பெரிய மூடன்! உனக்கே என் வணக்கம் உரியது' என்று கிழவி சொல்லிப் போனள். அவர்களும் தங்கள் ஐயம் நீங்கி மகிழ்ச்சியுடன் தம் வழியே ஏகினர்கள்.

## பயிற்சி :

1. எதிர்ப்பட புரண்டு எச்சரித்து அலறினேன் உரியது வணக்கம் தலைப்பாகை இளைத்து வீங்கி ஏகினர் ஐயம் இழவு முற்றிவிட்டது கன்னம் முதியாள் விளித்து ஏனம் தீட்டினர்
2. அறிவின்மை அக்கம்பக்கம் திருமணம் பலமுறைபசிமுற்றி விட்டது வயிற்றுவலி இரண வைத்தியர் முழு மூடன்

3. பின்வரும் சொற்களின் பொருளைக் காட்ட வேறு சொற்கள் கூறு.

கிழவி, தின்பண்டம், எண்ணுகிறேன், ஐயம்.

## வினாக்கள்

1. மூடர்களுக்குத் தோன்றிய ஐயம் என்ன ?
2. முதல் மூடன் தலைப்பாகையை எப்படி இழந்தான்.
3. அவன் மனைவி என்ன எண்ணி அழுதனள் ?
4. முதல் மூடனின் மூடத்தனம் எங்கே வெளிப் படுகிறது ?
5. இரண்டாம் மூடன் தன் மாமன் வீட்டில் எவ் வாறு நடந்துகொண்டான் ?
6. அவன் கன்னம் பருத்திருந்ததற்குக் காரணம் என்ன ?
7. அவனைக்கண்டு வீட்டார் நகைத்ததுஎப்போது?
8. கிழவியின் தீர்ப்பு சரியானதா ? எப்படி ?
9. இக்கதையின் சுவை யாது ?

## இலக்கணம்

கீழே சில குணப்பெயர்களைத் தந்திருக்கிறோம். அவற் றைப் பெயரெச்சமாக வைத்து வாக்கியங்களை அமைக்க

| | | |
|---|---|---|
| நன்மை | பெருமை | பொய்மை |
| கருமை | சிறுமை | மென்மை |
| முதுமை | உண்மை | வெண்மை |

## கட்டுரை

'நிழல் கண்ட இடத்தில் உறங்கு,நீர்கண்ட இடத்தில் உண்-அந்நியர் வீட்டில் கட்டின பசுவைப்போல் இரு,' என்று ஒரு மூடனுக்கு அவன் தாய் உபதேசித்திருந்தாள். அவன் ஒருநாள் மனைவியின் வீட்டுக்குப் போனன். இந்த உபதேசத்தை உள்ளபடி நடத்திக் காட்டினன்.

இக்குறிப்புக்களைகொண்டு ஒரு நகைப்புக் கதைகட்டு.

# 13. விறகு வெட்டி பாடியது

தென் மதுராபுரியிலே வரகுண பாண்டியன் செங்கோல் செலுத்தி வந்தான். அவன் அவையிலே பல கலைகளிலும் நிரம்பிய அறிவினர் பலர் குழுமியிருந்தனர். மன்னன் அருங்கலை விநோதன் ஆகையால் அவன் அவர்களைத் தன் கண்ணும் கருத்துமாகப் போற்றி வந்தான். அவனால் போற்றப்பட்ட கலைஞர்கள் பாணபத்திரர் என்பார் ஒருவர். அவர் இசைக்கலை வல்லுனராயிருந்ததோடு சிவபிரான்மீது அளவிலா அன்பும் கொண்டுவந்தார்.

ஒருநாள் வடநாட்டிலிருந்து ஏமநாதன் என்ற இசைப் புலவனொருவன் மதுரை நகரை அடைந்து அரசனைக் கண்டு தன் இசைத் திறமைகளை யெல்லாம் காட்டினான். அரசன் அவனுடைய அறிவை மெச்சி அவனுக்குப் பலவகைச் சிறப்புக்களையும் செய்தனன். அவற்றால் இறுமாப்புண்ட வடநாட்டுக் கலைஞன் தன் இசையறிவுக்கு மிஞ்சியது எதுவுமில்லை என்றும், தன்னை வெல்பவர் உலகத்தில் வேறெங்குமிலரென்றும் நாப்பறை அடித்துக் கொண்டிருந்தான். அவனுடைய சீடர்கள் நகரெங்கும் திரிந்து தம் ஆசானின் திறத்தை அளவு கெட மிகுத்துக் கூறிக்கொண்டிருந்தனர்.

மன்னன் இவற்றைக் கேட்டுப் பொறாதவனாய்த் தன் அவைப் புலவனான பாணபத்திரனை விளித்து, "ஐயா, அந்நியன் ஒருவன் இவ்வாறு பிதற்றுவதை நான் பொறேன்; நாளை நீர் நம் அவையில் ஏமநாதன் முன்பு நம் தமிழிசையின் பெருமையை நாட்ட வேண்டும்" என்று பணித்தான்.

பாணபத்திரருக்கு இஃதொரு சோதனையாயிற்று. ஏமநாதனின் இனிய பாடலைக் கேட்டு அவரும் அவனை வியந்து, ' இவன் முன் நம் புலமை எங்கே' என்று ஏங்கியிருந்தார். அரசன் பணியைக் கேட்டு அவர் மனம் புழுங்கினார். அரசனின் ஆணைக்கு யாதும் மறுக்க இயலாமல், " ஐய, தங்கள் அன்பும் சோமநாதன் கருணையும் கொண்டு நாளைப் பாடுவேன்" என்று கூறி வெளியேறினார்.



நேரே அவர் சோமசுந்தரக் கடவுள் கோயில் கொண்டு எழுந்தருளியுள்ள ஆலயம் சென்று அவர் திருமுன் வணங்கி, " தேவரீரே! எனக்குத் துணை. பாண்டி நாட்டின் நற்பெருமையையும் தமிழிசையின் உண்மைப் புகழையும் நிலைநிறுத்தத் தாமே துணைபுரிய வேண்டும்" என்று மன்றாடினார்.

அப்போது அந்தி வேளை. தெருவிலே ஒரு கிழவன் சுமக்க முடியாத விறகுச் சுமை யொன்றைச் சுமந்து கொண்டு தள்ளாடித் தள்ளாடி நடந்து கொண்டு சென்றான். அவன் நேராக ஏமநாதன் தங்கியிருந்த வீடுதியின் வாயிற் சென்று அங்குத் தன் தலைச் சுமையை இறக்கி வாயிலில் அமர்ந்தான். அவன் தன் தோளில் கட்டியிருந்த பழைய யாழை யெடுத்து மீட்டிச் சாதாரி என்னும் பண்ணை இனிய குரலில் பாடினான்.

அவ்விசையைக் கேட்டு வானத்திற் பறந்து கொண்டிருந்த பறவைகள் மயங்கி வீழ்ந்தன; தம் கன்றுகளை எண்ணி வீடுகளுக்கு விரைந்து சென்று கொண்டிருந்த கறவைகள் தாம் மேலே செல்ல மாட்டாது ஆங்காங்கே நின்றன. வற்றின மரங்கள் தழைத்தன. ஓடுகிற நீரும் நிலைத்தது. மாந்தர்களுடைய செய்தியைச் சொல்லவும் வேண்டுமோ? ஏமநாதன் வீட்டினுள்ளிருந்து வெளியே வந்தான். ஓர் எளிய விறகு வெட்டி தன் வீட்டு வாயிலில் அமுதத்தையும் தேனையும் பாலையும் குழைத்துப் பாடுவதைக் கண்டு வியப்புற்றான்.

அவன் அம்முதியோனை அணுகி, "ஐயா, தாங்கள் யார்?" என்று வினவினான். அதற்குக் கிழவன், "ஐயா, நான் ஓர் ஏழை விறகு வெட்டி. எனக்குச் சிறிது இசைப் பயித்தியம் உண்டு. அதனில் நல்லறிவு பெறலாமென்று என் ஊர் அரண்மனை வித்துவானிடம் சென்று இசை கற்பிக்க வேண்டினேன். அவரும் என் எளிமையைப் பாராட்டாது அன்புடன் கற்பித்தார்.

ஆனால் நான் தம் இசைப் புலமைக்கு ஏற்றவனல்லன் என்று என்னை விலக்கிவிட்டார். அப்பெருமா

னுடைய சிறந்த அறிவு எங்கே? மூத்துத்திரைத்த என் அறிவீனம் எங்கே? அவர் வீட்டுக் கன்றுக் குட்டியும் என்னைவிட நூறு மடங்கு மேலான இசை யறிவு பெற்றிருக்கிறது. நான் விறகு வெட்டியாவது பிழைக்கலாமென்று அவ்வாறே செய்துவருகிறேன்" என்றான்.

இச் சொற்களைக் கேட்ட வடநாட்டுப் புலவனுக்குக் கிலி பிடித்துக்கொண்டது. தான் ஊரெல்லாம் தன் பெருமையைப் பறையடித்தபின் மறுநாள் பாணபத்திரர்முன் படுதோல்வியுற அவன் மனம் இசையவில்லை. அவன் அன்றிரவு ஒருவருமறியாமல் ஓடிவிடத் தீர்மானித்தான்; அவ்வாறே செய்யவும் செய்தான்.

மறுநாள் அவை கூடிற்று. பாணபத்திரர் பரமேசுவரரைத் தியானித்துக் கொண்டே நடுநடுக்கத்துடன் அவையுள் புகுந்தார். நகர் முழுவதும் இசைப் போட்டியைக் காண அங்கே குழுமிற்று. ஏமநாதன் சென்ற இடமே தெரியவில்லை. பாணபத்திரரே வென்றார்.

**பயிற்சி:**

**சொற்கள்**

| | | | | |
|---|---|---|---|---|
| செங்கோல் | திறமை | ஆசான் | ஏங்கி | வித்துவான் |
| கலை | மெச்சு | விளித்து | அந்தி | சீடர் |
| குழுமி | சிறப்பு | அந்நியன் | யாழ் | கிலி |
| போற்றி | இறுமாப்பு | பணி | பண் | |
| இசை | கலைஞன் | சோதனை | விம்முற்றான் | |
| செங்கோல் செலுத்து | | அளவிலா அன்பு | | எழுந்தருள் |
| கண்ணும் கருத்தும் | | நாப்பறை | | மூத்துத்திரைத்து |

பின் வருவனவற்றைப் பெயராகவும் வினையாகவும் உபயோகி :

**பணி-இசை-குழை-தழை-பண்-கலை.**

இருபொருள்களும் கூறு :

## வினாக்கள்

1. பாணபத்திரனின் இயல்புகள் யாவை ?
2. ஏமநாதன் செருக்குற்றுச் சொன்னவை யாவை?
3. பாணபத்திரன் கடவுளை வேண்டியது என்ன ?
4. கிழவன் தன் வரலாற்றை எப்படிக் கூறினன் ?
5. ஏமநாதன் ஓடக் காரணம் என்ன ?

## இலக்கணம்

1. இரண்டாம் பாராவிலுள்ள, **அடைந்து, கண்டு, மெச்சி, திரிந்து, மிகுந்து** இச்சொற்கள் என்ன சொற்கள் ? அவை கொண்டு முடியும் பிற சொற்கள் யாவை ?

2. **அடைந்த, கண்ட, மெச்சிய, திரிந்த, மிகுந்த** இச்சொற்களை உன் வாக்கியங்களில் அமைத்துக் காட்டு. இவை என்ன எச்சங்கள் ?

## கட்டுரை

1. இசை எவரையும் தன் வசப்படுத்தும். இப்பொருளை விரித்து ஒரு பாரா எழுது.

2. ஏமநாதனைக் காணுமல் மகிழ்ந்த பாணபத்திரர் கடவுள் முன்சென்று தன் நன்றியைச் செலுத்தியதாக ஒரு கட்டுரை கூறு.

# 14. வீர பர்ஸுஸ்

கிரேக்க நாடும் நம் இந்தியாவைப்போல் மிகுந்த பழமை வாய்ந்தது. இங்குள்ள பழம் பெரும் நூல் களைப் போல் அங்கும் உண்டு. இந்தியாவிலிருந்த பெரிய வீரர்களைப் போன்ற வீரர்கள் அங்கும் இருந் தனர். அவர்களுள் ஒருவனுடைய பெயர் பர்ஸூஸ். அவனைப் பற்றிய பல வரலாறுகள் கிரேக்க மொழியில் வழங்குகின்றன. அவற்றிலிருந்து பின்வரும் ஒரு வர லாற்றைக் காண்போம்.

**அக்ரீஷஸ்** என்றொரு மன்னன் இருந்தான். அவன் மிகவும் கொடியவன். அவனுக்கு **தானீ** என்ற ஒரு மகள் பிறந்தாள். ஒரு நாள் அசரீரி ஒன்று வானத்தில் தோன்றி அக்ரீஷஸை நோக்கி, "உன் மகள் வயிற்றில் ஒரு வீரன் பிறப்பான். அவன் புகழ் எல்லா உலகங் களிலும் பரவும்" என்று கூறிற்று. இச்சொற்கள் அரச னுடைய பொறாமையைத் தூண்டின. அவன் கருவுற் றிருந்த தன் மகளை ஒரு பெட்டியில் அடைத்துக் கடலில் மிதக்க விட்டான். அப்பெட்டி கடவுளருளால் யாதொரு கேடும் அடையாமல் ஒரு தீவில் வந்து சேர்ந்தது.

அத்தீவின் அரசன் **பாலிடெக்டஸ்** என்றவன். அவனுடைய தம்பி **டிக்டிஸ்** என்றவன் அப்பெட்டியை எடுத்தான். அவனும் அவன் மனைவியும் **தானீயைத்** தம் வீட்டிற்கு அழைத்துச் சென்று அவளைப் பாது காத்தனர். அங்கே **பர்ஸ-ஒஸ்** பிறந்தான்.

**டிக்டிஸ்** அவனை மிகுந்த கவனத்துடன் வளர்த் தான். வீரனுக்கு வேண்டிய கல்வி யாவும் அவனுக்குக்

கொடுக்கப்பட்டன. அவன் உடலழகும் உளவன்மையும் பெற்ற வீர இளைஞனன். அவன் தன் தாயிடம் அளவு கடந்த அன்பு காட்டி வந்தான்.

ஒரு நாள் அவன் ஒரு கப்பலேறி நெடுந்தூரம் சென்றான். அங்கே ஒரு தீவில் ஒரு கற்பாறை காணப்



பட்டது. **பர்ஸ-ஒஸ்** சற்றுக் களைப்பாற விரும்பி அதன்மீது ஏறி உட்கார்ந்தான். அச்சமயம் அவன்முன் அந்நாட்டுத் தெய்வங்களுள் ஒன்றான **அத்தீனி** என்ற தெய்வம் அங்கே தோன்றி அவனை நோக்கி, "பர்ஸஒஸ்! உன்னை நான் ஒன்று கேட்க விரும்புகிறேன். பன்றிகளைப் போல் உண்டு, உறங்கிச் சுகமாகக் காலங்கழித்து இறக்க விரும்புகிறாயா? அல்லது, உண்மையான ஆண் மகனாகி இன்னல்களைக் கண்டஞ்சாமல் எதையும்

எதிர்த்து நின்று வென்று புகழ்பெற விரும்புகிருயா ?". என்று வினவிற்று.

**பர்ஸ-ஸ்**, "அம்மா! நான் அஞ்சா நெஞ்சனுய், உண்மைக்கும் புகழுக்குமே பாடுபட விரும்புகிறேன்" என்ருன். கடவுள், "அப்படியானல் நீ தொல்லைகள் பலவற்றிற்கும் உள்ளாக வேண்டும். நீ உண்மையாக உழைப்பாயானல் நான் எந்நேரத்தில் வேண்டுமானுலும் வந்து உனக்கு உதவுவேன்" என்று கூறி மறைந்து போயிற்று.

**பர்ஸ-ஸ்** பெரிதும் வியந்தான். தான் கண்ட காட்சியை நினைந்து கொண்டே ஊர் திரும்பினுன். அங்கே அவனுக்குப் பல இன்னல்கள் காத்திருந்தன. அந்நாட்டு அரசன் **பாலிடெக்டஸ்** பர்ஸஉஸிடம் பொருமை கொண்டு அவனையும் அவன் தாயையும் தொலைத்துவிட வழி தேடினுன்.

அவன் **பர்ஸ-ஸை** நோக்கி, "பையா, நீ **மெதூஸா** என்ற அரக்கியின் தலையைக் கொண்டுவர வேண்டும். அவ்வாறு செய்வாயானல் உன்னை மிக மேன்மையாக நடத்துவேன். இல்லாவிடில் உன்னையும் உன் தாயையும் அடிமைகளாக்குவேன்", என்று கூறினுன்.

**மெதூஸா** என்றவள் ஓர் அரக்கி. அவள் கூந்தலைச் சூழ்ந்து ஆயிரம் பாம்புகள் கிடந்தன. அவள் கண்களில் படும் எவரும் கல்லாவர். பர்ஸஉஸ் அவளருகில் கூடச் செல்லவியலாதென்று மன்னன் மதித்தான்.

பர்ஸஉஸ் மனவுறுதியுடன் புறப்பட்டான். அரசன் தன்னைக் கொல்லவே இச்சூழ்ச்சியைச் செய்தானென்

பது அவனுக்கு நன்ருய்த் தெரியும். என்ருலும் தன் உயிருக்குப் பெருந்தீங்கு விளைவதாயினும் துணிந்தே தீருவது என்று அவன் உறுதி கொண்டான். அவன் தன் தெய்வத்தை நினைத்தான்.

அத்தெய்வம் அவன் முன் தோன்றி, " தம்பி, உன் துணிவுக்காக நான் உன்னை மெச்சுகிறேன். நீ நீண்ட தூரம் செல்ல வேண்டும்; உன் முன்னே எவ்வளவோ இன்னல்கள் தோன்றும். அவற்றை யெல்லாம் பொறுத்துக்கொண்டு முன்னேற வேண்டும். மெதூஸா இப்பொழுது நோயினுல் துன்புற்றிருக்கிருள். அவள் கண்முன் நீ பட்டால் கல்லாவாய்.

"நான் உனக்கு ஒரு ஜதை செருப்புக்கள், ஒரு குல்லாய், ஒரு வாள், ஒரு கேடயம், ஓர் ஆட்டுத்தோல் ஆகியவற்றைத் தருகிறேன். செருப்புக்களைக் காலில் போட்டுக்கொண்டால் அவை நீ கருதிய இடத்துக்கு உன்னைத் தூக்கிச் செல்லும். குல்லாயைத் தலையில் அணிந்து கொண்டால் உன்னை ஒருவரும் காணமாட்டார்கள். நீ கேடயத்தால் உன் முகத்தை மறைத்துக் கொண்டு அவள் கழுத்தை வாளால் துணித்துவிடு. அவள் தலையை நான் கொடுத்திருக்கும் ஆட்டுத் தோலில் பொதிந்து கொண்டு திரும்பிவிடு" என்று கூறி அவற்றையும் கொடுத்தாள்.

பர்ஸூஸ் அவற்றைப் பெற்றுக் கொண்டு நேராக அரக்கியிருந்த இடத்திற்குச் சென்று அவள் தலையைக் கொய்து வந்தான். மன்னன் மிகவும் மகிழ்ந்து அவனுக்குப் பல சிறப்புக்களைச் செய்து அவனை மிக்க மரியாதையாக நடத்தி வரலானுன்.

## பயிற்சி :

### சொற்கள்

| | | | |
|---|---|---|---|
| வரலாறு | பாதுகாத்து | தொல்லை | சூழ்ச்சி |
| அசரீரி | கவனம் | தொலை | துணிவு |
| பொறுமை | கற்பாறை | காட்சி | மெச்சினேன் |
| தீவு | இன்னல் | அடிமை | துணிந்துவிடு |

பழம் பெரும்நூல்கள் அளவுகடந்த மனவுறுதி
கருவற்றிருந்த அஞ்சாநெஞ்சன் முன்னேற

இவற்றிற்கு வேற்றுமை காட்டு ;

தோல் × தோள். கொல் × கொள். தாயை × தயை. மேன்மை × மென்மை.

### வினாக்கள்

1. கிரேக் நாடு எங்கே உள்ளது ?
2. அசரீரி என்ன சொல்லிற்று ?
3. அதனால் விளைந்தது என்ன ?
4. அத்தீனி பர்ஸூஸை வினவியது யாது ?
5. மெதூஸா என்பவளின் இயல்புகளைக் கூறுக.
6. கடவுள் பர்ஸூஸுக்கு அளித்தவை யாவை ?
7. அவற்றை எவ்வாறு உபயோகப் படுத்த வேண்டும் ?

### இலக்கணம்

வேற்றுமை உருபுகள் :

நாய், நாயை, நாயால், நாய்க்கு, நாயினும், நாயினுடைய, நாயினிடம், நாயே.

இவை ஒவ்வொன்றுக்கும் உள்ள பொருள் வேற்றுமையைப் பார்.

ஐ, ஆல், கு, இன், உடைய, - இடம் இவை வேற்றுமை உருபுகள்.

நாய் என்பது எழுவாய் வேற்றுமை.

நாயே என்பது விளி வேற்றுமை.

கடைசி இரண்டு பாராக்களிலும் உள்ள வேற்றுமை உருபுகளைக் காட்டு.

## கட்டுரை

1. வீரனுடைய இலக்கணங்களைக் கூறுக.

2. வீரர்களுக்குத் தெய்வம் துணை செய்யும் என்பதற்கு நீ அறிந்த வேறு ஏதேனும் ஒரு வரலாற்றைக் கூறு.

# 15. குறம்



குங்குமச்சந் தனக்குழம்பிற்
குழைத்துத்தரை மெழுகிக்

கோலமிட்டுக் குங்குலியக்
கொழும்புகையும் காட்டிச்

செங்கனக நவமணிகள்
திசை நான்கும் பரப்பித்

தென்மேலை மூலைதனில்
பிள்ளையார் வைத்துப்

பொங்குநறு மலர்கொ(டு)
ஐங்கரர்க்குச் சாத்திப்

புழுகுநெய்வார்த் திடு;
விளக்கு நிறைநாழிவைத்து

மங்கையருக் கரசி யெங்கள்
அங்கயற்கண் அமுதை

மனத்துள்வைத்து நினைத்தகுறி இனிச்சொலக்
கேளம்மே!

முந்நாழி முச்சிறங்கை நெல்லளந்து கொடுவா
முறத்திலொரு படிநெல்லை முன்னேவை அம்மே!

இந்நாழி நெல்லையுமுக் கூறுசெய்தோர் கூற்றை
இரட்டைப்பட எண்ணினபோ
தொற்றைப்பட்ட தம்மே!

உன்னாமுன் வேள்விமலைப் பிள்ளையார் வந்துதித்தார்,
உனக்கினியெண் ணினகரும
மிமைப்பினிற்கை கூடும்;

என்னாணை எங்கள்குலக் கன்னிமா ரறிய
எக்குறிதப் பினுந்தப்பா திக்குறிகாணம்மே!

—குமரகுருபரஸ்வாமிகள்.

## குறிப்புரை

1. கனகம்-பொன். நவமணிகள் - ஒன்பது வகை இரத்தினங்கள். அறுகு - அறுகம் புல். நாழி - ஓர் அளவு. அங்கயர்க்கண் - மீனாட்சி. அமுது - அமுதம் போன்றவள்.

2. சிறங்கை - சிறு + அங்கை, உள்ளங்கை அளவு. ஒற்றைப்பட்டது - ஒரு நெல் மிஞ்சிற்று. உன்னு முன் - நினைப்பதற்கு முன். இமைப்பினில்-கண் கொட்டுவதற்கு முன்.

## கட்டுரை

1. குறி சொல்லுவதற்குச் செய்யப்பட்ட முன் முயற்சிகளை வரிசையாகச் சொல்லு. ஒரு படத்திலும் அமைத்துக் காட்டு.

2. நெல்லைக் கொண்டு நல்ல குறி பார்ப்பது எப்படி?

# 16. மாமல்லபுரம்

தமிழகம் எப்பொழுது உண்டாயிற்று? தமிழ மக்கள் எப்பொழுது தோன்றினர்? தமிழ் மொழி எப்பொழுது பிறந்தது? இக்கேள்விகளுக்கு விடை எவராலும் சொல்ல இயல்வதில்லை. உலகத்தில் மிகப் பழைய நாடுகளுள் தமிழகம் ஒன்று. உலக மக்களுள் மிகப் பழையவர் தமிழர். உலக மொழிகளுள் மிகப் பழையது தமிழ் என்று மட்டும் நாம் கூறலாம்.

இத்தகைய பழமை வாய்ந்த தமிழகத்தின் வரலாறும் மிகப் பழமையானது. இதன் நீண்ட கதையில் எத்தனையோ அரசியல்கள் தோன்றி மறைந்துள்ளன. எத்தனையோ நகரங்கள் தோன்றி மறைந்துள்ளன. சில நகரங்கள் தாம் இருந்த இடங்களே காணமல் போய் விட்டன. அவற்றுள் மண்ணுக்குள் மறைந்துபோனவை சில; கடலில் முழுகிப் போனவை சில. சில நகரங்கள் தம் பண்டைப் பெருமையும் உருவமும் சிதைந்து சிற்றூர்களாக இப்பொழுதுவிளங்குகின்றன. சில அவ்வாறு சிதைந்து போனாலும் தம் பழைய பெருமையைக் காட்டச் சில அறிகுறிகளுடன் தோன்றுகின்றன. அவ்வாறு தோன்றும் இடங்களில் **மாமல்லபுரம்** ஒன்று.

மகாபலிபுரம், மாவலிபுரம், மல்லபுரி, மாமல்லபுரம் என்ற வெவ்வேறு பெயர்களுடன் அழைக்கப்படும் இவ்வூர் செங்கற்பட்டு ஜில்லாவிலே கடற்கரையோரத்தில் இப்பொழுது ஒரு சிற்றூராகக் காணப்படுகிறது. அதனைக்கண்டு வியப்படைந்து, அங்கே

தோன்றும் அருமையான காட்சிகளை ஆவலுடன் படம் பிடித்துச் செல்லும் அந்நிய நாட்டினர் ஆயிரக் கணக்கினராவர். அங்குச் செல்பவர், "மானிடர் அறிவு இவ்வளவு பெரியதோ? அவர்களுடைய கைத்திறன் இவ்வளவு ஆற்றலுடையதோ?" என்று வியவாமல் இரார்.



இவ்வாறு உலக மக்களைப் பிரமிக்கச் செய்யும் பெருமை அங்குள்ள கற்கோயில்களையே சாரும். கடற்கரையோரமாய் பெரிய பாறைகளும் சிறிய குன்றுகளும் அங்கே இருக்கின்றன. அந்த ஊருக்கெனவே அவை அமைந்தன போலவே அவை காணப்படுகின்றன. அவை யாவும் உறுதியான கருங்கல்லாலானவை. ஒரு காலத்தில் அவ்வூர் பெரிய நகரமாகவும் சிறந்த துறைமுகமாகவும் இருந்து வந்தது. அரசர்கள் அங்கிருந்து நாட்டை ஆண்டு வந்தார்கள். ஆகவே அவ்வரசர்களின் கவனம் அப்பாறைகளிற் சென்றன. அவர்கள் அவற்றைச் செதுக்கியும் குடைந்தும் பல

இரதங்களையும், கோவில்களையும், உருவங்களையும் அமைத்தார்கள். பல்லாயிரக் கணக்கான கல் தச்சர்கள் பல்லாண்டுகள் அங்கே உழைத்திருக்க வேண்டும். அவர்களின் உழைப்பின் பயனே இராஜ்யங்கள் அழிந்தும் நகரம் சிதைந்தும் தாம் நிலைகுலையாமல் அறிகுறிகளை அங்கே இன்றும் நிறுத்தி வைத்தது.

கி. பி. ஏழாம் நூற்றாண்டில் காஞ்சிபுரத்தில் பல்லவர்கள் என்ற ஒரு வமிசத்தினர் ஆண்டு வந்தனர்.



அவர்களுள் நரசிம்மவர்மன் என்றவன் ஒருவன். அவனுக்கு மாமல்லன் என்ற ஒரு பெயரும் உண்டு. அவன் காலத்திலேதான் இக்கோயில்களிற் பல குடைந்தெடுக்கப்பட்டன என்று கூறுகிறார்கள். ஆனால், அவ்வரசனுக்கு முன்னும் பின்னும் எழுந்த கல்வேலைகளை நாம் அங்குக் காண்கிறோம்.

மாமல்லபுரத்துக் காட்சிகளை நாம் இரு பிரிவுகளாகப் பிரிக்கலாம். இரதங்கள் அல்லது கற்கோயில்கள், உருவங்கள் என்பன அப்பிரிவுகள் உருவங்களில்

சில சிங்கம், யானை, எருது போன்று பாறைகளைச் செதுக்கித் தனித்தனி உருவங்களாக அமைந்தவை சில; மானிட உருவங்களாகவும் பிற உயிர்ப் பொருள்களின் உருவங்களாகவும் பாறைகளின் ஓரங்களில் ஓவியங்கள் போல் செதுக்கி வைக்கப்பட்டவை பல.

அந்நிய நாட்டினர் மாமல்லபுரத்திற்கு **ஏழு கோயில்கள்** என்ற ஒரு பெயரைக் கொடுத்திருக்கிறார்கள். ஆனால் இப்பொழுது அங்கே காணப்படுவன ஐந்து ரதங்களே. அவை பஞ்ச பாண்டவர்களின் பெயர்களைக்கொண்டு இப்பொழுது விளங்குகின்றன.

அவற்றின் உருவங்களைப் படத்தில் காண்போம். (1) நகுல சகாதேவர் ரதம் (2) திரௌபதி ரதம் (3) அர்ச்சுன ரதம் (4) பீமரதம் (5) தர்மராஜா ரதம் என்பன அவை. இவற்றுள் நகுல சகாதேவர் ரதம் தனித்துநிற்கிறது. மற்றவை ஒரே கல்லில் குடையப்பட்டவை போன்று ஓரிடத்தில் அமைந்துள்ளன. இவை ஒவ்வொன்றையும் விரித்துச் சொல்ல இங்கே இடம் இல்லை. இவை சிறிய சிறிய கோயில்கள். பிற்காலத்தில் தென்னிந்தியக் கோயில்களில் அமைக்கப்பட்ட விக்கிரகம், விமானம், மண்டபம், கோபுரம் என்ற பகுதிகளெல்லாம் இவற்றைப் பார்த்தே எழுந்தன என்பர். இந்த ரதங்களிற் சில முழு வேலைப்பாடும் ஆகாமல் அரைகுறையாகவும் நிற்கின்றன. ஆனால், உருவமற்ற பெரும் பாறைகளைச் செதுக்கியும், வெட்டியும், குடைந்தும் விமானங்கள் முதலியவற்றை அமைத்த சிற்பிகளின் திறத்தை வியவாமல் நாம் என்ன செய்ய இயலும்?

தருமராஜா ரதம் நான்கு மாடிகளைப் பெற்றுள்ளது. இதனில் பல உருவங்கள் காணப்படுகின்றன. இதற்குச் சுற்றுக்களும் உண்டு.

இவ்விரதங்களையன்றி அங்கே நாம் மகிஷாசுர மர்த்தனி மண்டபம், கிருஷ்ண மண்டபம், அர்ச்சுனன் தவம், பஞ்சபாண்டவ மண்டபம், கணேசர் கோயில், வராகசாமி கோயில் முதலிய பலவற்றை நாம் அங்கே காணலாம்.

துர்க்காதேவி மகிஷாசுரனை வதைப்பது உயிரோவியமாகக் காணப்படுகிறது. தேவி சிங்கவாக



னத்தின் மீதேறித் தன் இரு கைகளாலும் போர் புரிகிறாள்; எருமை முகத்தனான அரக்கன் தன் கையில் கதையைக்கொண்டும் பின்வாங்குகிறான். இரு புறத்தினர் படைகளும் போர்புரிகின்றன.

அர்ச்சுனன் தவம் சிற்பவேலைக்குச் சிகரம் வைத்ததுபோல் விளங்குகிறது. இச்சிற்பம் 96 அடி நீளமும் 43 அடி அகலமும் உள்ளது. இதனிற் காணப் படும் உருவங்களுக்குக் கணக்கில்லை. ஒரு பெரிய யானையின் கொம்புகளுக்குக் கீழே ஒரு பூனை தவம் புரிவதையும் அதனைக்கண்டு எலிகள் அச்சமில்லாமல் விளையாடுவதையும் காணும்போது சிற்பியின் நகைச் சுவை நமக்குப் புலனாகிறது.

இன்னும் இவ்வூரில் காணவேண்டிய இடங்கள் பல உண்டு. கடற்கரைக் கோயில் என்பது அவற்றுள் ஒன்று. இது மிக அழகாகக் கட்டப்பட்ட ஒரு கற் கோயில். இதைப் போன்று வேறு சில கோயில்களும் இருந்தனவென்றும் அவை கடலில் முழுகிவிட்டன என்றும் கூறுகிறார்கள். இதனுள் பல கடவுள் உரு வங்கள் காணப்படுகின்றன.

இவ்வளவு அரிய வேலைகளைச் செய்த நம் முன்னோர் களின் பெருமையை நாம் எவ்வாறு கொண்டாடுவோம்? அழகுக்கும் கலைக்குமாகவே அவர்கள் தம் ஆயுள்களை யெல்லாம் ஒப்படைத்தார்கள். அவர்களின் இணை யற்ற சிறப்புக்களை அழிந்தன போக எஞ்சியிருக்கும் சில நினைவுக்குறிகள் நமக்கு அறிவுறுத்துகின்றன. அவையேனும் நீடூழி வாழ்வனவாக.

**பயிற்சி**

| | | | | |
|---|---|---|---|---|
| **பிரமிக்க** | **கவனம்** | **சிதை** | **விமானம்** | **சிற்பி** |
| **சாரும்** | **செதுக்கு** | **வமிசத்தினர்** | **மண்டபம்** | **சுற்று** |
| **கருங்கல்** | **குடை** | **ஓவியம்** | **கோபுரம்** | **ஆயுள்** |
| **வெவ்வேறு** | **கற்கோவில்** | **நிலைகுலையாமல்** | | **இணையற்ற** |
| **கைத்திறன்** | **துறைமுகம்** | **முன்னும்** | **பின்னும்** | **நீடூழி** |

வெட்டு, செதுக்கு, குடை, அடுக்கு - இவற்றின் பொருள் வேற்றுமை என்ன ?

இணையற்ற - இதனைப் போல அற்ற என்றதைப் பின்வரும் அடிச் சொற்களோடு கூட்டுக....

எண் - கணக்கு. எல்லை.

## வினாக்கள்

1. மகாபலிபுரம் எங்கே இருக்கிறது ?
2. அங்குள்ள கோயில்கள் எப்படிக் கட்டப் பட்டுள்ளன ?
3. கோயிலின் பல பகுதிகளையும் கூறுக.
4. பஞ்சபாண்டவர்கள் யாவர் ?
5. மகிஷாசுரன் யார் ? அவன் யாரால் கொல்லப் பட்டான் ?
6. படங்களில் காணும் காட்சிகள் யாவை ?

## இலக்கணம்

**மகாபலிபுரத்தில் நாம் பல கோயில்களைக்** காண்கிறோம். இவ்வாக்கியத்தில் 3 பெயர்ச் சொற்கள் இருக் கின்றன. ஒவ்வொரு பெயர்ச் சொற்கும் வகை, எண், பால், இடம், வேற்றுமை, முடிவு இவற்றைக் கூறு.

## கட்டுரை

நீ மகாபலிபுரம் போய் அங்குள்ள கலைப் பொருள் களைக் கண்டதாக உன் நண்பனுக்கு ஒரு கடிதம் வரைக.

# 17. சநாதன்

இன்றைக்கு ஏறக்குறைய எண்பது ஆண்டுகட்கு முன் ஒரிஸ்ஸாவில் கொடிய பஞ்சமொன்று வந்தது. பன்னிரண்டாண்டுகளுக்குச் சேர்ந்தாற்போல் வானம் ஒருதுளி மழையைக்கூடக் காட்டவில்லை. பயிர் பச்சைகள் எங்குமேயில்லை. மரங்களெல்லாம் தீய்ந்து போயின. மக்கள் வாடிவதங்கினர். இக்காலத்தில்போலப் போக்குவரவு வசதிகள் அக்காலத்தில் இல்லை.

சநாதன் ஒரு சிறிய ஊரில் வசித்து வந்தான். அவனுக்கு வயது பன்னிரண்டே இருக்கும். அவனுக்கொரு தம்பியுமுண்டு. அவன் இரு பெற்றோர்களும் அக் குழந்தைகளைத் தங்கள் கண்கள்போல் பார்த்து வந்தனர். அவர்கள் ஏழைகள். அவ்வூரே ஏழை மக்கள் நிறைந்த ஊர்.

பஞ்சம் சநாதன் ஊரையும் வாட்டத் தொடங்கிற்று. உணவுப் பொருள்கள் கிடைப்பதே அரிதாயிற்று. பொன் கொடுத்தாலும் அரிசி கிடைப்பதில்லை. சநாதன் தாயின் உடலிலிருந்த சில நகைகளும் விலை போயின. வீட்டிலுள்ள பாத்திரம் பண்டங்களும் தொலைந்தன.

சநாதனுடைய தந்தை பட்டினியால் பரிதவிக்கும் மனைவியையும் குழந்தைகளையும் காணமுடியாமல் தத்தளித்தார். "நான் ஒரு யாத்திரைக்குப் போய் வருகிறேன்" என்று சொல்லி அவர் வெளியேறினார். அவர் எங்குச் சென்றாரோ? எவரும் அறியார்.

சநாதன் தன் குடும்பத்தின் தொல்லையைக் காணச் சகியாமல் வீட்டைவிட்டு வெளியே சென்று

மாலையில்தான் திரும்புவான். அவன் தாயினிடம் தான் உண்டுவிட்டதாகக் கூறி இரவில் உறங்குவான். ஊர் புறங்களிலுள்ள வேர்கள் சருகுகள் இவைகளைத் தாய் பொறுக்கிவந்து தானும் உண்டு தன் சிறிய மகனுக்கும் கொடுத்துவந்தாள். சில நாட்களில் அவளால் எழுந்து நடக்கக்கூட முடியவில்லை. சருகு உணவும் நின்றது.

சநாதன் எங்காவது போய் உணவு கொண்டு வருவதென்று வெளியேறினன், பல ஊர்கள் சுற்றி



அலைந்தான். அவனுக்கு ஒரு பிடி உணவு உதவுவார் எவரும் இல்லை. இவ்வாறு மூன்று நாட்கள் அலைந்து மனம் சலித்துக் கால் ஓய்ந்து வீடு திரும்பினன். வரும் வழியில் ஒரு மரத்தடியில் உட்கார்ந்து அயர்ந்து விட்டான்.

அச்சமயம் வழிப்போக்காகச் சென்ற ஒரு கிழவி சநாதன் உறங்கிக் கொண்டிருந்த இடத்திற்கு அருகில்

அடுப்பு மூட்டிச் சோறு சமைத்துக் கொண்டிருந்தாள். சோற்றின் வாசனை சநாதன் நாசியில் ஏறியவுடன் அவன் விழித்தெழுந்தான். அவனால் நடக்கவும் கூட வில்லை. அவன் மெதுவாகக் கிழவியிடம் ஊர்ந்து சென்று தனக்குச் சிறிதளவு சோறு தரும்படி வேண்டி னான். கிழவியும் இரக்கமுற்றுச் சிறிதளவு உணவு கொடுத்தாள்.

அவன் அதை அங்கே உண்ணவில்லை. ஒரு சிறு மூட்டையாக அதனைக் கட்டிக்கொண்டு அவன் தன் வீடு நோக்கிப் புறப்படலானான். நடக்கக்கூடவில்லை; பல்லைக் கடித்துக்கொண்டு நகர்ந்தான். ஊருக்கு வெளி யில் ஓர் ஆலமரத்தினடியில் வந்து சேர்ந்தான். அதன் மேல் அவனால் ஓர் அடிகூட எடுத்துவைக்க முடிய வில்லை. அப்படியே உட்கார்ந்தான்; கண்கள் மூடிக் கொண்டன; மூடினபடியே சாய்ந்தான்.

வெகுநேரம் ஆயிற்று. இருட்டும் வந்தது. அச் சமயம் அவ்வூரார் இருவர் அவ்வழியே வந்தனர். ஆல மரத்தடியில் சநாதன் உறங்குவதைக் கண்டு அவனரு கில் சென்று அவனை எழுப்பினர். அவன் எழவில்லை. அவன் மடியில் கட்டிய சோற்று மூட்டையுடன் உயிர் துறந்தான் என்பதை அவர்கள் உணர்ந்தார்கள்.

### பயிற்சி:

#### சொற்கள்

பஞ்சம் பரிதவிக்கும் வெளியேறினர் குடும்பம் சலித்து
தீய்ந்து தத்தளிக்கும் யாத்திரை சகியாமல் ஓய்ந்து
ஏறக்குறைய போக்குவரவுவசதிகள் விலை போயின
வாடிவதங்கினர் உணவுப் பொருள்கள் வழிப்போக்கு

**விலை** என்ற சொல்லிலிருந்து விலையேற்றம், விலையாற்று, விலைவாசி முதலிய சொற்கள் உண்டாகின்றன.

அதேமாதிரி தலை, கை இச் சொற்களிலிருந்து வரக்கூடிய சொற்களை ஆராய்ந்து எழுதுக.

## வினாக்கள்

1. பஞ்சம் எவ்வாறு உண்டாகிறது?
2. சநாதன் தந்தை எங்கே சென்றார்?
3. சநாதன் தாய் எவ்வாறு பிழைத்து வந்தாள்?

## இலக்கணம்

பின்வரும் வாக்கியங்களிலுள்ள சொற்பிழைகளைத் திருத்துக :—

(1) சுக்குக் கழாயம் வயிருக்கு நல்லது.
(2) சநாதன் ஒரு சிரிய ஊரில் வாழ்ந்தான்.
(3) அவன் வீட்டைவிட்டு வெளியேரினான்.
(4) நீ செய்தது ரொம்வும் சரி.
(5) வரவும் சிலவும் சரியாயின.

## கட்டுரை

சநாதன் தான் இறக்கும்போது என்ன நினைத்திருக்கக்கூடும்?

சநாதன் சாவைக் கேட்ட தாய் என்ன சொல்லி வருந்தியிருப்பாள்?

# 18. ஏழு பெரு விந்தைகள்

இயற்கை விநோதங்கள் உலகத்தில் எத்தனையோ இருக்க, மானிடம் தன் அறிவால் இயற்றிய செயற்கை விநோதங்களும் பல உண்டு. பண்டைக்காலத்து வியக்கத்தக்க மானிடச் செயல்களில் எழில் நிறைந்த ஏழினைச் சுட்டி, 'உலகப் பெருவிந்தைகள்' என்று அக்கால மக்கள் கூறிவந்தனர். ஆனால் அவற்றிற் பெரும்பாலன இன்று அழிந்துவிட்டன. எனினும் மக்களின் கருத்தில் அவற்றின் பெருமை குறையவில்லை. அவற்றைப் பற்றி இங்குச் சிறிது காண்போம்.



மேற்கே பாபிலோனியா என்ற ஒரு நாடு இருக்கிறது. அங்கே இரண்டாயிரத்து அறுநூறு ஆண்டுகளுக்கு முன்னே **நேபுகாத்நேச்சார்** என்ற ஒரு மன்னன் இருந்தான். அவனுடைய மனைவி மலை நாட்டினள். பாபிலோனியா ஒரு சமவெளி நாடு. அவள் மலைவளம் பார்த்துப் பார்த்துப் பழகினவளாகையால், ஒரு குன்று கூடக் காணக் கிடைக்காத பாபிலோனியாவைக் கண்டு சலிப்புற்றாள். அக்குறையை நிரப்ப அரசன் ஒரு மாளிகை பூந்தோட்டம் அவளுக்காக அமைக்கலானான்.

மாடிமேல் மாடியாக அத்தோட்டத்தை முந்நூறு அடி உயரத்தில் அமைத்தான். செடிகள், கொடிகள், மரங்கள் சோலைகள், அருவிகள், ஓடைகள் பலவற்றையும் அவன் அங்கே உண்டு பண்ணினான். பல எந்திரங்களைக்கொண்டு அவற்றிற்கு அவன் நீர் பாய்ச்சச் செய்தான். அரசி அத்தோட்டத்தில் அலைந்து தன் காலத்தைக் கடத்தினாள். இது உலக விந்தைகளில் முதன்மையானது. ஆனால் அது இன்று காணப்படுவதற்கில்லை.



இரண்டாவதாகக் கொண்டாடப்பட்டு வந்தது கிரேக்க நாட்டில் ஒலிம்பியா என்ற இடத்திலமைந்த ஒரு தெய்வ உருவம். அதனைப் பைடியஸ் என்ற சிற்பி அமைத்தார். அதன் உயரம் அறுபது அடி. அது பொன், தந்தம் இவற்றால் செய்யப்பட்டிருந்தது. அதன் கம்பீரமான தோற்றத்தைக் காண உலக மக்கள் அவாவி அவ்வூருக்குச் செல்வர். அதுவும் அழிந்தது.

ஆசியா மைனர் என்ற நாட்டை ஒரு முறை கிரேக்கர்கள் கைப்பற்றினார்கள். அங்கே எபீஸஸ் என்ற ஊரில் அவர்கள் ஒரு கோயில் அமைத்தார்கள்.

அதனை அவர்கள் **ஐந்து** முறை **புதுக்கிப்** பெரிதாக்கினார்கள். இவ்வாறு அக்கோயிலை முற்றிலும் கட்டி முடிக்கப் பல ஆண்டுகள் பிடித்தன. அதன் பெருமை உலகெங்கும் பரந்தது. ஆனால் சில அயல் நாட்டினர் வந்து அவ்வூரைக் கைப்பற்றியபோது அவர்கள் அதனை இடித்துத் தரையோடு தரையாக்கினர். அதனை அதன் சில பகுதிகளை இன்று இலண்டன் காட்சிச் சாலையில் காணலாம். இக்கோயிலின் காலம் ஏறக்குறைய இரண்டாயிரத்து இருநூறு ஆண்டுகளுக்கு முன் என்பர்.



அதே காலத்தில் ஆசியா மைனரின் மற்றொரு பகுதியில் **டிரஸோலஸ்** என்னும் சிற்றரசன் ஆட்சிபுரிந்து வந்தான். அவன் இறந்தபோது அவன் உடலைப் புதைத்த இடத்தில் அவன் மனைவி ஒரு சமாதி எழுப்பினாள். அக்காலத்தில் விளங்கிய பெரிய சிற்பிகள் எல்லோரையும் அவள் அழைத்து அச்சமாதியைக் கட்டி முடித்தாள். அவர்கள் அரசனின் சவக்குழிக்கு மேலே ஒரு நீண்ட சதுரமான மேடையைக் கட்டினார்கள். அதன்மீது வேலைப்பாடமைந்த பல தூண்களை நிறுத்தி, அவற்றின்மீது ஒரு தளம் பரப்பினார்கள். அத்தளத்தின்

பெற்றது. அத்தேரின் தட்டில் அரசன் அரசி இவர் களின் உருவங்கள் வைக்கப்பட்டன. அந்தச் சமாதிக்கு **மாஸோலியம்** என்று பெயரிடப்பட்டது. அதைப் பின்பற்றி கிறிஸ்தவர்கள் இன்றைக்கும் தாம் கட்டும்





சமாதிக் கட்டடத்திற்கு மாஸோலியம் என்ற பெய ரையே இடுகிருர்கள். இது நான்காவது விந்தை. இதுவும் காலத்தால் அழிவுற்றது.

ஐந்தாவது விந்தை ரோட்ஸ் என்னும் தீவில் கட்டப்பட்ட கதிரவனின் உருவம். அது கிரேக்கர் களுடைய வேலேயே. அதன் உயரம் நூறு அடி. செம்பையும் ஈயத்தையும் உருக்கி அவ்வுருவத்தை

முகத்தின் வாயிலில் அவர்கள் வைத்தார்கள். அவ வாறு அவ்வூரைக் கதிரவன் அறுபதாண்டுகளே காத்து வந்தான். அதன் பிறகு அங்கே ஒரு பூகம்பம் உண்டாக அஃது ஆடிச் சரிந்து விழுந்து விட்டது. அதனை மக்கள் துண்டாடி வெண்கல விலக்கு விற்றுக் கொண்டார்கள். என்னே கொடுமை!

எகிப்து தேசத்திலே பாலோஸ் என்ற தீவில் அதன் அரசன் ஒரு கலங்கரை விளக்கம் அமைத்



தான். அது ஐந்நாறு அடி உயரமுள்ளது; அடி முதல் முடிவரையில் சலவைக் கற்களால் அது செய்யப்பட்டிருந்தது. அதன் மீது வெயில் படும்போது ஒரே ஒளி வடிவாய் அது திகழும். இவ்வாறு இரவும் பகலும் ஒளி வீசிக்கொண்டிருந்த அவ்விளக்கும் இன்று இடந்தெரியாமல் போய்விட்டது.

பண்டை உலக அற்புதங்களுள் இன்றும் அழியாமல் நிற்பவை எகிப்திலுள்ள **பிரமிட்** என்ற கட்டடங்களே. சரித்திர காலத்துக்கு முன்னே எகிப்து மன்னர்களை அடக்கம் செய்து அவ்விடங்களின் மேல் கட்டப்பட்டவைகளே இப்பிரமிட்டுக்கள். இறந்து

போன உடல்களை வாசனைப் பொருள்களால் நிரப்பி, அவர்களுக்கு விருப்பமான பொருள்களை அருகில் வைத்துப் புதைப்பார்கள். மனைவியர், ஏவலாளர், தேர் முதலிய வாகனங்கள் குதிரைகள், அணிகலன்கள், உணவுப் பொருள்கள் ஆகிய பலவும் அவர்களுடன் புதைக்கப்படுமாம். இறந்து போனவர் மறு உலகத்தில் அவற்றை யெல்லாம் நுகர்வதற்காகவே அவ்வாறு செய்தனராம்.

இப்பிரமிட்டுக்கள் அடிப்புறம் அகன்று சதுர அளவில் இருக்கும். உச்சிப்புறம் குறுகி முனையாக இருக்கும். இவ்வாறு எகிப்தில் ஏறக்குறைய எழுபது பிரமிட்டுக் கள் காணப்படுகின் றன. அவற்றுள் மிகப் பெரியதன் அடிப் புறம் ஒரு பக்கம் ஒன்றரைக் கல் தூர அளவு நீண்டும், உய ரம் நானூற்றெண்பத் தோரடியும் உள்ளன.



இத்தகைய பிரமிட் டுக்களிற் பல நாலா யிரம் ஆண்டுகளுக்கு முற்பட்டவை என்பர். உலகத்துப் பழம் கட்டடங்களுள் இன்றும் உள்ள இவைகளே மிகச் சிறந்தவை.

இவ்வாறு பழைய விந்தைகளை ஏழென மக்கள் கணக்கிட்டிருந்தாலும் இவற்றைவிட விந்தையானவை இன்னும் எத்தனையோ இருந்து அழிந்து போயிருக்க வேண்டும். புதிய விஞ்ஞான உலகில் காணப்படும் விந்தையும் அளவிலடங்கா. இவை யாவும் மனிதனின் ஆற்றலையும் புலப்படுத்துபவை.

**பயிற்சி :**

**சொற்கள்**

| | | | |
|---|---|---|---|
| **இயற்கை** | **சலிப்புற்ருள்** | **அவாவி** | **தளம்** |
| **செயற்கை** | **எந்திரங்கள்** | **பகைஞர்** | **கதிரவன்** |
| **துண்டாடி** | **அடக்கம்** | **திகழும்** | **உச்சி** |
| **அற்புதம்** | **முனை** | | |
| **வியக்கத்தக்க** | **மலைவளம்** | | **விஞ்ஞான உலகு** |
| **பெரும்பாலான** | **கலங்கரை விளக்கம்** | | **அளவிலடங்கா** |
| **நுகர்தற்குரிய** | | | |

ஆட்சி, கல்வி, காட்சி, தோற்றம்—இவை எவற்றினடியாகப் பிறந்தவை ?

**வினாக்கள்**

1. நேபுகாத் நேச்சர் கட்டிய தோட்டம் எத்தகையது ?
2. எபீஸஸ் ஊர்க்கோயில் எவ்வாறு அழிந்தது ?
3. மாஸோலியம் என்ற பெயர் எவ்வாறு உண்டாயிற்று ?
4. கதிரவன் காத்து வந்த ஊர் எது ?
5. எகிப்தியர் தம் இறந்த மக்களை எவ்வாறு புதைத்து வந்தனர் ?

**இலக்கணம்**

பின்வரும் வாக்கியங்களிலுள்ள இலக்கணப் பிழைகளைத் திருத்துக :

(1) சிற்பிகள் கோயிலைக் கட்டி முடித்தான்.
(2) உலக அற்புதங்கள் ஏழாகும் ; அதாவது.........
(3) அரசா தன் மனைவிக்காக ஒரு தோட்டம் இயற்றினர்.
(4) அரசன் மனைவி ஒரு சமாதி எழுப்பினுள்.

# 19. இறவாதவர் எவர்?

## நாடகம்.

### காட்சி—1

*புத்த பகவான் ஓர் அரச மரத்தடியில் அமர்ந்திருக்கிறார். ஒருத்தி இறந்த தன் மகவுடன் அவரை வந்து காண்கிறாள்.*

*காலம் ; காலை.*

**பெண் :** ஐயா, எனக்கு இந்த மகவு ஒன்றே ஒன்று தான் ஐயா! அநியாயமாய் அஃது நேற்று இரவு இறந்துவிட்டதையா? ஒரு நோயும் அதற்கில்லை, ஐயா.

**புத்தர் :** நான் மிகவும் வருந்துகிறேன். துன்பத்தை ஆற்றிக்கொள். அழாதே?

**பெண் :** நான் எவ்வாறு ஆற்றிக் கொள்வேன்? நான் அநாதை! எனக்கு உதவி யாரும் இல்லையே! இதன் முகத்தைக் கண்டு ஆறுதல் பெறலா மென்றிருந்தேனே! என்ன செய்வேன்?

**புத்தர் :** யார் என்ன செய்ய முடியும்? அவரவர் வினைப்பயனை அவரவர் தாமே நுகரவேண்டும். ஆண்டாண்டு புரண்டாலும் மாண்டார் வருவாரோ?

**பெண் :** தாங்களே இப்படிக் கூறினால் நான் என்ன செய்வேன்! இக்குழந்தையைப் பெற நான் எவ்வளவு நோன்பு நோற்றேன். எத்தனை கோயில்களில் சென்று தவம் கிடந்தேன்! என் தலைவிதி இப்படியா இருக்கும்?

**புத்தர் :** தாயே! வரும் துன்பம் வந்தே தீரும்! அதைத் தடுக்க எவராலும் இயலாது. உன் துன்பம் மிகப் பெரியதே! என்றாலும் என்ன செய்வது? பொறுத்துக்கொள். இறந்த குழந்தைக்குச்



செய்ய வேண்டியதைச் செய். வீட்டுக்குப் போ.

**பெண் :** ஸ்வாமி, தாங்கள் இப்படிச் சொல்லலாகாது. தாங்கள் சாதாரண மானிடர் அல்லர்

தெய்வமே எங்களைக் காக்கத் தங்கள் உருவத்தில் எழுந்தருளியிருக்கிறது. என்னைக் காப்பாற்றுங்கள். என் குழந்தையை எழுப்பித் தாருங்கள். மாட்டீர்களானால் என் உயிரைத் தங்கள் காலடியிலேயே விடுகின்றேன். நான் ஏமாந்து வீடு செல்லேன்.

**புத்தர் :** பெண்ணே ! நான் கூறுவதைக் கவனமாய்க் கேள். நான் தெய்வம் அல்லேன்; உன்னைப்போல ஒரு மானிடனே. தெய்வமே யானாலும் இறந்தவர்களை எழுப்ப முடியாது. பிறப்பதும் சாவதும் உலக இயற்கை. இதைத் தடுப்பவர் எவரும் இலர். ஆகவே, வீணாக வருந்தாதே. போய் வா.

**பெண் :** நீங்கள் என்ன சொன்னாலும் நம்பேன். நீங்கள் என்பால் கருணை கொள்ளவில்லை யென்றுதான் கூறவேண்டும். உங்களால் ஆகாதது ஒன்றுமுண்டோ ? என் பிள்ளையை எழுப்பித்தான் தரவேண்டும்.

**புத்தர் :** நல்லது. நீ மிகுந்த பிடிவாதக்காரியாய் இருக்கின்றாய். சரி, நான் சொல்வதைக்கேள். ஒரு பிடி கடுகு வாங்கி வா. அதை.......

**பெண் :** அப்படிச்சொல்லுங்கள் . ஒரு பிடி என்ன ? ஒரு படி கொண்டு வருகிறேன்.

**புத்தர் :** அம்மா. நான் பேசி முடிப்பதற்குள் நீ பேசுகிறாயே ! எனக்கு ஒரு பிடி கடுகு போதும் ஆனால்..... ..

**பெண் :** ஆனால் என்ன ?

**புத்தர் :** நீ கடுகு வாங்கும் வீட்டில் ஒருவரும் இறந்திருக்கக் கூடாது. அப்படிப் பார்த்து வாங்கி வரவேண்டும். இல்லாவிட்டால் உன் முயற்சி வீணாகும்.

**பெண் :** என் பிள்ளைக்காக நான் எது வேண்டுமானாலும் செய்வேன். எங்குவேண்டுமானாலும் செல்வேன். இதோ ஒரு நொடியில் வந்து விடுகிறேன், ஐயா!

**புத்தர் :** போய் வா.

(பெண் போகிறாள்)

**காட்சி—2**

அப் பெண் அருகிலுள்ள ஊரினுள் புகுந்து வீடு தோறும் கேட்கிறாள்.

காலம்: நடுப்பகல்.

**பெண் :** அம்மா! ஒரு பிடி கடுகு வேண்டுமம்மா! இறந்த என் பிள்ளையை எழுப்பித்தர ஒரு மந்திரவாதி வாங்கி வரச் சொன்னார் அம்மா.

**வீட்டுக்காரி :** ஐயோ பாவம்! இதோ தருகிறேன்!

**பெண் :** ஆனால் உங்கள் வீட்டில் எவரும் இறந்திருக்கக் கூடாது.

**வீட்டுக்காரி :** அதென்ன அம்மா! என் தாய் இறந்து ஒரு மாதங்கூட ஆகவில்லையே.

**பெண் :** அப்படியானால் வேண்டாம். அடுத்த வீடு போகிறேன்.

(அடுத்த வீடு போகிறாள்)

**பெண் :** அம்மா, ஒரு பிடி கடுகு வேண்டும். ஆனால் உங்கள் வீட்டில் ஒருவரும் செத்திருக்கக் கூடாது.

**வீட்டுக்காரி :** இதென்ன விந்தை! என் தகப்பன் இறந்து இரண்டு மாதங்களாயின. குற்றமில்லை யென்றால் தருகிறேன்.

**பெண் :** வேண்டாம், அம்மா.

(அடுத்த வீடு போகிறாள்)

**பெண் :** அம்மா, உங்கள் வீட்டில் யாரும் இறக்க வில்லையே, அம்மா.

**வீட்டுக்காரி :** எங்கள் வீட்டில் தான் சாவு குடிபுகுந் திருக்கிறதே! இந்த ஒரு வருஷத்திற்குள் எத்தனை சாவுகள்! ஏன் என் வயிற்றெரிச்சலை எழுப் புகிறாய்? போ.

(பெண் அடுத்த வீடு போகிறாள்)

**பெண் :** அம்மா, உங்கள் வீட்டில் யாரும் இறவா திருந்தால் ஒரு பிடி கடுகு தாருங்கள். வீடு தோறும் ஏறி ஏறி என் கால்கள் தேய்ந்து போயின! சாகாத வீடே இந்த ஊரில் இல்லையா?

**வீட்டுக்காரி :** நீ என்ன இந்த உலகத்தவளே அல்லவா? உன் வீட்டில் உன் தகப்பன், தாய், மாமன், மாமி, அண்ணன், தம்பி ஒருவரும் சாக வில்லையா? சாவுதான் நம்மோடு பிறந்தது ஆயிற்றே. சாவுக்கு மருந்துண்டோ? அதை நீக்கத்தான் யாராலும் முடியுமா?

**பெண் :** அம்மா, உண்மையை அறிந்தேன். வருத்தப் படாதவர் ஒருவருமில்லை. நான் மட்டும் வருந்துவது ஏனோ? நான் பகவானிடம் இந்தப் பிள்ளையுடன் போகேன். இதைக் கொண்டு போய்ப் புதைத்து விடுகிறேன்.

(போகிறாள்)

## காட்சி—3

*அப்பெண் புத்தபகவானைக் காண்கிறாள்.*
*காலம் : மாலை*

**புத்தர் :** தாயே! குழந்தை எங்கே? கடுகு கிடைத்ததா?

**பெண் :** சுவாமி! அறிவு பெற்றேன். சாவு மக்களுக்கு இயல்பு. சாவில்லாத வீடே உலகில் இல்லை.

**புத்தர் :** பெண்ணே! நீ உண்மையில் அறிவு பெற்றாய். உனக்கு நற்காலம் உண்டாவதாகுக.

**பெண் :** பகவானே! எனக்கு நல் உபதேசம் தர வேண்டும். துக்கமில்லாமல் வாழ வழி என்ன?

**புத்தர் :** வழி எளிது. ஆனால் அதைக் கடைப்பிடிப்பதுதான் அரிது. நீ நல்ல எண்ணமும், நல்ல பேச்சும், நல்ல செயலும் உடையவளாய் இரு. ஒருவருக்கும் தீங்கு நினையாதே. எல்லா உயிர்களிடமும் அன்பாய் இரு. ஒன்றிலும் கெட்ட ஆசை கொள்ளாதே. உன் கடமையைச் செய். உனக்குத் துக்கம் உண்டாகாது.

**பெண் :** ஐயா, என்னால் முடிந்தவற்றைச் செய்வேன். போய்வருகிறேன். வணக்கம்.

(போகிறாள்.)

### பயிற்சி :

### சொற்கள்

| | | | |
|---|---|---|---|
| மகவு | ஆற்றிக்கொள் | ஏமாந்து | பகவான் |
| அநாதை | நுகர | பிடிவாதக்காரி | உபதேசம் |
| ஆறுதல் | நோன்பு | மந்திரவாதி | துக்கம் |
| வினைப்பயனை | | தலைவிதி | வயிற்றெரிச்சல் |
| ஆண்டாண்டு | | காலடி | நற்காலம் |

பின்வரும் கூட்டுச் சொற்களைப் பிரித்தெழுது.

சாவில்லாதது, மற்றொன்று, ஒவ்வொருவர்.

### வினாக்கள்

1. அவள் புத்தரை ஒரு தெய்வமாகக் கருதியது என் ?
2. அதற்கு அவர் சொன்னதென்ன ?
3. கடுகு வாங்கிவர அவர் வைத்த நிபந்தனை எது?

### இலக்கணம்

பின்வரும் வாக்கியங்களில் உரிய இடங்களில் ஒற்றுக்களை இடுக.

1. தாங்கள் இப்படிச் சொல்லலாகாது.
2. இந்தக் குழந்தை இறந்து போயிற்று.
3. தாங்களே இதனை கிளப்பித் தரவேண்டும்.
4. எனக்கு புண்ணியம் இல்லை.
5. அவள் தன் வீடு நோக்கிப் புறப்பட்டாள்.

### கட்டுரை

தாய் பகவானைப் பார்க்கும்போது எவ்வித நிலையில் இருந்தாள் என்பதையும் முடிவில் அவள் எவ்வாறு மாறினாள் என்பதையும் அதற்குக் காரணம் யாது என்பதையும் ஒரு பாராவில் சுருக்கி எழுதுக.

---

# 20. ஆடை

'ஆடை இல்லாதவன் அரை மனிதன்' என்பது ஒரு பழமொழி. மனிதனுக்கு நாகரிகம் தோன்றினது முதல் அவன் ஆடையணிந்து வருகிறான். குளிரிலிருந்தும் வெயிலிலிருந்தும் காப்பதற்குத் தாவரங்களுக்கும், பறவை, விலங்கு, முதலியவற்றிற்கும் இயற்கையிலே உதவிகள் அமைந்திருக்கின்றன. மனிதனுக்கோ அப்படியில்லை. ஆகவே அவன் வெப்ப தட்ப காலங்களில் தன்னைக் காப்பாற்றிக்கொள்ள மேற்போர்வை ஏதோ ஒன்றை நாடவேண்டியதாயிற்று.

முதலில் தழைகள், பட்டைகள், தோல்கள் முதலியன அவனுக்கு ஆடையாக உதவின. பட்டைகளை உரிப்பதிலிருந்து மெல்லிய நார்களின் பயனை அவன் அறிந்து கொண்டான். தோலின் உபயோகத்தை அறிந்ததிலிருந்து அதன்மேலிருக்கும் உரோமத்தின் உபயோகத்தையும் அவன் அறிந்திருக்கவேண்டும். கோரை முதலியவற்றை உரித்தும் அவன் ஆடை பின்னக் கற்றுக்கொண்டான். இவ்வாறு நாளடைவில் அவன் அறிவு வளர வளரப் பருத்தி, பட்டு முதலியவற்றின் உபயோகங்கள் அவனுக்குத் தெரியலாயின.

நமது இந்தியா மிகப் பழங்காலம் முதற்கொண்டு ஆடைக்குப் பெயர் போனதாக இருந்தது. இந்தியாவில் ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன்னே இருந்த நகரங்கள் பல மண்ணுக்குள் புதைந்து போய் விட்டன.

இடங்களை அண்மையில் தோண்டிப் பார்த்தார்கள். அங்கே அக்காலத்து ஆடைகளிற் பல காணப்பட்டன. முன்னொரு பாடத்தில் எகிப்து நாட்டுப் பிரமிட்டுகளைப் பற்றிப் படித்தோமல்லவா? அவற்றுள் புதைக்கப் பட்ட பிணங்களின் உடல்களில் இந்திய ஆடைகள் சுற்றப்பட்டிருக்கின்றனவாம்.



கைத்தறி

மிகப் பழங்காலத்துத் தமிழ் நூல்களிலிருந்து அக்காலத் தமிழருக்கு மிக மெல்லிய ஆடைகளை நெய்யத் தெரிந்திருந்தது என்பதை அறிகிறோம். பாலின் நுரை போன்ற ஆடைகளையும் அவர்கள் அணிந்தார் களென்றும் அவற்றில் பூவேலை செய்யவும் கற்றுக் கொண்டிருந்தார்களென்றும் அந்நூல்களிலிருந்து நாம் தெரிந்துகொள்கிறோம். பட்டு, பருத்தி, உரோமம்

எலி மயிராலும் ஆடை நெய்துவந்தார்களென்பது நமக்குத் தெரிய வருகிறது.

நூல் நூற்றல் பெரும்பாலும், பெண்டிர்களா லேயே நடந்து வந்தது. பருத்தி முதலியவற்ருல் நூற்கப்படுவதும் நூல். கல்வியறிவு முதலிய வற்ருல் இயற்றப்படுவதும் நூல். இவ்வாறு நூல் என்ற சொல்லுக்கு இரு பொருள்கள் அமைந்திருக்கும் நேர்மையை நோக்கும்போது நூல் நூற்கும் தொழி லுக்கு நம் முன்னேர்கள் அளித்திருந்த நுண்மை புலப்படும். இவ்வாறு நம்மவர் ஆடை நெய்து தாம் உடுத்திக் கொண்டதோடு உலகத்திற் பல பகுதி களுக்கும் அவற்றை ஏற்றுமதி செய்து வந்தனர்.

ஆட்டு ரோமத்தையே கண்டு பருத்திச் செடியே காணுத கிரேக்கர் இந்திய ஆடைகளை வாங்கி மகிழ்ந் தனர். அவர்களுடைய பழைய புத்தகமொன்றிலே காணப்படும் ஒரு செய்தி அக் காலத்தில் அவர்கள் இந்தியப் பருத்தியைப் பற்றிக் கொண்டிருந்த எண்ணத்தைக் காட்டுகிறது. "இந்தியாவிலே ஒருவிதக் கம்பளி மயிர் மரத்தில் காய்க்கிறது. அது ஆட்டு ரோமத்தைவிட நுட்பமானது"; "பருத்தி ஓர் ஆட்டுக் குட்டி: அது சுற்றுப் புறங்களிலுள்ள செடிகளைத் தின்றுவிடும்" என்றும் புத்தங்களில் கண்டிருக்கிறது. இவை 2000 ஆண்டுகளுக்கு முன் எழுந்தவை.

பழங்காலத்தில் இவ்வளவு மேன்மையுடன் விளங்கிய நெய்தல் தொழில் ஐரோப்பியர் இந்திய நாட்டை ஆளத்தொடங்கின வரையில் மிக மேன் மையான முறையில் வளர்ந்து வந்தது. ஔரங்கசீப்

மன்னர் ஒரு முறை தம் மகள் ஆடையற்றவளாக இருந்தாளென்று அவளைக் கடிந்து கொண்டனராம்; ஆனால் அவ்வம்மை அப்பொழுது தன் ஆடையைத் தன் உடலைச் சுற்றி எட்டு முறை கட்டிக் கொண்டிருந்ததாக விடையளித்தனளாம். இவ்வளவு மென்மையுடன் நெய்யப் பெற்ற ஆடைகளை ஏறக்குறைய முந்நூறு ஆண்டுகளுக்கு முன் வரையில் நம் நாட்டினர் உபயோகித்து வந்தனர். அத்தொழிலை ஆங்கிலேயர் வேண்டுமென்றே நசுக்கினர். அதனோடு ஐரோப்பாவில்



நெசவு ஆலை - இராட்டினம்

நீராவி கண்டுபிடிக்கப் பெற்று ஆலைத் தொழில்கள் தொடங்கின. பலபேர் கூடிப் பல நாள் செய்ய வேண்டிய தொழிலை ஓர் இயந்திரம் ஒரு நொடியில் செய்வதாயிற்று. அச்சாதனை பெறாத இந்தியர் மேலை நாட்டு ஆலைத் துணிகளோடு போட்டியிட இயலாமல்

பிறகு மெதுவாக இந்திய முதலாளிகளும் ஆலைகளை இந்நாட்டிலேயே நிறுவத் தொடங்கினார்கள். இங்கும் ஆலைகளிலிருந்து துணிகள் வெளிவந்தன. இருந்தாலும் கைத்தொழிலுக்குச் சலுகை இல்லாமலே போயிற்று. நூல் நூற்றுப் பிழைத்து வந்த பல கோடி இந்திய மக்கள் வேலையற்றுப் போயினர்; அதனால் வறுமையும் சோம்பலும் நாட்டில் குடி புகுந்தன.

இக்கொடுமையை நீக்கக் காந்திமகான் கைராட்டினத்தின் மேன்மையையும் கதராடையின் தூய்மையையும் இந்திய மக்களுக்குக் காட்டினார். அவருடைய இச் செயலால் நாம் அடைந்த பெருமைகளைச் சொல்ல வியலாது. இன்று நூல் நூற்றல், ஆடை நெய்தல் ஆகிய தொழில்கள் சிறந்த குடிசைத் தொழில்களாக விளங்குகின்றன. அத்தொழில்களின் மேன்மையால் தான் இனி வருங்கால பாரதத்தின் மேன்மையும் துலங்கக்கூடும்.

**பயிற்சி :**

**சொற்கள்**

**பழமொழி போர்வை உரோமம் நுரை நுண்மை சாதனை**
**நாகரிகம் நாட கோரை நெய் ஏற்றுமதி ராட்டினம்**
**தாவரம் நார் பின்னம் நேர்மை நொடி துலங்க**
**ஆடையணிந்து நாளடைவில் வேலையற்று**
**வெப்பதட்ப காலங்கள் பெயர்போனது**

ஆடை அணிந்தான் என்பதுபோலப் பின் வரும் பெயர்களுக்கு ஏற்ற வினைகளைக் கொடுக்க.

உணவு—
வெற்றிலை—
கிரீடம்—

## வினாக்கள்

1. பல உயிர்ப் பிராணிகள் இயற்கையில் ஆடைகளைப் பெற்றுள்ளன ? இஃது உண்மையா ?

2. மிகப்பழங்காலத்தில் இந்தியா நல்ல ஆடைக்குப் பெயர் போனதாயிருந்தது என்பது எவ்வாறு தெரியும் ?

3. நெய்தல் தொழில் பிற்காலத்தில் நசித்துப் போகக் காரணங்கள் யாவை ?

4. மகாத்மா காந்தி ஆடைத்தொழிலுக்குச் செய்த நன்மை யாது ?

## இலக்கணம்

### புள்ளிகளும் குறிகளும்.

பின்வரும் பாராவில் உரிய இடங்களில் புள்ளிகளையும் குறிகளையும் இடுக.

அவை. , ; ? ! " "

ஒரு நாள் ஒருத்தி புத்தர் பெருமானை அணுகி ஐயா நான் அருமையாகப் பெற்ற குழந்தை இறந்து போயிற்று அதனை உயிர்ப்பித்துத் தரவேண்டும் என்று கேட்டாள் அதற்கு அவர் உலகத்திற் பிறந்தவர் யாவரும் சாகத்தான் வேண்டும் சாவாதவர் எவரும் இல்லை நீ வருந்திப் பயனில்லை போய் வா என்றார் அதற்கு அவள் எம்பெருமானே நீர் கடவுளல்லவோ உம்மால் ஆகாதது ஏதேனுமுண்டோ என்றாள்

## கட்டுரை

உன் ஊரில் ஆண்டொன்றுக்கு எவ்வளவு ரூபா மதிப்புள்ள ஆடைகள் செலவாகின்றன ? அவை எங்கெங்கிருந்து வருகின்றன ? ஆராய்ந்து ஒரு கட்டுரை எழுது.

# 21. வழிகாட்டி

## ஒரு நாடகம்

ஒரு பாலை நில நடுவில் யானை குதிரை முதலிய வற்றுடன் ஒருவர் பல்லக்கில் வருகிறார். ஓர் ஏழைப் புலவர் அவரைச் சந்திக்கிறார். காலம் பிற்பகல்.

**புலவர் :** தேர், புரவி, யானை முதலிய படைகளுடன் வரும் மன்ன! யான் ஒரு புலவன். தாம் யாரோ? தம்முடைய நாடு ஏதோ?

**வந்தவர் :** ஐய! என்னை மன்னன் என்றோ மதித்தீர்?

**புல :** பின்பு யாரென மதிப்பது! மன்னர்க்குரிய குறிகளெல்லாம் உம்மிடம் காணப்பெறுகின்றன.



நால்வகைப் படைகளும் முன்னே நடக்க, பல்லக்கில் வீற்றிருக்கும் தம்மை யான் வேறு எவரென எண்ணுவேன்!

வங் : மன்னவர்க்கு முடியிராதோ ?

புல : ஆம் மறந்தேன், தாங்கள் யாரோ ?

வங் : ஐய, நாமிருவரும் ஒத்த குடியினரே !

புல : வெகு நன்று. நான் பாணன். என் வற்றிய உடலையும், குழிந்த கண்களையும் கண்டால் என் வறுமையும் எவர்க்கும் புலனாகும். நீரோ பூரித்த உடலும் ஒளி வீசும் கண்களும் கொண்டு விளங்குகிறீர். என் உடலை மூடிக்கொண்டிருக்கும் ஆடையோ இந்திரன் கண்களைப்போல் ஆயிரம் பொத்தல்களுடையதாயிருக்கிறது. உம்முடைய உடலோ பொன்னுடையால் போர்த்தப் பெற்றிருக்கிறது. என் கழுத்தில் தொங்குவதோ ஒரு காசும் பெறாத தாவடம்; நும் மார்பிலோ பொன்னரிமாலை பொலிகின்றது. நாமிருவரும் ஒத்த குடியினராவது எப்படி ?

வங் : ஐய ! இதோ என் கையிலிருப்பதைக் காணுங்கள்.

புல : (வியப்புடன்) யாழ் !

வங் : ஆம். நானும் ஒரு பாணனே ! நேற்று உம்மினும் வறுமையுற்றிருந்தேன்.

புல : பிறகு ?

வங் : என் உடல் உம்மிலும் மெலிவுற்றிருந்தது.

புல : உம்...

வங் : என் ஆடையில் தையல் நூலையன்றி ஆடையின் இழையே இல்லாமலிருந்தது.

புல : அவையெல்லாம் என்னவாயின ?

வங் : பறந்து போயின.

**புல :** எனக்கொன்றும் விளங்கவில்லையே! ஐயா!

**வங் :** சொல்லுகிறேன், கேளுங்கள். என் நற்காலம் ஒரு வள்ளலை நான் காண உதவியது.

**புல :** அவர் யாது செய்தார்?

**வங் :** நானெப்படிச் சொல்வேன். நான் அவர் அரண்மனை வாயிலிற் சென்றவுடன் வாயில் காவற்காரன் என்னைத் தடை செய்யவில்லை. அனல் நான் அங்கேயே நின்றுகொண்டு என் யாழை மீட்டி ஒரு பண் பாடினேன்.

**புல :** அப்போது!

**வங் :** அரண்மனையில் உள்ளிருந்து ஒரு குரிசில் வெளியே வந்தான். அவன் தோற்றம் ஆண் சிங்கத்தின் தோற்றமாயிருந்தது. ஆனல் அவன் கண்களில் கருணை ததும்பிற்று. அவன் ஒரு பெண் யானை போல் நடந்து வந்து என் கைகளைத் தன் கைகளாற் பிடித்து என்னை உள்ளே அழைத்துச் சென்ருன்; அங்கே எனக்குச் செய்த நன்மைகளை நான் என்ன என்பேன்! என் கிழிசல் துணிகளை நீக்கிப் பொன்னுடைகளை அணிவித்தான். அமுதம் போன்ற இனிய உணவைப் பொற் கிண்ணங்களில் என் முன் வைத்து என்னை உண்பித்தான்; இனிய சொற்களைக் கூறினன். பிறகு இவ்வரிசைகளை யெல்லாம் கொடுத்து என்னை விடுத்தான்.

**புல :** இப்படியும் ஒருவர் இருக்கிருரா? பழமரத்தைத் நாடி அலையும் பறவைபோல் திரிகிறேன்; அப் புண்ணியவான் யாரென்று கூறலாமோ?

**வங் :** அவன் **வாணபூபதி** என்ற பெயரையுடையவன். அவன் **சூறைநகர்க்கு** இறைவன். அவ்வூரும் சேய்மையிலில்லை. இந்த வழியே நேராகச் சென்றால் அவ்வூரை இன்று மாலைக்குள் அடையலாம்.

**புல :** அவன் இல்லத்திற்கு அடையாளமுண்டோ?

**வங் :** அது எளிய இல்லமன்று. மாடம், மாளிகை, கூடம், கோபுரம் என்ற பகுதிகளையுடையது. அரண்மனை வாயில், ஊரில் நுழைந்தவுடனேயே தோன்றும். அம் மனைவாசலில் ஓர் அத்திமரம், ஒரு வேம்புமரம், ஒரு பனைமரம் நிற்கின்றன. சில அரசுகளும் அங்கே காணலாம். இவையே குறிகள்.

**புல :** பாணர் பெரும! நும் சொற்களின் பொருள்களை உணர்கிறேன். நீர் கூறியவை மரப் பெயர்கள் அல்ல. ஆத்தி சோழர்க்கு அடையாளப்பூ; வேம்பு பாண்டியர்க்கு உரியது. பனை சேரரைச் சார்ந்தது. ஆகவே வாணபூபதி வாயிலில் சோழ, பாண்டிய, சேர மன்னர்கள் நிற்பார்கள் என்று அறிகிறேன். அரசும் அத்திகளும் சிற்றரசர்களையும் அவர்களைச் சுமந்து வந்த யானைகளையும் சுட்டுகின்றன. இவ்வாறு பேரரசர்களும் சிற்றரசர்களும் வாயிலில் காத்து நிற்கப் பூபதி வாழ்கிறான் என்பதை அறிந்து கொண்டேன். அவ்வள்ளலை இன்றே போய்க் காண்பேன். என் வறுமை தீர்ப்பேன். ஐய! நும் அன்புடைமையை மறவேன். வணக்கம்.

(இருவரும் போகிறார்கள்)

## பயிற்சி:

### சொற்கள்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| பாலை | முடி | பூரித்த | தாவாடம் | தடை | வரிசை |
| புரவி | குடி | இந்திரன் | பொன்னரிமாலை | பண் | சேய்மை |
| படை | பாணன் | பொத்தல் | இழை | குரிசில் | கூடம் |

2. எதிர்ச் சொற்கள் கூறுக: அண்மை, உண்மை, அல்ல, நன்மை, வறுமை.

3. இரு பொருள்கள் கூறுக:— அரசு, அத்தி, திரி, இழை, மதி.

### கேள்விகள்

(1) நால்வகைப் படைகள் யாவை?

(2) ஏழைப் புலவன் கோலம் எவ்வாறிருந்தது?

(3) வந்தவன் தோற்றம் எவ்வாறிருந்தது?

(4) அவனுக்கு வாணபூபதி செய்த உபசாரங்கள் யாவை?

(5) பூபதியின் அரண்மனை எவ்வாறிருந்தது?

(6) மரப் பெயர்களால் மூவேந்தரைக் குறித்தது எங்ஙனம்?

### கட்டுரை

பாணன் தான் கண்ட பாலைவன நிகழ்ச்சியைத் தன் மனைவிக்குக் கூறினான் என்று எண்ணிக்கொண்டு அவன் என்ன கூறியிருப்பான் என்று சொல்லுக.

# 22. கடிதங்கள்

## 1

ப. கணபதி
அமைச்சர்
தமிழ் இலக்கியக் கழகம்.

குமர குருபரர் தேவாரக் கல்விச்சாலை,
ஸ்ரீ வைகுண்டம்,
1—9—51.

புகை வண்டி நிலையத் தலைவர் அவர்கள்,
திருநெல்வேலி சந்திப்பு,
திருநெல்வேலி.

ஐயா,

எங்கள் கழக உறுப்பினர் ஐம்பதின்மரும், எங்கள் ஆசிரியர் இருவரும் திருநெல்வேலி வண்டி நிலையத்திலிருந்து நிகழும் செப்டம்பர் மீ ௬வ வியாழக்கிழமை சென்னைக்குச் செல்வதாக இருக்கிறோம். அன்று, திருநெல்வேலியிலிருந்து புறப்படும் சென்னைத் தபால் வண்டியில் எங்கள் ஐம்பத்திருவர்க்கும் இடம் ஒதுக்கி வைத்து உதவ வேண்டுகிறேன். அவ்வாறு செய்வதற்கேற்றவாறு *வழிச் சீட்டுப் பணமும் கட்டணமும் இக்கடிதம் கொண்டுவருபவரிடம் கொடுத்திருக்கிறேன். அன்புகூர்ந்து உதவுக.

இங்ஙனம்,
தங்கள் அன்பன்,
**ப. கணபதி.**
அமைச்சர் தமிழ் இலக்கியக் கழகம்.

## 2

பெ. மாணிக்கம்,
திரு. பெரியசாமி மகன்,
நெசவுத் தொழில்.

50, மாசி வீதி,
மதுரை,
3—9—51.

தலைமை ஆசிரியர்,
கைத்தொழிற் பள்ளிக்கூடம்,
மதுரை.

ஐயா,

தங்கள் பள்ளிக்கூடத்தில் தொழிலாளிகளின் பிள்ளைகளுக்கு இனமாகத் தொழிற் கல்வி கற்றுக் கொடுப்பதாகப் பத்திரிகைகளிற் படித்தேன்.

நான் வழிவழியாக வரும் ஒரு நெசவுத் தொழிலாளியின் மகன். நான் ஐந்தாவது வகுப்புவரையில் படித்திருக்கிறேன். ஒழிந்த வேளைகளில் நான் என் தந்தைக்கு அவருடைய தறித்தொழிலில் உதவுவது உண்டு. நாங்கள் மிக்க வறியவர்களாகையால் பணம் செலவிட்டு என்னைப் படிக்க வைக்க என் தந்தையால் முடியவில்லை.

எனக்கு நல்ல உடல் வலிவும் கைத்திறனும் உண்டு என்பதைத் தங்களுக்குக் காட்ட இரு நற் சாட்சிப் பத்திரங்கள் இதனுடன் அனுப்பியுள்ளேன். தாங்கள் அன்பு கூர்ந்து என்னைத் தங்கள் பள்ளிக் கூடத்தில் சம்பளமில்லாமல் சேர்த்துக்கொள்ள வேண்டுகிறேன்.

தங்கள் பள்ளிக்கூட விதிகளுக்கு எக்காலத்திலும் உள்ளடங்கி நடப்பேனென்றும் என்னால் முடிந்தவரை

யில் உழைத்து நற்பெயரெடுக்க முயல்வேனென்றும் உறுதி கூறுகிறேன்.

இங்ஙனம்,

அடக்கம்-2.

தங்கள் பணிவுள்ள,

**பெ. மாணிக்கம்.**

இவை காரியக் கடிதமும் விண்ணப்பமும் ஆகும். இத்தகைய கடிதங்களில் நட்புக்கோ அன்புக்கோ இடமில்லை. ஆனால் மரியாதை குறையலாகாது. இக் கடிதங்களில் சொல்ல வேண்டியவற்றைச் சுருக்க மாகவும், தெளிவாகவும் முழுமையாகவும் எழுத வேண்டும். எழுதுகிறவர் முகவரி, எழுதும் நாள் முதலியவை தெளிவுபட எழுதவேண்டும்.

பயிற்சி :

பின் வரும் பொருள்களைக் கொண்டு கடிதங்கள் வரைக.

(1) உன் கல்விச்சாலை ஆண்டு விழாவுக்குத் தலைமை தாங்கும்படி ஒரு பெரிய மனிதருக்கு.

(2) ஒரு கடிகாரம் திருட்டுப் போனதாகப் போலீஸ் இன்ஸ்பெக்டருக்கு.

(3) கேட்டபடி பொருள்களை அனுப்பவில்லையென்று ஒரு கடைக்காரருக்கு.

# 23. தியாகம்

ஏறக்குறைய ஐம்பதாண்டுகளுக்கு முன்னே அமெரிக்காவில் மஞ்சள் காய்ச்சல் என்ற கொடிய நோயொன்று தோன்றி மக்களை ஆயிரக்கணக்கில் மடியச் செய்து வந்தது. அக்கண்டத்தை யொட்டிய மேற்கு இந்திய தீவுகளுள் ஒன்றான கியூபா என்ற தீவில் அமெரிக்கர்களுக்கும் அத்தீவினர்க்கும் பெரும் போரொன்று நிகழ்ந்தபோது, மடிந்தவர்களைக் காட்டிலும் இந்நோயால் மடிந்தவர்களே அதிகமாயினர்.

அமெரிக்கப் படையில் டாக்டர் ரீட் என்ற மருத்துவ நிபுணரொருவர் இருந்தார். இந்த நோய்க்குக் காரணம் யாது என்று அறிய அவர் அரும்பாடு பட்டார். கொசுகுகளே இதற்குக் காரணமாகுமென்றும், அவை ஒரு நோயாளியைக் கடித்து அவரிடமிருந்து நோயை எல்லோருக்கும் பரப்பிவிடுகின்றனவென்றும் அவர் ஊகித்தார். ஆனால் அது உண்மையா என்று நேரடியாகச் சோதிக்க அவருக்கு வாய்ப்புக் கிடைக்கவில்லை.

ஆகவே, அவர் தம் காரியாலயத்தின் முன்பு ஒரு விளம்பரத்தை எழுதினார். அதனில், "மிக மிகக் கொடிய சோதனை ஒன்றிற்கு இரண்டு ஆட்கள் வேண்டும். ஒவ்வொருவருக்கும் மூந்நூறு டாலர் இனமாகக் கொடுக்கப்படும்" என்று கண்டிருந்தது.

விளம்பரம் போட்ட ஐந்து நிமிடங்களில் இரண்டு போர்வீரர்கள் அவரை வந்து கண்டுகொண்டனர். அவர்களுள் பின் வருமாறு பேச்சு நடந்தது.

**டாக்டர் :** நீங்கள் இருவரும் விரும்புவதென்ன ?

**இருவர் :** தங்கள் விளம்பரம் கண்டு வந்தோம்.

**டாக்டர் :** நல்லது. நான் சொல்வதைக் கவனமாய்க் கேளுங்கள். இம்மஞ்சள் நோய் கொசுகுகளால் பரவுகிறதென்ற ஐயமொன்று எனக்கு உண்டாகியிருக்கிறது. அஃது உண்மையென்று சோதனையால் தெரியுமானால் அந்நோயைத் தடுக்க வழி கண்டு பிடித்தாக முடியும். அதனால் பலபேர் சாவதைத் தடுக்கலாம். அதற்காக நோயாளியைக் கடித்த கொசுகுகளை நோயில்லாத இருவர் மீது விடுத்து ஆராயவேண்டும். இவ்வாபத்தான சோதனைக்கு நீங்கள் இணங்குகிறீர்களா?



**இருவரும் :** ஆம்.

**டாக்டர் :** நன்றாக ஆராய்ந்து சொல்லுங்கள். உங்களைக் கொசுகுகள் கடிக்கவுடன் கடுமையான

காய்ச்சல் உண்டாகும். தாங்கமுடியாத தலைவலி தோன்றும். கருப்பாக வாந்தி செய்வீர்கள். நீங்கள் பிழைப்பீர்களென்பதற்கு உத்தரவாதம் இல்லை.

**இருவரும் :** நாங்கள் இணங்குகிறோம்.

**டாக்டர் :** அரசியலார் உங்களில் ஒவ்வொருவருக்கும் முந்நூறு டாலர்கள் அளிப்பார்கள்.

**இருவரும் :** ஐயா, நாங்கள் பணத்துக்காக வரவில்லை.

**டாக்டர் :** பணம் வேண்டாமென்று யாரேனும் சொல்வார்களா?

**இருவரும் :** நாங்கள் இறப்பதனாலும் உலகம் நன்மை பெறட்டும் என்ற எண்ணத்திற்காக வந்தோமே யன்றி, பண ஆசைகொண்டு நாங்கள் தங்களிடம் வரவில்லை. தயைசெய்து எங்களை ஏற்றுக்கொள்ளுங்கள்.

இச்சொற்களைக் கேட்டவுடன் டாக்டர் ரீடுக்கு உண்டான வியப்புக்கும் மகிழ்ச்சிக்கும் அளவேயில்லை. அவர் தம் தொப்பின்மீது கையை உயர்த்தி, "ஐயா நீங்களே சான்றோர்கள்! நீங்களே மனிதர்கள்" என்றார்.

அன்றே அப் போர்வீரர்கள்மீது நோயாளியைக் கடித்த கொசுகுகள் விடப்பட்டன. மருத்துவர் கூறியபடி ஐந்தாவது நாள் அவர்களுக்குக் காய்ச்சல் உண்டாயிற்று. அவர்கள் சிறிதேனும் மனந் தளரவில்லை. கடவுளருளால் அவர்களும் நோயினின்று பிழைத்

மஞ்சள் காய்ச்சலின் காரணம் கண்டுபிடிக்கப் பட்டது. கொசுகுகள் உண்டாகும் இடங்களெல்லாம் தூர்க்கப்பட்டன. ஒவ்வொருவரும் கொசுகுவலை வைத்துக்கொள்ள வேண்டுமென்று கட்டாயப்படுத்தப் பட்டனர். மஞ்சள் காய்ச்சல் நாட்டை விட்டே ஓடி விட்டது.

இவ்வாறு அஃது ஓடக் காரணமாயிருந்தவர் அன்று தம் உயிரைக் கொடுக்கத் துணிந்த இரு வீர ஆடவர்களே.

பயிற்சி :

சொற்கள்

| கண்டம் | இணங்கு | நோய் |
|---|---|---|
| ஊசி | சான்றோர் | வாந்தி |

வினக்கள்

1. மஞ்சள் காய்ச்சல் எதனல் உண்டாவது ?
2. நோயாளிகள் எவ்வாறு துன்பப்படுவர் ?
3. போர்வீரர் ஏன் முன் வந்தனர் ?
4. அவர்களுடைய உதவியால் உலகம் பெற்ற நன்மை யாது ?

கட்டுரை

நீங்கள் அருகிலுள்ள ஏதேனும் ஒரு மருத்துவச் சாலையைப் பார்த்து அங்குக் காண்பவற்றை 2 பக்கங்களில் எழுதுக.

# 24. நாட்டு வாழ்த்து



வாழிய செந்தமிழ் ; வாழ்க நற்றமிழர் ;
வாழிய பாரத மணித்திரு நாடு.
இன்றெமை வருத்தும் இன்னல்கள் மாய்க ;
நன்மை வந்தெய்துக ; தீதெலாம் நலிக.
அறம் வளர்ந்திடுக ; மறம்மடி வுறுக.
ஆரிய நாட்டினர் ஆண்மையோ டியற்றும்
சீரிய முயற்சிகள் சிறந்துமிக் கோங்குக.
நந்தே யத்தினர் நாடொறும் உயர்க.
வந்தே மாதரம்! வந்தே மாதரம்!

# செய்யுட் பகுதி

## 1

### ஔவையார் அருளிச்செய்த

# நல்வழி

பாலுந் தெளிதேனும் பாகும் பருப்புமிவை
நாலுங் கலந்துனக்கு நான் தருவேன்—கோலஞ்செய்
துங்கக் கரிமுகத்துத் தூமணியே நீயெனக்குச்
சங்கத் தமிழ் மூன்றுந் தா. 1

சாதி யிரண்டொழிய வேறில்லை சாற்றுங்கால்
நீதி வழுவா நெறிமுறையின்—மேதினியில்
இட்டார் பெரியோர் இடாதார் இழிகுலத்தோர்
பட்டாங்கி லுள்ள படி. 2

வருந்தி யழைத்தாலும் வாராதன வாரா
பொருந்துவன போமினென்றாற் போகா—இருந்தேங்கி
நெஞ்சம் புண்ணாகி நெடுந்தூரந் தானினைந்து
துஞ்சுவதே மாந்தர் தொழில். 3

உள்ள தொழிய வொருவர்க் கொருவர்சுகம்
கொள்ளக் கிடையா குவலயத்தில்—வெள்ளக்
கடலோடி மீண்டு கரையேறி னாலென்
உடலோடு வாழு முயிர்க்கு. 4

ஆற்றுப் பெருக்கற் றடிசுடுமந் நாளுமவ்வா று
ஊற்றுப் பெருக்கா லுலகூட்டும்—ஏற்றவர்க்கு
நல்லகுடிப் பிறந்தார் நல்கூர்ந்தா ரானாலும்

ஆண்டாண்டு தோறும் அழுது புரண்டாலும்
மாண்டார் வருவரோ மாநிலத்தீர்?—வேண்டா
நமக்குமது வழியே நாம்போ மளவும்
எமக்கென்னென் றிட்டுண் டிரும். 6

ஒருநாளுணவை ஒழியென்று லொழியாய்
இருநாளைக் கேலென்று லேலாய்—ஒரு நாளும்
என்னே வறியா யிடும்பைகூ ரென்வயிறே!
உன்னோடு வாழ்த லரிது. 7

ஆற்றங் கரையின் மரமு மரசறிய
வீற்றிருந்த வாழ்வும் விழுமன்றே—ஏற்றம்
உழுதுண்டு வாழ்வதற் கொப்பில்லை கண்டீர்
பழுதுண்டு வேறோர் பணிக்கு. 8

பிச்சைக்கு மூத்த குடிவாழ்க்கை பேசுங்கால்
இச்சைபல சொல்லி யிடித்துண்கை—சீச்சீ!
வயிறு வளர்க்கைக்கு மான மழியா
துயிர்விடுகை சால வுறும். 9

செய்தீ வினையிருக்கத் தெய்வத்தை நொந்தக்கால்
எய்த வருமோ இருநிதியம்—வையத்
தறும்பாவ மென்னவறிந் தன்றிடார்க் கின்று
வெறும்பானை பொங்குமோ மேல். 10

பெற்றார் பிறந்தார் பெருநாட்டார் பேருலகில்
உற்றா ருகந்தா ரெனவேண்டா—மற்றோர்
இரணங் கொடுத்தா லிடுவ ரிடாரே

சேவித்துஞ் சென்றிரந்தும் தெண்ணீர்க் கடல்கடந்தும்
பாவித்தும் பாராண்டும் பாட்டிசைத்தும்—போவிப்பம்
பாழினுடம்பை வயிற்றின் கொடுமையால்
நாழி யரிசிக்கே நாம். 12

நீரு நிழலு நிலம்பொதியு நெற்கட்டும்
பேரும் புகழும் பெருவாழ்வும்—ஊரும்
வருந்திருவும் வாழ்நாளும் வஞ்சமிலார்க் கென்றும்
தருஞ்சிவந்த தாமரை யாடாள். 13

பாடுபட்டுத் தேடிப் பணத்தைப் புதைத்து வைத்துக்
கேடுகெட்ட மானிடரே கேளுங்கள்—கூடுவிட்டிங்
காவிதான் போயினபின் யாரே யனுபவிப்பார்
பாவிகா ளந்தப் பணம். 14

வேதாளஞ் சேருமே வெள்ளெருக்குப் பூக்குமே
பாதாள மூலி படருமே—மூதேவி
சென்றிருந்து வாழ்வளே சேடன் குடிபுகுமே
மன்றோரஞ் சொன்னார் மனை. 15

ஆன முதலி லதிகஞ் செலவானால்
மான மழிந்து மதிகெட்டுப்—போனதிசை
எல்லார்க்குங் கள்ளனாய் யேழ்பிறப்புந் தீயனாய்
நல்லார்க்கும் பொல்லனா நாடு. 16

ஒன்றை நினைக்கி னதுவொழிந்திட் டொன்றாகும்
அன்றியது வரினும் வந்தெய் தும்—ஒன்றை
நினையாத முன்வந்து நிற்பினும் நிற்கும்
எனையாளு மீசன் செயல். 17

உண்பது நாழி யுடுப்பது நான்கு முழம்
எண்பது கோடிநினைந் தெண்ணுவன-கண்புதைந்த
மாந்தர் குடிவாழ்க்கை மண்ணின் கலம்போலச்
சாந்தனையுஞ் சஞ்சல மேதான். 18

மரம்பழுத்தால் வௌவாலை வாவென்று கூவி
இரந்தழைப்பார் யாவரு மங்கில்லை—சுரந்தமுதம்
கற்றாதரல் போல் கரவா தளிப்பரேல்
உற்றா ருலகத் தவர். 19

இழுக்குடைய பாட்டிற் கிசை நன்று; சால
ஒழுக்கம் உயர்குலத்தி னன்று;—வழுக்குடைய
வீரத்தி னன்று விடாநோய்; பழிக்கஞ்சாத்
தாரத்தி னன்று தனி. 20

ஆறிடு மேடு மடுவு போலாஞ் செல்வம்
மாறிடு மேறிடு மாநிலத்தீர்—சோறிடும்
தண்ணீரும் வாரும் தருமமே சார்பாக
உண்ணீர்மை வீறும் உயர்ந்து. 21

வெட்டெனவை மெத்தெனவை வெல்லாவாம் வேழத்தின்
பட்டுருவும் கோல்பஞ்சிற் பாயாது—நெட்டிருப்புப்
பாரைக்கு நெக்குவிடாப் பாறை பசுமரத்தின்
வேருக்கு நெக்கு விடும். 22

## குறிப்புரை

1. கோலஞ்செய் - அழகைச் செய்கின்ற; துங்கம் - பரிசுத்தமான; கரிமுகத்து - யானை முகத்தை உடைய; தூ - பரிசுத்தமான; மணியே - மணிபோல்பவனே (விநாய

கனே); சங்கத்தார் ஆராய்ந்த தமிழ்; தமிழ் மூன்றும் - தமிழின் மூன்று பகுதிகளாக இயல், இசை, நாடகம் என்ற மூன்றையும்.

2. சாற்றுங்கால் - சொல்லுமிடத்து; நெறி - வழி; மேதினியில் - பூமியில்; பட்டாங்கு - உண்மை நூல்.

3. பொருந்துவன - வரத்தருவன; துஞ்சுவது - இறப்பது.

4. குவலயத்தில் - பூமியில்.

5. ஏற்றவர்க்கு - யாசித்தவருக்கு, நல்கூர்ந்தார் - ஏழையர்; இசைந்து-மனமொப்பி.

7. இடும்பைகூர்-துன்பம் நிறைந்த.

8. பணிக்கு-வேலைக்கு.

9. சால உறும்-மிகவும் பொருந்தும்.

10. எய்த - அடைய; இருநிதியம் - மிகுந்த செல்வம்; வையத்து - பூமியிலே; பாவம் அறும் - பாவம் ஒழிக்கத் தகுந்தது.

11. உகந்தார் - சிநேகிதர்.

12. சிவந்த தாமரையாள் தான் - லக்ஷ்மி.

13. கூடு - உடல். ஆவி - உயிர்.

15. பாதாள மூலி - ஒரு கொடி; சேடன் - பாம்பு. மன்று - நியாய சபையில். ஓரம் - பக்ஷபாதமான வார்த்தைகளை.

18. மண்ணின் கலம் - மண்பானை; சாந்தனையும் - சாகுமளவும்.

19. அமுதம் - பால். கற்றா - கன்றையுடைய பசு; கரவாது - ஒளிக்காமல்; உற்றார் - உறவினர்.

20. இழுக்கு - குற்றம். வழுக்கு - குற்றம். தாரம் - மனைவி.

21. மாறிடும் ஏறிடும் - மாறும் ஏறும்; உள்நீர்மை - உளத்தின் தன்மை; வீறும் - வளரும்.

22. நெட்டிருப்புப்பாரை - நீண்ட இரும்புப்பாரை; நெக்கு விடா - பிளவுபடாத; பாறை-கற்பறை.

42. துரை - தாவி.

# 2

## சில பொறுக்கு மணிகள்

### தேவாரம்

*மாசில் வீணையும் மாலை மதியமும்*
*வீசு தென்றலும் வீங்கிள வேனிலும்*
*மூசு வண்டறை பொய்கையும் போன்றதே*
*ஈச னெந்தை யிணையடி நிழலே.* 1

—திருநாவுக்கரசர்.

### இனியவை

*இனியது கேட்கின் தனிநெடு வேலோய்!*
*இனிது, இனிது, ஏகாந்தம் இனிது;*
*அதனினும் இனிது ஆதியைத் தொழுதல்;*
*அதனினும் இனிது ஆதியைச் சேர்தல்;*
*அதனினும் இனிது அறிவுள் ளோரைக்*
*கனவிலும் நனவிலும் காண்பது தானே.* 2

—ஔவையார்.

### இடைச்சி மோரைப் பாடியது

காரென்று பேர்படைத்தாய் ககனத் துறும்போது
நீரென்று பேர்படைத்தாய் நீணிலத்தில்
உற்றதற்பின்
வாரொன்று மெல்லிடையார் ஆய்ச்சியர்கை
வந்ததற்பின்
மோரென்று பேர்படைத்தாய் முப்பேரும்
பெற்றாயே 3

## ஒரு குதிரையைப் பழித்தது

முன்னே கடிவாளம் மூன்றுபேர் தொட்டிழுக்கப்
பின்னே யிருந்திரண்டு பேர்தள்ள—எந்நேரம்
வேகம்போம் வாயான் விகடராமன் குதிரை
மாதம் போம் காத வழி. 4

—காளமேகர்.

இருந்தமிழே உன்னால் இருந்தேன் இமையோர்
விருந்தமிழ்தம் என்றாலும் வேண்டேன்.

—தமிழ்விடு தூது.

### குறிப்புரை

1. மாசு இல்-குற்றமில்லாத. வீங்கு - பொங்குகிற. மூசு - ஒலிக்கும். பொய்கை - குளம். இணை அடி - இரு பாதங்கள்.

2. ஏகாந்தம் - தனிமை. ஆதி - கடவுள். நனவு - விழிப்பு.

3. கார் - மேகம். ககனம் - வானம். நீள்நிலம் - நீண்ட நிலம்.

4. இமையோர் - தேவர்.